உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க.

355

# சுலோக பஞ்சக விஷயம்

இது

திருநெல்வேலிப்பேட்டை

ஸ்ரீ மெய்கண்டான் நிலய தருமகருத்தராகிய

ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளையால்

இயற்றப்பட்டுப்

பலவான்குடியிலும் திட்டையிலும்

"சிவநேசன்" பிரசில்

அச்சானது.

1938

=

இதன் விலை ரூபா ஒன்று.

உ

# முன்னுரை.

ஸ்ரீசிவபிரானே முழுமுதற் கடவுள், ஏனையதேவரெல்லாம் அவருக்கடிமைகளே யென்னுமிதுவொன்றே சைவ சமயத்தின் தலையாய கொள்கை. இவ்வுண்மையை விளக்கவந்த சிறந்த நூற்களுள் இச் 'சுலோக பஞ்சக'மும் ஒன்று. இந்நூற்கு ஒரு விரிந்த விஷயம் எழுதவேண்டுமென்று என்னைப் பல நண்பர் தூண்டினர். சித்தாந்த சாத்திரங்களுக்கு உரையெழுதிக்கொண்டிருந்த நான் அச்செயலைச் சிலகாலம் நிறுத்திச் 'சுலோக பஞ்சக விஷயம்' என்னும் இந்நூலையாக்கி அவரைத் திருப்தி செய்தேன். இதன் முதற்பாதி பொன்னேரி, பிரமஸ்ரீ தி. மா. ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்களின் பெயரால் வெளிவந்தது. பிற்பாதியை நானே கையெழுத்திட்டுப் பிரசுரகருத்தருக்கு அனுப்பவேண்டியதாயிற்று.

இந்த 'விஷய'த்தில் எடுத்தாளப்பட்ட பிரமாணங்கள் பல. அவற்றுட் பெரும்பாலன இருக்காதி வேதங்களிலும், கும்பகோணம் காலேஜ் ரிடயர்ட் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ ம. வீ. இராமாநுஜாசாரியரின் முதற் பதிப்பாகிய வியாஸபாரதத் தமிழ் வசன புத்தகத்திலும், முடும்பை நம்பிவம்ஸஜராகிய திருவஹீந்திரபுரம் வீராகவாசார்யரவர்களால் பரிசோதிக்கப்பட்டு மை. ராமாநுஜாசார்யரவர்களது ராமப்ரஸந்நோதய அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பட்டுக் கரவருஷம் சைத்ர மாஸம் வெளியான கூரேச விஜயம் மூலமும் உரையும் என்னுஞ் சுவடியிலும் உள்ளன. பூர்வபட்சத்துக்கும் சித்தாந்தத்துக்கும் வேதங்கள் பொது. பாரதமும் அன்னதே. ஆயினும் பூர்வபட்சம் அதைத் தனக்கேயுரியதெனச் சொல்லி மகிழும். கூரேசவிஜயம் பூர்வபட்சத்துக்கே யுரியது. இவைகளைக்கொண்டு இச்சுலோக பஞ்சகம் விளக்கப்பட்டிருப்பது இவ்விஷயத்தின் ஒரு விசேஷம். இன்னுஞ் சில பிரமாணங்கள் நாட்சென்று எனக்குக் கிடைத்தன. அவை அடுத்தபதிப்பில் சேர்க்கவேண்டிய இடங்களிற்சேர்க்கப்பட்டுவெளிவருதல் கூடும்.

இந்நூலைச் 'சிவநேசன்' பத்திரிகையுடன் புத்தகவடிவில் அச்சிட்டுதவிய அப்பத்திரிகையின் அதிபர் ஸ்ரீமாந், ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியாரவர்களுக்கு நான் உளங்கொண்டு செய்யும் வந்தனம்உரியதாகுக.

வெகுதானியஹு
ஐப்பசிமீ கசுஉ
1—11—1938.

ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை,
நூலாசிரியன்.

# மதிப்புரை.

"எண்ணரிய பிறவிதனின் மானுடப்பிறவிதா னியாதினும் அரிதரிதுகாண்" என்றார் சித்தாந்தச் செல்வராகிய நந்தாயுமான சுவாமிகள். எதனாலெனவாராயின், உலகுஉயிர் கடவுள் எனும் முப் பொருளுண்மை யுணர்ந்து உயிர்க்குயிராய்விளங்கும் இறைவனோடு இரண்டறக்கலந் தின்புறுதற்கேற்ற மேலான அறிவுடன் கூடியது இம்மனிதப் பிறவியேயாமென்பது தெளிவாம். உலகாயதன் முத லாய பலவேறு சமயிகளும் தத்தம் மதங்களே யமைவதாக வரற்றி டலேவர். மெய்யறிவுடையோரே சைவசமயம் தலே சிறந்ததெனப் போற்றுவர். சைவமாம் சமயஞ்சாரும் ஊழ்பெறலரிது னும் அரி தாம். உயரிய சைவசமய மாண்பினே உணர்ந்து உலக முதல்வராய், உலகாதீதராய், தேவதேவராய், மகாதேவராய் விளங்குகின்றவர் சிவபரம் பொருளே; அவர் ஆண்டவர்; நாமெல்லாம் அவர் அடிமை களென்பது தெளிந்துய்தலே மக்கட் பிறவியின் பெரும்பயனாகும்.

சிவ பரத்துவத்தைச் செவ்விதின் விளக்கும் சைவ நூல்கள் பல உளவாயினும், கஞ்சனூரிலே மதுருதனசாரிய ரென்னும் [illegible] பிராமணருக்குப்புத்திராயவதரித்துச்சிவசாந்நித்தியராய்த் தகழ்ந்து பழுக்கக் காய்ச்சிய இருப்புப்படியேறிச் சிவபரத்துவ நிரு பணஞ்செய்த அரதத்தசிவாசாரிய சுவாமிகள் வடமொழியில் அரு ளிய "சுலோக பஞ்சக விஷயம்" ஹரிஹர தார தம்மியங்களைத் தெளிவாக விளக்கி "யாவர்க்குமேலாம் அளவிலாச் சீருடையான்" சிவபெருமானே யென்னும் உண்மையை வஜ்ஜிரத் தம்பமாக நிலே நாட்டுவதாகும்.

இதனை, ஸ்ரீசிவஞானசுவாமிகள்தென்றமிழில் மொழிபெயர்த் தருளினர். இருபத்திரண்டு காரணங்களோடு சிவத்தினுண்மையைத் தெளிவிக்கும் இச்சுலோக பஞ்சக விஷயத்திற்குத் திருநெல்வேலிப் பேட்டை ஸ்ரீ மெய்கண்டான் நிலய தர்மகருத்தாகிய, சைவத் திருவாளர், ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை யவர்கள் பொருள் விரித்து விளக்கி 'சிவநேசன்' திங்கட்டாளுடன் சேர்த்து வெளியிட்டார் கள். திருவருளால் அது முற்றும் நிறைவேறி இற்றைநாள் நூற்று நாற்பது பக்கங்களுடன் புத்தகவடிவாகி மிளிர்கின்றது. இவ் [illegible] ட்ட வேதாபநிடதம், வியாசபாரதம், கூரேசவிஜயம் ஆதிய பல நூல்களிலிருந்து பலபிரமாணங்களைஎடுத் தாண்டுள்ளார்கள். இந்நூல் சிவநேசச் செல்வர்களும் செந்தமிழ்ச் செல்வர்களும் விரும்பிப் படித்துச் சிவபரத்துவ வுண்மை தெளிதற் கேற்ற பெற்றியுடைய தாகும்.

இந்நூலே மிகமுயன்றுவெளியிட்ட நூலாசிரியரின் ஊக்கமும் சைவ மெய்யன்பும் ஆற்றலின் திறமும் போற்றுந்தகையவாம். கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடையராகிய இந்நூலாசிரியரைச் சைவவுலகமும் தமிழுலகமும் போற்றி அவர்களை யூக்குவித்து [illegible] வெளியிடச் செய்யவேண்டுமெனத் திரு வருளைப் பிரார்த்திக்கின்றனன்.

'சிவநேசன்' இராமசாமி.

சிவமயம்.

# சுலோக பஞ்சக விஷயம்.



## சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு.

1. உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலின்
2. தசரதன் மதலை தாபித் தேத்தலின்
3. கண்ணன் கயிலையில் கண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலின்
4. தனுதா விழியுட னொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின்
5. ஆங்கவற் கிரங்கி யாழியீந் தருடலின்
6. ஐங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலின்
7. அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலின்
8. தென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின்
9. அவுணர் முப்புர மழியவில் வாங்கலின்
10. தக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலின்
11. தனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்
12. மாறுட மடங்கலை வலிதபக் கோறலின்
13. மாயோன் மகடூஉ வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்
14. ஆழ்கடல் வரைப்பி னன்றோ ரநேகர்
அன்புமீ தூர வருச்சனை யாற்றலின்
15. நான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின்
16. ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்
17. இருவரு மன்னமு மேனமு மாகி
அடிமுடி தேட வழற்பிழம் பாகலின்
18. பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையின்
19. கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பில்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
20. முப்புர மிறப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலின்
21. அயன்சிர மாலை யளவில வணிதலின்
22. ஞானமும் வீடும் பேணினர்க் குதவலின்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள்
உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன்
என்பது தெளிக வியல்புணர்ந் தோரே.

இப்பெயர்ப்பைத் தயாசிந்துவாகிய ஸ்ரீமத் சிவஞானசுவாமிகள் அருளினர்கள். இதற்கு மூலகிரந்தம் வடமொழியிலுள்ளது. அதன் பெயர் சுலோக பஞ்சகம் என்பது. அதனை யருளிய மகான் ஸ்ரீமத் ஹரதத்தாசாரிய சுவாமிகள். அவர்கள் காலம் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முந்தியது. அக்கிரந்தத்தின் உற்பத்தி அதியற்புத மானது. அதனை ஸ்ரீமத் ஹரதத்தப் பிரபுவின் சரிதத்தைப் படித் தறிக. அக்கிரந்தம் வடிவிற் சிறியதாயினும் அதன் அர்த்தவைபவம் சாலவும் விசாலமானது. ஸ்ரீ சிவபிரானுரே பரமாத்மா வென்பதை அது இருபத்திரண்டு காரணங்களால் வஜ்ரலேபமாக நாட்டும். அக் காரணங்கள் ஆன்மகோடிகளை ஸ்ரீ பரசிவப் பிரபுவின் பாதார விந் தங்களில் பக்தி பண்ண வைத்து ஆனந்திக்கச் செய்யும் மாகாத்மிய முடையன. ஆகையால் யாம் அவைகளை ஒவ்வொன்ருக எடுத்துப் பிரபல பிரமாண சகிதம் விளக்கிவருவாம்.

---

## 1. காயத்ரீ வல்லபத்வாத்.

உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலின்.

பொருள்:— மந்திரங்களுக்குள் மேலான காயத்ரி மந்திரத்துக் குச் சொந்தமான அர்த்தமாய் விளங்கலானும் என்பது.

காயத்ரி மந்திரம்:-'தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி தியோயோந: ப்ரசோதயாத்' என்பது.

அதன்பதவுரை:— ய:—எவன், ந:—நம்முடைய, திய:— புத்திகளை, ப்ர—நன்ருக, சோதயாத்—நடத்துவானே, தத்—அந்த, ஸவிது:—சூரியனிலுள்ள, பர்க:—பர்க்கனுகிய, தேவஸ்ய—தேவ னுடைய, வரேண்யம்—மகிமையை, தீமஹி—தியானிப்போம் என்பது.

அதன் கருத்து:— சூரியனிடத்தில் ஒரு தேவனிருக்கிருன். அவன் பெயர் பர்க்கன். அப்பர்க்கதேவனை நாம் தியானிக்க வேண்டும் என்பது.

பங்கஜம் என்னும் பெயரையுடைய வல்லிக்குப் பங்கஜவல்லி என்ற பெயர்வந்தபடி, பர்க்கன் என்னும் பெயரையுடைய தேவ னுக்குப் பர்க்கதேவன் என்ற பெயர் வந்தது.

இதனுல் காயத்திரியின் உபாசியப்பொருள் ஸவிதாவுமன்று தேவனுமன்று பர்க்கனேயாம் என்பது காண்க.

இனி, ஆராயவேண்டுவது அந்தப் பர்க்கப்பெயர் சிவபிரானுக் குரியதா பிறதேவர்க்குரியதா என்பது. வேதத்தின் ஞானபாக மாகிய உபநிஷத்துக்களே அவ்வாராய்ச்சியைச் செய்துள்ளன. மைத்

திராயண் காயத்திரி மந்திரத்தை மூன்று பாதங்களாகப் பிரித்து உரை செய்துவிட்டு அதிலுள்ள பர்க்கப் பெயருக்கும் 'அதபர்க... பர்காக்ய...பர்கா இதி ருத்ரோ ப்ரஹ்ம வாதிந:' என்ற பகுதியில் பர்க்கன் என்னும் பெயருடையான் உருத்திரன் எனப் பிரமவாதிகள் சொல்லுகிறார்கள் என்று தெளிவாக உரைவகுத்திருக்கிறது. 'பர்காக்ய' என்று பர்க்கநாமம் சிவபிரானுக்கு ரூடிப்பெயராகவே அதில் வருதல் காண்க. அப்பால் அவ்வுப நிஷத்தூத்தானே 'அத பர்க இதி பாஸயதீமாந் லோகாந் இதி ரஞ்சயதீமாநி பூதாநி கச்சத இதி கச்சத் யஸ்மிந் நாகச்சத் யஸ்மா இமா: ப்ரஜாஸ்தஸ்மாத் பாரகத்வாத் பர்க:' (இனிப் பர்க்க னென்றது ப—உலகங்களை விளக்கி நிற்போன். ர—எல்லாவுயிர்களுக்கும் பிரீதிவிளைப்போன். க—எல்லாவுயிர்களையும் அடக்கி வெளிப்படுத்துவோன். ஆகலின் பர்க்கனெனப்படுகிறான்) என்றுகூறி அப்பர்க்கச் சொல் அவனுக்கான யோகத்தையும் விளக்கிற்று. அதனால் அப்பெயர் அவனுக்கு யோகரூடியு மாதலறிக. வடமொழி வியாகரணம் பெரும்பாலும் யோகரூடியையும் ரூடியென்றே சொல்லிவிடும். திரிபுராதாபிநி 'பர: சிவ:.......பர்க உச்யதே' (பரசிவன் பர்க்கனென்று சொல்லப்படுகிறான்), 'பர்கோதேவஸ்ய தீத்.......சிவாத்மாக்ஷரம் கண்யதே' ('பர்கோதேவஸ்ய என்ற வாக்கியத்தால் சிவனை ஆத்மாவாகவுடைய அக்ஷரம் சொல்லப்படுகிறது) என்கிறது. வடமொழி நிகண்டுகளும் அன்னசுருதிகளை யநுசரித்தே 'பர்கஸ் த்ரயம்பக:' 'ஹர: ஸ்மரஹரோ பர்க:' எனப் பர்க்கச்சொல்லைச் சிவநாமமாகப் படித்தன.

பங்கஜம் என்பதை யோகப் பெயரளவில் வைத்துக்கொண்டால் அது தாமரையையும் சேற்றில் முளைத்த மற்றச் செடிகளையுங் காட்டி விப்சரிக்கும். ஆனால் அதனை ரூடிப் பெயராக வைத்துக் கொண்டால் அது தாமரையை மட்டுங் காட்டும். ஆகையால் யோகப் பெயரினும் ரூடிப் பெயரே தன் பொருளை உள்ளபடி காட்டவல்லதாதல் காண்க. மீமாம்ஸகரும் அதனாற்றான் (யோகாத் ரூடிர்பலியஸீ, ரூடிர் யோக மபஹரதி) யோகத்தினும் ரூடியே வலியுடையதெனக் கொண்டனர். அப்படியே காயத்திரிமாதாவும் தன்தியேயவஸ்து அதுவோ இதுவோவெனப் பிறர் மயங்குமாறு யோகப் பெயர்களைத் தாங்காமல் சிவபிரானே அவ்வஸ்து என்று மந்த மதிகளுக்கும் விளங்கும்படி அவனுக்கே ரூடியாகிய பர்க்க நாமத்தைத் தன்மாட்டுத் தாங்கித் தன் பாதி விரத்தியத்தைக் காத்துக்கொள்வாளாயினளென்க.

நிற்க, ப்ருஹதாரண்யகம் 'யஸ்யாதித்யச் சரீரம் ய ஆதித்ய மந்தரோயமயத்யேஷத ஆத்மாந்தர் யாம்யம்ருத:'(எவனுக்குஆதித்யன் சரீரம் எவன் ஆதித்தியனுக்குள்ளிருந்து அவனை யியக்குகின்

ருன் அவனே ஆத்மாவின் அந்தர்யாமி, அமிர்தன்) என்றும், முண்டகம் 'ஸூர்யத்வாரேண விரஜா: ப்ரயாந்தி யத்ராம்ருதஸ்ஸ புருஷோஹ யவ்ய யாத்மா' (பாபஹீனர்கள் சூரியதேஜோ மார்க்கத்தால் அமிர்தனும் அவ்யயனுமான புருஷன் இருக்குமிடத்தை யடைவார்கள்) என்றும் கூறி ஆதித்தியனுக்குள்ளிருப்பவனே அமிர்தன் புருஷன் என்று அழைக்கின்றன. ஜாபாலம் 'சதருத்ரியேணேத்யேதாந்யேவ ஹவா அம்ருதஸ்ய நாமாநி' (சதருத்ரீயத்திலடங்கிய பெயர்கள் அமிர்தனுடைய நாமதேயங்கள்) என்றும், கௌஷீதகிப்ராஹ்மணம் 'தேநாம்ருதத்வஸ்யேசாநம்' சுவேதாசுவதரம் 'உதாம்ருதத்வஸ்யேசாந: (அமிர்தத் தன்மையை யளிப்பவன் ஈசானன்) என்றும், தைத்திரியம் 'அம்ருதோ ஹிரண்மய:'(அமிர்தனவான் பொன்வண்ணன்) என்றும் கூறியதால் அந்த அமிர்தநாமமும், நாரதபரிவ்ராஜகம் 'புருஷோத்தமோத்தமம் ஸர்வேச்வரம்... அவ்யயம்'(அவ்யயனும் புருஷோத்தமோத்தமனும்சர்வேசுவரனே) என்று கூறியதால் அந்தப் புருஷநாமமும் சிவநாமங்களேயாமென்பது சித்தமாயிற்று. இன்னும் பாசுபதப்ராஹ்மம் 'அந்தராதித்யே ஜ்யோதி: ஸ்வரூபோ ஹம்ஸ:' (ஆதித்தியாந்தர்யாமியாகிய ஜோதி ஹம்ஸஸ்வரூபம்) என்று கூறிய ஹம்ஸத்தை ப்ரஹ்மவித் 'ஹம்ஸ ஏவபரோ ருத்ரோ' (ஹம்ஸமாவான் ருத்ரனே) 'ஹம்ஸ ஏவ மஹேச்வர:' (ஹம்சமாவான் மகேசுவரனே) என்று விளக்கியது. அதனாலும் ஆதித்தியனிடத்திலிருக்கும் அந்தர்ஜோதி சிவபிரானேயாதல் வெளி. மேலும் ஆதித்தியன் சிவபிரானது அஷ்டமூர்த்தங்களுள் ஒன்று. அதில் அவன் உக்ரன் என்னும் பெயரால் விளங்குகிறான். 'ஸூர்யஸ் யோக்ர:' என்பது வேதம். 'அருக்கனவானரனுருவல்லனோ' என்பது தேவாரம்.

ஆதித்தியாந்தரியாமி பொன்வண்ணனென்பதை 'ஸூர்யோந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:' (சூரிய மண்டலத்தின் அதிதெய்வமாகிய ஆதித்தியனுக்குஅந்தரியாமி ஹிரண்மய புருஷர்) என்ற ந்ருஸிம்ஹ பூர்வதாபினியாலும், 'ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:' (ஆதித்தியாந்தரியாமி ஹிரண்மய புருஷர்) என்ற நாராயணம் மைத்திராயண் சாந்தோக்யங்களாலும் அறிக. கைவல்யம் 'அஹமீசோ ஹிரண்மயோஹம்' (ஈசனும் நானே பொன்வண்ணனும் நானே. இது சிவன் சொல்) என்றதாலும், முண்டகம் 'ருக்ம வர்ணம் கர்த்தார மீசம்' (பொன் வண்ணரும் கர்த்தரும் ஈசரும்) என்றதாலும், நாராயணம் 'நமோ ஹிரண்ய பாஹவே ஹிரண்ய வர்ணாய ஹிரண்ய ரூபாய ஹிரண்ய பதயேம்பிகாபதய உமாபதய பசுபதயே நமோநம:, (பொற்றோளருக்குப், பொன்வண்ணருக்குப், பொன்னுருவினருக்குப், பொன்னுக்கிறைவருக்கு, அம்பிகாபதிக்கு, உமாபதிக்கு, பசுபதிக்கு நமஸ்காரம்நமஸ்காரம்) என்றதாலும், பஸ்மஜாபாலம் 'ஹிரண்யபாஹும்

ஹிரண்யரூபம் ஹிரண்யவர்ணம் ஹிரண்யநிதி மத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீத மேக மாசாஸ்யம் பகவந்தம் சிவம்' (பொற்றோளரும் பொன்னுருவினரும் பொன் வண்ணரும் பொன்னிதியும் இரண்டற்றவரும் சதுர்த்த சப்தவாச்சியரும் பிரம விஷ்ணு ருத்ரர்களைக் கடந்தவரும் உபாஸிக்கத் தக்க ஏகரும் ஷாட்குண்ய சம்பந்நருமான சிவபெருமான்) என்றதாலும் சிவபிரானே அந்த ஹிரண்மய புருஷர் என்பது நன்கு விளங்கும். 'பொன்னார் மேனியனே' 'பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி......... ஈசனுக்கே' என்ற தமிழ் வேதமுங் காண்க.

'ஸ ஆதித்யோ விஷ்ணுச் சேச்வரச்ச' என்பது ப்ரஹ்ம வாக்கியம். இதிலுள்ள விஷ்ணுச்சேச்வர: என்ற தொடரை இருவகையாகப் பொருள் கொள்ளலாம். விஷ்ணுவை யோகப் பெயராக வைத்து வியாபியாகிய ஈசுவரன் எனச் சிவபரமாக வுரைத்தல் ஒன்று. ஈசுவரனை யோகப் பெயராக வைத்து ஐசுவரியத்தையுடையவனாகிய விஷ்ணுவென விஷ்ணு பரமாக வுரைத்தல் இன்னொன்று. இவ்வாக்கியம் துரிய வஸ்துவைப் பிரஸ்தாபிக்கின்றது. வேதமுழுவதும் துரிய வஸ்துவைச்சிவநாமங்களாலேயேவிளக்கும்; விஷ்ணு நாமங்களால் விளக்கவேமாட்டாது. அத்தகைய மற்ற வாக்கியங்களுக்கேற்பவே இந்த வாக்கியத்தையும்பொருள்கொள்ள வேண்டும். கொள்ளின் இதற்கு முதல்வகைப் பொருளே சிறக்கும். ஆகையால் இந்த வாக்கியத்தாலும் ஆதித்தியனிடம் வியாபித்திருப்பவன் சிவபிரானே யென்பது தெளிவு.

சிலர் 'அப்பர்க்கச்சொல் பர்க: என்பதன்று பர்கஸ் என்பதேயாம். பர்க: என்பதற்குத்தான் ருத்ரன் என்று அர்த்தம். பர்கஸ் என்பதற்கு அவ்வர்த்தமில்லை, தேஜஸ் என்பதே அர்த்தம்' என்று கூறி அதை யோகப்பெயராக்கித் தம்மனம் போன தெய்வங்களுக்கெல்லாங் கொண்டுபோய் ஒட்டவைத்துக் காயத்திரி தேவியின் பாதிவிரத்தியத்தைக் கெடுக்கப் பார்ப்பர். சிவபிரானது ரூடிநாமங்களில் அன்னார் கொண்ட அசூயையே அதற்குக்காரணம். மேலும் வேத வேதாந்தங்களில் வருந் தெய்வப் பெயர்களை யோகப் பெயர்களாக வைத்தே விவகரிப்பதாயின் எந்தத் தெய்வத்துக்கும் எந்தப் பெயருஞ் சொந்தமாகாதென்பதை அவரறியார். ஆகலின் மேற்காட்டிய சுருதிப் பிரமாணங்களை விரோதித்து நிற்கும் அவருரைகளனைத்தையும் பிரமவாதிகளல்லாத பாஷாண்ட வாதிகள் செய்த துர்த்த வியாக்கியானங்களென்று ஒதுக்கி விடுவதே வைதிகோத்தமர்க்குக் கடனாகும். பர்க்கச் சொல் பர்கஸ் அன்று என்பதை ஸ்ரீமத் ஹரதத்தாசாரிய சுவாமிகளின் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தானு மறிக.

இனிப், பர்க்கச் சொல்லைப் பர்க்கஸ் என்று வைத்துக்கொண்டால் அப்போதும் அது சிவதேஜஸையே சுட்டும். பிரத்தியக்ஷ தேஜஸ்களுள் ஆதித்திய தேஜஸே அதியுத்கிருஷ்டமானது. சிவ தேஜஸ் ஒன்றையே ஆதித்திய தேஜஸ் என்றும் அதனினும் மேம்பட்ட தேஜஸ் என்றும் வேதம் வர்ணித்துள்ளது. 'ஆதித்ய வர்ணம்' (ஆதித்திய நிறமுடையவனை), 'சிவ ஏவகேவல: ததக்ஷரம் தத்ஸவிதுர் வரேண்யம்' (கேவலம் சிவமொன்றே. அது அக்ஷரம். அது ஸவிதாவுக்கு மேலானது) என்ற ச்வேதாச்வதரம் காண்க. கடல் வண்ணன், கருவண்ணன், முகில் வண்ணன், காயாம்பூ வண்ணன், புறம்போலுள்ளுங்கரியான் என்பனவாதிய இலக்கணங்களையுடைய நாராயணன் முதலிய பிறதேவர்கள் அத்துணைச்சிறந்த ஒளியுடையவர்களாக மாட்டார்கள். எனவே ஆதித்தியனுடைய இருதயத்தில் அவர்கள் இருப்பதுமில்லை. ஆனால், கூரேச விஜயம் என்னுஞ் சுவடி சூரிய மண்டலத்திலிருப்பவன் நாராயணனென்பதை 'த்யேயஸ் ஸதா ஸவித்ரு மண்டல மத்திய வர்த்தி நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட:| கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீட ஹாரீ-ஹிரண்மயவபு:) த்ருத சங்க சக்கர தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மிவாக்ஷிணீ' என்று சாந்தோக்கியங் கூறுவதாகச் சொல்லி நிரூபிக்கப் பார்க்கும். சாந்தோக்கியத்தில் 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ' என்பது மட்டும் உண்டும். அம்மேற்கோளின் மற்ற பாகங்களனைத்தும் அவ்வுபநிஷத்திற் கிடையா.

சிலர் சூரிய நாராயணன் என்ற பிரயோகத்தைக்கொண்டு சூரியாந்தரியாமி நாராயணனே யென்பர். அது தப்பு. சூரியர்கள் பன்னிருவர் என்றொரு கணக்குண்டு. அவருள் விஷ்ணுவென்று பெயருள்ள சூரியனொருவனிருக்கிறான். சூரிய நாராயணனென்பது அந்தச்சூரியனாகிய விஷ்ணுவையேகுறிக்கும். அவ்வுண்மையை 'யாக்ஞவல்க்யோ ஹவை மஹாமுநி ராதித்ய லோகம் ஜகாம தமாதித்யம் நத்வாபோ பகவந் நாதித்யாத்ம தத்வ மநுப்ரூஹீதி ஸஹோவாச நாராயண:||' (யாக்ஞவல்கிய மஹாமுநிவர் ஆதித்திய லோகம் புகுந்தனர். அவ்வாதித்தியனை அவர் வணங்கிப்பகவானே! ஆதித்தியனே! ஆத்தும தத்துவத்தைக் கூறுதியென நாராயணன் கூறுகின்றனன்) என்ற மண்டலப்ராஹ்மணத்தாலுந் தெளிக. சிவ சூரியன் ராமச்சந்திரன் என்ற பிரயோகங்களும் பிரசித்தம். சிவ சூரியன் என்பதற்குச் சிவனை அந்தரியாமியாகவுடைய சூரியனென்றும், ராமச்சந்திரன் என்பதற்கு ராமனை அந்தரியாமியாகவுடைய சந்திரனென்றும் பொருளுரைத்தல் சிறக்கும். விஷ்ணுவைப் பார்வதியின் புருஷக் கோலமென்று உபசரித்தலுண்டு. 'போகீ பவாநீ புருஷேச விஷ்ணு: - க்ரோதேச காளீ சமரேச துர்க்க:' என்பது

காண்க. பார்வதியைச் 'சந்த்ர மண்டல மத்ய வர்த்திநீம்' என்கின்றது த்ரிபுராதாபிந். ஆகையால் ராமச்சந்திரனென்பது விஷ்ணுவைச் சந்திரமண்டல மத்தியவர்த்தி யென்பதைக் காட்டிற்றென்க.

காயத்திரி மந்திரத்தைப்பிராமணர்கள் ஜபிப்பார்கள். அவர்கள் வணங்குந் தெய்வமும் பிராமணத் தெய்வமாகவேயிருக்கவேண்டும். 'ஈசாந:........ப்ரஹ்மணோதிபதி:........ஸதாசிவோம்' என்னும் நாராயணத்தால் உருத்திரனே தேவர்களுட் பிராமண னென்பது விளங்கும். மனுஸ்மிருதியும் 'விப்ராணாம் தைவதம் சம்பும் க்ஷத்ரியாணாந்து மாதவ:| வைச்யாநாந்து பவேத் ப்ரஹ்மா சூத்ராணாம் கணநாயக:||' (பிராமணருக்குத் தெய்வம் சிவன். க்ஷத்திரியருக்குத் தெய்வம் விஷ்ணு. வைசியருக்குத் தெய்வம் பிரமன். சூத்திரருக்குத் தெய்வம் இந்திரன்) என்றது.

ப்ருஹஜ்ஜாபாலம் 'சிவ வக்ஷஸ்திதம் நகே நாதாய ப்ரணவேநாபி மந்த்ர்ய காயத்ர்யா பஞ்சாக்ஷரேணாபி மந்த்ர்ய ஹரிர் மஸ்தக காத்ரேஷு சமர்ப்பயேத்' (சிவபிரான் தனது மார்பிலிருந்து பஸ்மத்தை நகத்தா லெடுத்துப் பிரணவம் காயத்திரி பஞ்சாக்ஷரம் இவற்றானே யபிமந்திரித்து விஷ்ணுவின் சிரசு முதலிய அங்கங்களிற் பூசி) என்றதாலும், பஸ்மஜாபாலம் 'த்யக்த்வா பஸ்மதாரணம் ந காயத்ரீம் ஜபேத்' (பஸ்மதாரண மின்றிக் காயத்திரியை ஜபித்தல் கூடாது) என்றதாலும் காயத்திரி சிவ சம்பந்த முடையதாதல் காண்க.

---

## 2. தசரத தநய ஸ்தாபிதா ராதி தத்வாத்

## தசரதன் மதலை தாபித் தேத்தலின்.

பொருள்:—தசரத மன்னரின் புத்திரர் பிரதிட்டித்து வணங்கலாலும் என்பது.

விட்டுணு எடுத்த அவதாரங்கள் பத்து. அவற்றுள் இராமாவதாரங்கள் மூன்று. அவை பரசுராமன், இரகுராமன், பலராமன் என்பன. இரகு ராமர்தான் தசரத புத்திரர். அவர் தம் மனைவியாகிய சீதையுடன் காட்டில் வசிக்க நேர்ந்தது. அப்போது இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான். இராமர் அதனை யறிந்து இலங்கைபுக்கு இராவணனைக் கொன்று சீதையை மீட்டார். இராவணனைக் கொன்றதால் இராமரைப் பிரமகத்தி பிடித்தது. அது பொருத இராமர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து சிவபிரானைப் பூசித்தார். சிவனருளாற் பிரமகத்தி நீங்கியது. இராமர் மகிழ்ந்தார். இராமர் பிரதிட்டித்துப் பூசித்த சிவமூர்த்திக்கு இராம

லிங்கம் என்று பெயர். அப்பிரதிட்டை நிகழ்ந்த விடம் இராமேச்சுரம். இராமேச்சுரம்—இராமருக்குக் குலதெய்வமாகிய ஈச்சுரன் இருந்தருளுந் தலம். இக்கதை சேது புராணத்திற் கண்டது.

'ராம ஏவ பரம் தப:' (ராமன் ஒரு மேலான தவசி) என்ற ராம ரஹஸ்யம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:-

1. ஆ:- இராமர் சிவனுக்கடியாரானலன்றோசிவனைவணங்குவார்?

ச:— 'ராமம்......பஸ்மோத் தூளித ஸர்வாங்கம்' என்பது ராமரஹஸ்யம். இராமர் சர்வாங்கங்களிலும் விபூதிதாரணமுடையாரென்பது அதன் பொருள். அதற்கு உபப்பிருமணமாக வான்மீகம் 'த்யாத்வா ரகுபதிம் க்ருத்தம் காலாநலஸிவாபரம் பீதக்ருஷ்ணஜிநதரம் பஸ்மோ தூளித விக்ரஹம்' என்று கூறும். இச்சுலோகம் இப்போதுள்ளசிலபதிப்புக்களில்நீக்கப்பட்டிருக்கிறது. ஆனால் 'க்ருதாபிஷேகஸ் ஸராராஜராமஸ் ஸீதாத்விதீயஸ் ஸஹலக்ஷ்மணோ க்ருதாபிஷேகஸ்த் வகராஜ புத்ர்யா ருத்ரஸ்ஸ விஷ்ணுர் பகவாநிவேச:' என்பது அதிற் பிரசித்தம். பகவானும் ஈசருமான உருத்திரர் பார்வதியாரோடு ஸ்நாநம்பண்ணி விஷ்ணு தேவருடன் விளங்கினதுபோல இராமர் சீதையோடு கோதாவிரியில் மூழ்கி இலக்குமணருடன் விளங்கினரென்பது அதன் பொருள். இராமர் நீராடிய பின் நீறுமாடியிருந்தாலன்றிச் சிவன்போல் விளங்கியிருக்கமாட்டார். ஸ்வர்ண வர்ண ஜடாபாரம் ஸாக்ஷாத் ருத்ர ஸிவாபரம் பஸ்மோத் தூளித ஸர்வாங்கம் த்ருஷ்ட்வாகாம வசம்கதா' என்பது அத்யாத்மம். - இங்ஙனம் ராமர் விபூதிதாரணியாதலாலும், விஷ்ணுவே லக்ஷ்மண ஸாமியமாதலாலும் சிவபிரானுக்கு இராமர் அடியவரே யென்க.

2. ஆ:— இராமர் சிவனிடமிருந்து அடையவேண்டியபேறு ஒன்றுமில்லை. ஆகலின் அவர் அவனை வணங்கமாட்டார்.

ச:— 'பக்த்யாநம் ரதநோ விஷ்ணோ: ப்ரஸாத மகரோச்சிவ: (பக்தி நிறைந்தவர் விஷ்ணு. பிரஸாதிக்கிறவர் சிவபிரான்) என்பது சரபம். அத்ர பூர்வம் மஹாதேவம் ப்ரஸாத மகரோத் ப்ரபு:', 'வரதாநம் மஹேந்த்ரேண ப்ரஹ்மணா வருணேநச மஹாதேவ ப்ரஸாதாச்ச பித்ரா மம ஸமாகம:' என்பன வான்மீகம். எனக்கு இவ்விடத்தில் பிரபுவாகிய மகாதேவர் முன்னே பிரசாதம் புரிந்தருளினர்; நான் இந்திரனிடத்தும் பிரமனிடத்தும் வருணனிடத்தும் வரம்பெற்றேன், மகாதேவருடைய பிரசாதத்தால் என் பிதாவைத் தரிசித்தேன். என்பன முறையே அவற்றின் பொருள்கள். இவை இராமவாக்கியங்கள். இப்பித்ருதரிசனம் சிவகடாக்ஷவிசேஷமன்றோ?

3. ஆ:— எல்லாரும் வணங்குகின்றவர் இராமர். அவர் பிறரை ஏன் வணங்கவேண்டும்?

ச:— 'ஸாஹி கௌதம வாக்யேந துர் நிரீக்ஷ்யா பபூவஹ த்ரயாணுமபி லோகா நாம் யாவத் ராமஸ்ய தர்சநம் சாபஸ்யாந்த முபாகம் யதேஷாம் தர்சநமாகதா | ராகவௌது தாதஸ்யா: பாதௌ ஜக்ரஹ துர்முதா' (அந்த அகலியை அந்தக் கௌதமர் வாக்கியத்தால் மூவுலகத்தாராலும் பார்க்கவொண்ணாத வுருவங் கொண்டவளாயினள். ராமர் தர்சனமானவுடன் சாபநீக்கம்பெற்று ராம லக்ஷ்மண விசுவாமித்திரர்களெதிரிற் காணப்பட்டனள். மிகுந்த அன்புடன் ராமரும் லக்ஷ்மணரும் அவளடிகளைத் தொட்டு வணங்கினர்) என்றது வான்மீகம். அகலியையை வணங்கிய ராமர் சிவனை வணங்கமாட்டாரென்பது பொருந்தாது.

4. ஆ:—இராமர் பரமான்மா; சிவன் சீவான்மா. பரமான்மா சீவான்மாவை வணங்குதல் கூடாது.

ச:— இராமர் தசரதர் கருவிற் றங்கினர். கோசலை கருப்பத்துள் ஒழுகினர். அவள் யோநியில் நெருக்குண்டு வெளிப்பட்டார். 'தயரதன்றன் குலமதலாய்', 'கோசலைதன்..........வயிறு வாய்த்தவனே' என்பன பிரபந்தம். இறுதிக் காலத்தில் அவருயிரைக் காலன் கவர்ந்தான். 'முனிவன் வேண்டத் திறல் விளங்கு மிலக்குவனைப் பிரிந்தான் றன்னை' என்ற பிரபந்தங் காண்க. முனிவன் - அவ்வேடங் கொண்டுவந்த காலன். 'தென்றிசைக் கடவுளுந் தேவனேவலா - லன்றுதன் னுருவொழித் தயோத்திமா நகர்க் - குன்றுநின்றனையதோர் கோயில் வாயிலி - லொன்றிய முனிவர னுருவங் கொண்டுளான்' என்ற உத்தர ராமாயணத்தால் அது விளங்கும். இப்போதும் இராமர் எமலோகத்தில் எமனைச் சேவித்துக்கொண்டிருக்கிறார். 'தஸ்யாம் ராஜர்ஷ்ய: புண்யஸ்த்ததா தேவர்ஷயா மலா: யமம் வைவஸ்வதம் தாதப்ரஹ்ருஷ்டா: பர்யுபாஸதே யயாதிர் நஹுஷ: பூருர் மாந்தாதா ஸோம கோந்ருக: ராமோ தாசரதிச் சைவ லக்ஷ்மணச்ச ப்ரதர்தந:' என்பது ஸபா 8-வது அத்தியாயம். அதன் மொழிபெயர்ப்பு 'அந்தச் (எம)சபையில் புண்ணியஞ்செய்த ராஜ ரிஷிகளும் பரிசுத்தர்களான பிரம்ம ரிஷிகளும் மகிழ்ச்சியுடன் ஸூர்ய புத்ரனை யமனை ஸேவிக்கின்றனர். யயாதி, நஹுஷன், பூரு, மாந்தாதா, ஸோமகன், நிருகன், தசரத புத்திரர்களான ராம லக்ஷ்மணர்கள்......அந்தச் சபையில் யமதர்மராஜனை ஸேவிக்கின்றனர்' என்கின்றது. 'ராமலக்ஷ்மணர்கள் தம்முருவத்துடன் யமஸபையிலிருப்பது, உத்தரராமாயணத்தில் அவதாரசமாபன காலத்தில் ராமலக்ஷ்மணர்களை யமன் வந்து கண்டதாகச் சொல்வதனாலும் விளங்குகின்றது' என்ற அப்பெயர்ப்பாசிரியர் குறிப்பும் ஈண்டுச்சிந்திக்கத்தக்கது. இவையெல்லாம் பரமான்ம விலக்கணமா?

இன்ன இழிவுகளுள் ஒன்றேனும் சிவபிரானிடமில்லாமை காண்க. ருத்ரஹ்ருதயம் 'அந்தராத்மா பவேத் ப்ரஹ்மா பரமாத்மா மஹேச்வர: ஸர்வேஷா மேவ பூதாநாம் விஷ்ணு ராத்மா ஸநாதந:' என்னும் ஒப்புநோக்கு வாக்கியத்தாற் சிவபிரானையே பரமான்மா வென்கின்றது. விஷ்ணு ஆன்மாவே யென்பதும் பிரமன் அந்தரான்மா வென்பதும் அதில் வெளி.

5. ஆ:— இராமநாமம் தாரகமந்திரம். இராமர் தாரகப் பிரமம். சிவன் அம்மந்திரத்தைச் செபிப்பவன். அவனை அவர் வணங்குவாரா?

ச:— சமதக்கினி புத்திரர் பரசுராமர். தசரதபுத்திரர் இரகுராமர். வசுதேவ புத்திரர் பலராமர். முன் பிறந்தவர் பரசுராமர். இரகுராமர் இடையிற் பிறந்தார். பலராமர் கடைப்பிறவி. பரசுராமர் பிறந்து இராமநாமம் பெற்றபோது இரகுராமர் பிறந்திலர். அப்படி இரகுராம சனனத்துக்கு முன்பே உலகில் வழங்கிவந்த இராமநாமம் இரகுராமருக்குச் சொந்தமாதல் யாங்ஙனம்? வசுதேவரேனும் இராமநாமம் தாசரதிக்குரியதென்று தம்பிள்ளைக்கிட்டனர்? அதுவுமில்லை. சமதக்கினி போன்றும் தசரதர்போன்றுமே அவரு மிட்டார். அம்மூன்று தந்தையருஞ் சைவர். ஹரா உமா என்பன சைவ நாமங்கள். அவற்றின் ஈற்றெழுத்தைச் சேர்த்தால் ராமா என்பது வரும். அதனையே அச்சைவர் தம் பிள்ளைக்கிட்டனர். அங்ஙனம் இராமநாமம் சைவமென்பது 'சிவோஹமா ரம் மந்த்ரோயம்' என்னும் ராமரஹஸ்யத்தால் விளங்கும். ஆகலின் அது தாரகமாதல் ஒருவகையிற் சாலும். அதுபற்றிப் பரசுராமரும் பலராமரும் தாரகப் பிரமங்களாவார்களா? அப்படியே இரகுராமரும் அஃதாகார். அவர் அப்பெயரைத் தம்மந்திரமாகக்கொண்டு மகிழ்ந்தது சிவோகம்பாவனையா லென்க.

6. ஆ:— இருடிகளின் சாபத்தால் பார்வதி பரமேச்சுரர்களின் அறுந்துபோன பகலிங்கங்களே சிவலிங்கம். அதனையோ இராமர் பிரதிஷ்டித்துப் பூசிப்பார்?

ச:— 'ஊர்த்வாய நம: ஊர்த்வ லிங்காய நம: ஹிரண்யாயநம: ஹிரண்யலிங்காய நம: ஸுவர்ணாய நம: ஸுவர்ணலிங்காயநம: திவ்யாயநம: திவ்யலிங்காய நம: பவாய நம: பவலிங்காய நம: சர்வாய நம: சர்வலிங்காய நம: சிவாய நம: சிவலிங்காய நம: ஜ்வலாய நம: ஜ்வலலிங்காய நம: ஆத்மாய நம: ஆத்மலிங்காய நம: பரமாய நம: பரமலிங்காயநம: ஏதத்ஸோமஸ்ய ஸூர்யஸ்ய ஸர்வலிங்கம் ஸ்தாபயதி பாணி மந்த்ரம் பவித்ரம்' என்று சிவலிங்கத்தை நாராயணமே வாயாரத் துதிக்கின்றது. ருக்வேத ஸம்ஹிதா 'தவச்ரியே மருதோ மர்ஜயந்த ருத்ரயத்தே ஜநிம சாரு சித்ரம் பதம் யத் விஷ்ணோ ருபமந்ய தாயிதேந பாஸி குஹ்யம் நாமகோநாம்'

என்றது. தேவர் யாவரும் சிவலிங்காராதனையால் எல்லா ஐசுவரிய முமெய்தினர். இலக்குமியோடு கூடிய விஷ்ணுவும் பரமபதவாழ் வடைந்தன னென்பது அதன் பொருள். இன்னும் சிவலிங்காரா தனத்தைப் பகலிங்காராதனமெனக் கொண்டும் அநுசாஸனம் 45-வது அத்தியாயம் 'ஈசுவரர்காரணங்களுக்குங்காரணமென்பதற்கு வேறு நியாயங்களால் ஆவதென்ன? மற்றொருவருடைய லிங்கத் தைத் தேவர்கள் அர்ச்சித்ததாக நாம்கேட்கவில்லையன்றோ? மகேச் வரரைவிட வேறு யாருடைய லிங்கமானது எல்லாத் தேவர்களா லும் இப்போதாவது முன்னேயாவது பூஜிக்கப்பட்டிருக்கிறது?... ப்ரம்மாவும் விஷ்ணுவும்......யாருடைய லிங்கத்தை எப்போதும் பூஜிக்கிறீரோ அவர் அந்தக் காரணத்தினாலேயே மிகச் சிறந்தவ ரல்லவோ? தாமரை மலரையாவது சக்கரத்தையாவது வச்சிராயுதத் தையாவது அடையாளமாகக்கொண்டு பிரஜைகள் பிறப்பதில்லை; லிங்கத்தையும் பகத்தையும் அடையாளமாகவுடையவைகளாகப் பிறக்கின்றன. ஆதலால் பிரஜைகள் ஈச்வரருடையவை. பெண்க ளெல்லாரும் உமாதேவியின் காரண ரூபத்திலிருந்து உண்டாக்கப் பட்டதனால் பகம் அடையாளமாகப் பிறந்திருக்கின்றனர். புருஷர்க ளனைவரும் சிவனுடைய லிங்கத்தினால் அடையாளம் செய்யப்பட் டிருப்பது பிரத்தியக்ஷமாயிருக்கிறது. சராசரங்களடங்கிய இம் மூவுலகங்களிலும் ஈசுவரரைவிட வேறு காரணம் உளதென்றும் தேவியின் அடையாளம் இல்லையென்றும் சொல்லுங்கெடுமதியுள்ள மனிதன் நாஸ்திகனாவான். ஆண்குறியுள்ளவை யனைத்தும் ஈசுவர ரென்றும் பெண்குறியுள்ளவை யனைத்தும் உமையென்றும் அறி. சராசரங்களாகிய இவ்வுலகமனைத்தும் இவ்விரண்டு ரூபங்களினாலும் வியாபிக்கப்பட்டது' என்று பிரசங்கித்துச் சிவலிங்க நிந்தகர்வாயில் மண்போடுகிறது. அப்பிரசங்கம் அப்பர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் வாக்காகப் பிரகாசிப்பதும் அறியத்தக்கது. 'புல்லிங்கம் ஸர்வமீசா நம் ஸ்த்ரீலிங்கம் பகவத் யுமா' (ஆண் பாலாரெல்லாம் ஈசான சொரூபம். பெண்பாலாரெல்லாம் பகவதியாகிய உமாசொரூபம்) என்ற ருத்ர ஹ்ருதயத்தின் உபப்பிரும்மணமாக அப்பாரதப் பகுதி விளங்குகிறது. சிவலிங்கம் என்பதற்குச் சிவபிரானது பிரபாவம் என்பதே பொருள்.

7. ஆ:— இராவணன் பிராமணனாயிருந்தால் அவனைக் கொன்றவருக்குப் பிரமகத்திவரும். அவன் தந்தை பிராமணனாயி னும் தாய் அரக்கி. ஆகலின் அவனுக்குப் பிராமணத்துவம் போய் விட்டது. இராமரைப் பிரமகத்தி பீடிக்க ஹேதுவில்லை.

சு:—பிராமணாதி வர்ணங்கள் மனிதருட் போலத்தேவர் இராக் கதர் முதலியோருள்ளும் உள. இலங்கையில் வீடுதோறும் இராக்கதர் வேதமோதிய செய்தி 'அக்நிஹோத்ராச்ச வேதாச்ச

ராக்ஷஸாநாம் க்ருஹே' என்ற வான்மீகத்தால் வெளி. அதனாலும் இராவணனே ஓரிடத்திற் றன்னைப்பற்றி 'ஜாதம் ப்ரஹ்ம குலாக்ரஜோ தனபதிர்ய: கும்பகர்ணாநுஜ:...ஸர்வம் நிஷ்பலிதம் ததேக விதிநா தைவே பலே துர்ப்பலே' (நான் பிரமகுலத்திற் பிறந்தவனாயிருந்தும் குபேர கும்பகர்ணாதியரைத் தம்பியராகக் கொண்டிருந்தும்......தெய்வபலமில்லாததால் எல்லாம் பலிதமில்லாயுற் போய்விட்டன) என்று கூறுதலாலும் அவன் இராக்கதர்களுட் பிராமணனென்பதும் அவனைக் கொன்ற இராமருக்குப் பிரமகத்திப் பீடைதப்பாதென்பதுந் திண்ணம். பிராமணத்துவம் தாயினால் அவனுக்குப் போய்விட்டதாயின் மச்சகந்தி முதலியோரால் வியாஸர் முதலியோருக்கு என் போகவில்லை?

8. ஆ:— பிரமன் றலையை உருத்திரன் கிள்ளினான். அவன் கையில் அத்தலை ஒட்டிக்கொண்டது. அதனால் அவனைப் பிரமகத்தி சூழ்ந்தது. உருத்திரன் விட்டுணுவைச் சரணமடைந்தான். விட்டுணு அவன் ஹத்தியைப் போக்கினார். 'பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்—நாயகனவனே கபால நன்மோக்கத்துக் கண்டுகொண்மின்-தேசமாமதிள் சூழ்ந்தழகாய திருக்குருகூரதனு—ளீசன்பாலோ ரவம்பறைதலென்னாவதிலிங்கியர்க்கே' என்றார் நம்மாழ்வார்.

ச:— உருத்திரனுக்குப் பிரமகத்தியைப் போக்கின விட்டுணு பிரமனுக்குக் கிள்ளப்பட்ட தலையை என் உண்டாக்கித்தரவில்லை? விட்டுணுவுக்குப் பிள்ளையிடமுண்டாகாத அத்துணை விசேடப் பிரியம் பேரனிடமுண்டாய்விட்டதா? வெகுவிசித்திரம்! ஆகையால் அவர் உருத்திரனுக்குப் பிரமகத்தியைப் போக்கினாரென்பதுபொய். பிள்ளை பேரனென்பன பிறர் மதம் பற்றி இங்கு வழங்கப்பட்டன. மேலும் பிரமன் தேவர்களுள் வைசியன். தலை கிள்ளப்பட்டதனால் அவன் சாகவுமில்லை. ஆகலின் இங்குப் பிரமகத்திக்கிடமில்லை.

விட்டுணு தம் இரத்தத்தைப் பிரமகபாலத்தில் நிரப்பி உருத்திரனுக்கு அக்கபாலத்தையும் ஹத்தியையும் போக்கினாரென்னும் பொருள்படக் 'கருணையே திருவுருவமாங் கடவுளாதலினால்—முருகுயிர்த்த செங்குருதி நீர்முன்பதுக் களித்து - மருவு கைக்கபாலந்தனை நிறைத்தரன் மருவும் - பிரமகத்தியைப் போக்கின னெம்பிரான் புகலின்' என்றது கூரேச விஜயம். அவ்வாறு போக்கினவர் மூலவிஷ்ணுவே; அவதார விஷ்ணுக்களல்லர். இரத்தம் மாமிசம் முதலியவற்றாலாய சரீரம் அம்மூல விஷ்ணுவுக்குண்டென்பது அச்செய்யுளாற் பெறப்படலின் அவர் சர்வவியாபியான பரம்பொருளாதல் யாங்ஙனம்? 'அவர் நறுந்துளவத்தாரோ னரூபமேயென்றா ராய்ந்த - விவர் பெருங் கபாலத்தேற்ற தெவருடற் செந்நீரென்றார்' என்பது மகா வித்வான் வாக்கு. அவர் - பூர்வபட்சி. இவர் - சித்தாந்தி.

உண்மையிற் பிரமன் சிரசைக் கிள்ளியவர் பைரவர். அவர் சிவ பிரானின்புதல்வர். பிள்ளைவீரம் அப்பனுக்காயிற்று. ஆகையாற்றான் 'யோ ப்ரஹ்மண: பஞ்சமவக்த்ர ஹந்தா தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' என்று சரபத்தால் வந்திக்கப்பட்டான் அப்பன். ஹத்தி சூழ்வதாயின் பைரவரைத்தான் சூழும். அவரும் இராமர் போன்று சிவனை யுபாஸித்தே அதனைப்போக்கிக்கொள்வரென்க. ஆகவே அந் நம்மாழ்வார் பாட்டு அவைதிகமாய் முடிந்தது.

9. ஆ:-இராமருக்கு ஹத்தி வந்ததும் அவர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அதனைப்போக்கிக்கொண்டதும் வான்மீகத்திலில்லை.

ச:— பூர்வ பட்சப்பார்வையில் இராமரின் சிவலிங்காராதனம் எவ்வளவு நிந்திதமோ அவ்வளவுவந்திதம் ராமதாரகத்துவம். ஆனால் ராமர் தாரகப் பிரமமென்பதும் இராமநாமம் தாரகமந்திர மென்பதும் உண்மையாயிருக்குமாயின் அவையிருப்பதற்கு வான்மீகத்தினும்பொருத்தமான நூல்வேறெதுவுமில்லை. ஆனால் அவை அந் நூலில் உளவா? இல்லை. அப்படியிருக்க ராமதாரகத்தை மட்டும் அதிகப் பிரசங்கம் பண்ணுவானேன்? இராமரின் சிவலிங்காராதனம் வான்மீகத்தில் மறைவு: மற்றைப் பிரமாண சாத்திரங்களில் வெளி. காரணம் 'நமது சாஸ்திரியார் (இராமருக்கு ஹத்தி வந்தது மெய்யாகில் அதனையும், அது தொலைய அவர் சிவபூசை செய்ததையும் வான்மீகி ஏன் சொல்லவில்லை) என்றார். இராமாயணம் இராமரது பெருமையை விரிப்பது. அவரது பெருமைகூறவந்த முனிவர் அவரது இழிவு கூறுதல் கூடாது. இழிவு யாதெனின், இராமர் இராவண வதாநந்தரம் சிவபூசை செய்தாரெனின் என் செய்தாரென்னுங் கடாநிகழும். அதற்கு அவர் இராவணனைக்கொன்றபாவந்தொலைக்க வென்னுமுத்தர முண்டாம். இவ்வாறு விளக்குவது இராமருக்கு இகழேயன்றிப் புகழாகாமையின், இராவண வதாநந்தரம் இராமர் சிவபூசை செய்ததை வான்மீகர் சொல்லாமல் விட்டனர்...' என்று தொடர்ந்து விவகரித்துக்கொண்டுபோகும் 'இராம தத்வதீபிகையினது ஆபாச விளக்கம்' என்னும் நூலாற் காண்க.

---

3. சௌரே: கைலாஸ யாத்ரா வ்ரதமுதித தயாபீஷ்ட
சந்தாந தாநாத்.

கண்ணன் கயிலேயில் நண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலின்.

பொருள்:— கிருஷ்ணர் கயிலேயிற்சென்று சிவசந்நிதானத்தில் நின்று யாசித்ததனுற் கீர்த்தி நிறைந்த புத்திர பாக்கியத்தை அவருக்குத் தருதலானும் என்பது.

அதன் மூலவசனம் வருமாறு:— (கதை அதனுல் விளங்குமாகலின் தனித்தெழுதப்படவில்லை). பாரதம் அநுசாஸனம் 45, 46-ம் அத்தியாயங்களிற்கண்டதுஇது. "பிராம்மணசிரேஷ்டர்களே! நீங்களும், ஐயா! யுதிஷ்டிரரே! நீரும், பீஷ்மரே! நீரும், ஜகத் பிரபுவான சங்கருடைய நாமங்களைக் கேளுங்கள். முன்னே நான் சாம்பனுக்காகப் பெறுதற்கரிய பேறு பெற்றதையும் கேளுங்கள். முன்னே நான் யோகசக்தியினுல் சிவபெருமானை நிஜரூபத்துடன் கண்டேன். முன்னர் பிரத்யும்னன் சாருதேஷ்ணன் முதலான ருக்மிணியின் புத்திரர்களைக்கண்டுஜாம்பவதியானவள்புத்ரனை விரும்பினவளாய் என்னிடம் வந்து, 'அச்சுதரே! சூரனும் பலசாலிகளிற் சிறந்தவனும் அழகிய உருவமுள்ளவனும் குற்றமற்றவனும் உம்மைப்போலிருப்பவனுமான ஒரு புத்ரனை எனக்கு விரைவிற் கொடுக்கக் கடவீர்... நீர் பன்னிரண்டு வருஷங்கள் நோன்பெடுத்து உடம்பை உலர்த்திப் பசுபதியை ஆராதித்து ருக்மிணியினிடம் புத்ரர்களைப் பெற்றீர். மதுஸூதனரே! சாருதேஷ்ணன், ஸுசாரு, சாருவேசன், யசோதரன், சாருச்ரவன், சாருயசஸ், பிரத்யும்னன், சம்பு என்னும் சிறந்த பராக்ரமசாலிகளான புத்ரர்களை ருக்மிணியினிடம் உண்டாக்கினதுபோல எனக்கும் புத்ரனைக்கொடும்' என்று கேட்டாள். இவ்வாறு கேட்ட......ஜாம்பவதியை நோக்கி நான், 'அரசியே! எனக்கு விடைகொடு. நீ சொன்னதைச் செய்யப்போகிறேன்' என்று சொன்னேன். அவளும் என்னைப் பார்த்து, 'யாதவரே! க்ஷேமமுண்டாகவும் ஜயமுண்டாகவும் செல்லக் கடவீர்...' என்று சொன்னுள்...நான்...பிறகு கருடனை நினைத்தேன். கருடன் என்னைத் தூக்கிக்கொண்டு சென்றுன். இமயமலையைச் சார்ந்து கருடனை அனுப்பிவிட்டேன். அந்த இமயமலையில்...வ்யாக்ரபாதர்

புத்ரரும் மஹாத்மாவுமான உபமன்யு மஹரிஷியின் திவ்யாச்ரமத்தைக் கண்டேன்......அவ்வாச்ரமத்தில் பிரவேசிக்கத் தொடங்கினேன். பாரதரே! வேந்தரே!......அந்தச் சிறந்த ஆச்ரமத்தில் பிரவேசிக்கும்போதே ஜடையும் மரவுரியும் தரித்தவரும் மகிமை பொருந்தியவரும் ஒளியினாலும் தவத்தினாலும் அக்கினியைப்போல ஜ்வலிப்பவரும் சிஷ்யர்களால் அனுஸரிக்கப்பெற்றவரும் மனத்தையடக்கினவரும் இளமைப் பருவத்திலிருப்பவருமாகிய ஒரு ப்ராம்மண ச்ரேஷ்டரைக்கண்டேன். அந்த உபமந்யுவென்னும் முனிவர், தலைவணங்கி வந்தனம் செய்த என்னைப் பார்த்து, 'தாமரைக் கண்ணரே! உமது வரவு நல்வரவு...'என்று சொன்னார். நான் அவரிடம் கை கூப்பிக்கொண்டு....எல்லாவற்றினுடைய க்ஷேமங்களையும் விசாரித்தேன். பிறகு,...அந்த உபமந்யு முனிவர் என்னைப் பார்த்து... பேசலானார். 'கிருஷ்ணா! உம்மைப்போன்ற புத்ரனை நீர் அடைவது திண்ணம். மிகப் பெருந்தவம் செய்து...சிவபெருமானை ஆராதனம் செய்யும்.' (என்றார்).

"............நான்............அம்மஹாமுனிவரைப் பார்த்து, 'பிராம்மண ச்ரேஷ்டரே! நீர் பாக்கியசாலியாயிருக்கிறீர். புண்ணியம் செய்தவர் உம்மைவிட வேறுயாரிருக்கிறார்? தேவருக்குந் தேவரான ஈச்வரர் உம்முடைய ஆச்ரமத்தில்ஸாந்நித்தியமாயிருக்கிறாரே! ...அந்தப் பகவானான சங்கரர் உமக்குத் தரிசனம் கொடுத்தது போல எனக்குங் கொடுப்பாரா? சங்கரர்உமக்கு அனுக்கிரகம் செய்ததுபோல எனக்கும் செய்வாரா?" என்று கேட்டேன். உபமந்யு முனிவர் 'தாமரைக் கண்ணரே!........சீக்கிரம் மஹாதேவரை நான் கண்டதுபோல நீரும் காணுவீர்; ஸந்தேகமில்லை...நீர் ஆறுவது மாஸத்தில் மகாதேவரைப் பார்ப்பீர்......உமாதேவியோடு கூடிய மகேச்வரரிடத்திலிருந்து இருபத்து நான்கு வரங்களை நீர் பெறப் போகிறீர்...ஜபிக்கத் தக்க ஒரு மந்திரத்தை உமக்கு உபதேசிப்பேன். அதனால், நீர் சங்கரரைப் பார்ப்பீர்' என்று சொன்னார்.

நான் அவரைப்பார்த்து, '...மஹாமுனிவரே!...அவரைஉமது அனுக்கிரகத்தினால் நான் பார்க்கக் கடவேன்' என்று கேட்டேன். பாரதரே! இப்படி மஹாதேவரைப்பற்றிய கதையை அவர் எனக்குச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே எட்டுத் தினங்கள் ஒரு முகூர்த்தம் போலச் சென்றன. எட்டாவதுநாள் அந்தப்பிராம்மண

ரால் சாஸ்திரப்படி நான் தீக்ஷை செய்விக்கப்பட்டேன்; தலைமொட்டையாகவும் உடம்பில் நெய்தடவிக்கொண்டும் தண்டத்தையும் தர்ப்பத்தையும் எடுத்துக்கொண்டும் மரவுரியுடுத்தும் மேகலைகட்டிக் கொண்டேன்; முதல் மாதம் கனிகளைப் புசித்தேன்; இரண்டாவது மாதம் ஜலபானம் செய்தேன்; மூன்று நாலு ஐந்தாவது மாதங்களில் வாயுபக்ஷணம் செய்துகொண்டு கைகளை மேலே தூக்கி ஒற்றைக்காலால் தளராமல் நின்றேன். பாரதரே! ஆகாயத்தில்....பரமசிவனைக் கண்டேன்...அந்த விருஷப வாகனரை ஆயிரத்து நூறு ருத்ரர்கள் அவர் செய்கைகளைச்சொல்லித் துதித்தனர்...இந்திரனும் ...விஷ்ணுவுமாகியஇருவரும் ப்ரம்மதேவரும் சிவனது ஸமீபத்தில் ரதந்தரமென்னும் ஸாமத்தைச் சொல்லுகின்றனர்......சிவபிரான் என் முன் நின்றார்......ஈச்வரர் என் முன்னே நின்றதைக் கண்டு ப்ரமா இந்திரன் முதலானஉலகம்என்னையேபார்த்தது. அப்போது, மகாதேவரைக் கண்ணெடுத்துப் பார்க்க எனக்கு முடியாமற் போயிற்று. பிறகு, ஈச்வரர் என்னைப் பார்த்து, 'கிருஷ்ண! பாரும்; பேசும். உம்மால் நான் நூறுதடவைகளும் ஆயிரந் தடவைகளும் ஆராதிக்கப்பெற்றிருக்கிறேன். உம்மைப்போல எனக்கன்பர் மூவுலகங்களிலுமில்லை' என்று சொன்னார். ஈச்வரரை நான் தலைவணங்கி வந்தனம் செய்தபிறகுஉமாதேவியும் அன்பு கூர்ந்தாள்....சிவபிரான் ...என்னால் துதிக்கப்பட்டபோது உலகங்களனைத்தும் ஸிம்மநாதம் செய்தன...சங்கரர்...எனக்குச்சொல்லலானார். 'கிருஷ்ண! எம்மிடத்தில் உமக்குச்சிறந்த பக்தியிருப்பதை யாமறிவோம்...வரங்களை நீர் கேட்கலாம்...உமக்கு அவற்றைக் கொடுத்தேன்........'என்றார்.

"அந்தப்....பகவானை...தலைவணங்கி நமஸ்காரம் செய்துபிறகு, '...பதினாயிரம் புத்ரர்களை...வேண்டுகிறேன்' என்று சொன்னேன். ....சங்கரர், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொன்னார். அதன்பிறகு ...உமாதேவி அருள் கூர்ந்து என்னைப் பார்த்து 'உமக்கு ஸாம்பன் என்னும் புத்ரன் பகவானால் கொடுக்கப்பட்டான். என்னிடத்திலும்......வரங்களை வாங்கிக்கொள்ளும்; கொடுக்கிறேன்' என்று சொன்னாள். பாண்டு புத்ரரே! அவளையும் நான் தலைவணங்கி...நூறு குமாரர்களை...கேட்டுக்கொண்டேன். உமாதேவிஎன்னைப்பார்த்து, ....'அப்படியேயாகும்....' என்று சொன்னாள். பாரதரே! பிமனுக்கு

மூத்தவரே! ஈச்வரரும் ஈச்வரியும் எனக்கு இவ்வாறு வரங்களை யளித்தபிறகு கணங்களுடன் அந்த நிமிஷத்திலேயே மறைந்தனர். ராஜச்ரேஷ்டரே! இந்த மிக்க ஆச்சர்யமான விஷயத்தை யெல்லாம் ......உபமன்யுவென்னும் பிராமணருக்கு முன்னர் நான் 'சொன்னேன்......அந்தப் பிராமணர்...சங்கரருக்கு நமஸ்காரம் செய்து, 'சிவனுக்கு ஒப்பான தேவதையில்லை. சிவனுக்குச் சமமான தஞ்சமில்லை. கொடுப்பதில் சிவனைப்போன்றவரில்லை. யுத்தத்தில் சிவனுக்கொப்பானவரில்லை' என்று சொன்னார்" (என்றார் கிருஷ்ணர்).

இக்கதை இமயத்தில் நடந்ததென்கிறது பாரதம். கயிலையில் நடந்ததென்னும் சிவபுராணங்கள். இமயத்தின் சிகரமேகயிலையுமாதலால் விரோதமில்லை.

இனி அக்கதைபற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— அரி சிவனை மோகன சாத்திரஞ் செய்யச் சொன்னார். சிவன் அதனைச் செய்து அரியைப் பார்த்துச் 'சுவாமி! அச்சாத்திரத்தையும் என்னையும் மதிப்பார் யாருமிலர். நீரே அச்சாத்திரத்தை மதித்து என்னை வணங்கி ஒரு கடவுளாக்கி உலகிற்கு வழி காட்டவேண்டும்' என்றிரந்தான். அரி கண்ணனுயவதாரஞ் செய்யுங்காலத்தில் அப்படிச் செய்வதாகச் சொல்லிச் சிவனுக்கு வரமீந்தார். அவ்வரத்தைப்பூர்த்தி செய்யவே கண்ணன் கயிலைசென்று சிவனை யாராதித்தான். அதுகொண்டு சிவனை ஆண்டவனென்றும் கண்ணனை அடிமையென்றும் சொல்லிவிடலாமா?

ச:— காமிகமுதல் வாதுள மீறுகவுள்ள இருபத்தெட்டுத் திவ்யாகமங்களே அவர்மோகன நூலென்பன. 'ஆகம மிருபத்தெட்டும் ....அளித்தான் மன்னே', 'அந்த மோகன நூலைக் கண்டு' என்பன கூரேசவிஜயம். ஆனால் அம்ருதநாதம் 'ஆகமஸ்யா விரோதேந ஊஹநம் தர்க உச்யதே' (ஆகமத்துக்கு விரோதமில்லாமல் ஊகிப்பதே தர்க்கம் என்படும்) என்றும், தேஜோபிந்து 'ஸகலாகம கோசர:' (எல்லா ஆகமங்களிலும் விஷயமாயிருப்பவன்), 'ஸர்வாகமாந்தார்த்த விபாவிதோஸி' (எல்லாவாகமங்களின் உட்பொருளென்று சொல்லப்பட்டிருக்கிறது) என்றும், நாரதபரிவ்ராஜகம் 'ஸர்வாகம

மய: சிவ:'(சருவாகம மயன் சிவன்), 'ஸர்வாகமாந்தார்த்த விசேஷ வேத்யம்......சர்வேச்வரம்......சிவாச்யுதாம் போருஹ கர்ப பூரு ஹம்......சிவம்' (எல்லாவாகமங்களி னர்த்தத்தாலே விசேடமா யறியப்படுபவனும் சருவேசுவரனும்உருத்திரன் விஷ்ணுபிரமனென் னும் மூவரையும் கருப்பத்துள் வைத்தவனுமான சிவபிரான்) என் றும், அந்தபூர்ணம் 'சிவ: சைவாகமஸ்தாநாம்' (சைவாகமஸ்தானங் களிற் சிவபிரான்) என்றும், கடருத்ரம் 'ஸர்வ வேதாந்த சித்தாந்த ஸாரம்' (சருவவுபநிஷத்துக்கள் ஆகமங்கள் இவற்றின் சாரம்) என்றுங் கூறி அவ்விருபத்தெட்டுச் சிவாகமங்களையும் பூஷிப்பதை அவர் அறியாமற் போனது பரிதாபம். உபநிஷத்துக்களே சிவாக மங்களை அங்ஙனம் வந்திப்பதாற் சைவாகமங்கள் மோகன சாத்திர மென்பது அடிபட்டது. படவே, அஃதடியாகச் சிவன் பிரார்த்தித் தானென்பதும் அரி வரமீந்தானென்பதும் கண்ணன் அதனைப் பூர்த்திசெய்தா னென்பதும் சிவன் ஆண்டவனுகானென்பதும் கண்ணன் அடிமையாகானென்பதுமெல்லாம் ஒன்றன்பின்னென்றாய் நாறுங்கி வீழ்தலுந் திண்ணம்.

ஆனாற் சிலபுராணங்கள் ஆகமங்களை மோகனமெனப் பழிப்ப துமுண்டு. இருபத்தெட்டுச் சைவாகமங்களும் சுருதி வந்திதமாக லின் அப்பழி அத்தொகுதியைச் சாராது. அதற்கு வேறான வாம பாசுபதம் பாஞ்சராத்திர முதலிய அவைதிகாகமங்களையே அத் தூஷணை பற்றும். 'சாறுவாகங் காபாலஞ் சாற்று பாஞ்சராத்திர நூல் - மாறு செய்யும் வாமமுள்ள மயங்கச்செய்த நூலாகும் - தேறியிந்நூற்படி நின்றோரிவற்றை யுலகிற் செப்பிடுவோர் - பாறு தொடருநரகத்தி னளப்பில் காலம் படிந்திடுவார்' என்னுங் கூர்ம புராண முதலியவற்றால் அவ்வுண்மை காண்க. பெயரொற்றுமையே பற்றி வாமபாசுபதத்தையும் சிரௌத பாசுபதத்தையும் ஒன்றெனக் கோடல் அதிமோகனமாகும்.

2. ஆ:— அரியிடம் அயன் பிறந்தான். அயனிடம் அரன் பிறந்தான். அரியிடம் நேராகவும் அரன்பிறந்தான். அரிபாட்டனும் தந்தையுமாவன்: அரன் பேரனும் பிள்ளையுமாவன். பேரனும் பிள்ளையுமான வொருவனைப் பாட்டனும் பிதாவுமான வொருவன் வணங்குவானோ? ஆகலின் அரனை அரிவணங்கினனென்பது மடமை.

ச:—நாராயணம் 'நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே நாராயணாத் ருத்ரோ ஜாயதே' (நாராயணனிடம் பிரமன் பிறந்தான் நாராயண னிடம் உருத்திரன் பிறந்தான்) என்பதும், ஸுபாலம் 'லலாடாத் க்ரோதஜோ ருத்ரோ ஜாயதே' (நெற்றியிலிருந்து கோபத்தில் உருத்திரன் பிறந்தான்) என்பதும், பிரபந்தம் 'நான் முகனும் - நான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்' என்பதும் அவருக் காதாரம். ஆனால் சரபம் 'பரமேச்வரோ ஸௌ யஸ்யாங்க ஜோஹம் ஹரிரிந்த்ரமுக்யா:' (நானும் விட்டுணுவும் இந்திரன் முதலியோ ரும் பிறக்க உற்பத்தித்தானமாயுள்ளவனை பரமேசுவரன். நானும் - பிரமனும்), 'மமாபி விஷ்ணோர் ஜநகம்' (எனக்கும் விஷ் ணுவுக்கும் ஜநகரும். எனக்கும் - பிரமனுக்கும்) என்பதையும், ச்வேதாச்வதரம் 'யோ....விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:...ஹிர ண்ய கர்பம் ஜநயாமாஸ பூர்வம்' (எந்த விசுவாதிகனாகிய உருத்திர னென்ற மகரிஷி ஆதியிற் பிரமனைச் சிருட்டித்தான்) என்பதையும் ஏனோ அவர் படிக்கவில்லை? படித்திருப்பாராயின் நாராயணம் ஸுபாலம் சரபம் ச்வேதாச்வதரம் என்னும் அவ்வாக்கியங்களை அவர் சமன்வயப்படுத்திப் பார்த்திருப்பர். அப்போது அயன் அரி அரன் என்னுமூவருமே ஒருவரிலொருவர் பிறப்பரென்பது அவர்க் குந் தெளிவாம். ஆகவே மூவரையும் ஆக்கியளிப்பவன் சிவபிரானே யாவன். 'ஸர்வேச்வரம்......சிவாச்யுதாம் போருஹ கர்பபூருஹம் .......சிவம்' (சருவேசுவரனும் உருத்திரன் விஷ்ணு பிரமனென்னு மூவரையும் கர்ப்பத்துள் ளடக்கிய விருக்ஷமுமான சிவபிரான்) என்ற நாரதபரிவ்ராஜகமும், 'ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீதம்...சிவம்' (பிரம விஷ்ணு ருத்ரர்களைக் கடந்த சிவபிரான்) 'சிவம்......ஹரிஹர ஹிரண்ய கர்ப ஸ்ருஷ்டாரம்' (சிவபிரான் பிரம விஷ்ணு ருத்ரர்களைச் சிருஷ்டித்தவன்) என்ற பஸ்மஜாபாலமுங் காண்க. 'உலகங்களைப் படைக்கும் பிரம்மதேவரை வலப்பக்கத்திலிருந்தும் உலகங்களை காப்பவராகிய விஷ்ணுவை இடப்பக்கத்திலிருந்தும் இந்த ஈச்வரர் படைத்தார். பிரபுவான ஈச்வரர் ப்ரளயகாலம்வந்தபோது ருத்திர ரைப் படைத்தார்' என்ற அநுசாசனம் 45-ம் அத்தியாயம் அவ்வுப நிஷத் வாக்கியங்களின் உபப்பிரும்மணமாகும். கிருஷ்ணன் பிள்ளை வரத்திற்காகக் கயிலைசென்று ஆராதித்ததெய்வம் அச்சிவபிரானே யாம். அத்தெய்வமே வைதிகசைவசமயத்தெய்வம். 'மூவரும்......

காணுச் சிவபெருமான்' என்பது மணிவாசகம். உண்மையை யிங்ஙனம் வேதப்பிரமாணங்கொண்டு நிச்சயிக்கவறியாத அவர் 'பாட்டன் பேரனைவணங்கலாமா? தந்தை பிள்ளையைவணங்கலாமா?' வென்று தொடுப்பதும் ஒரு மறுப்பாமா?

இன்னும் அடிமையை ஆண்டவன் வணங்கினனென்பதற்குச் சொன்ன காரணத்தையே பிள்ளையைத் தந்தை வணங்கினன் பேரனைப் பாட்டன் வணங்கினனென்பதற்கும் அவர் சொல்லிச் சமாதானஞ் செய்துகொண்டிருக்கலாம். மேற்கோளை மறுப்பதற்கு வேறு வகையில்லாமையால் அவர் அங்ஙனஞ் செய்திலர் போலும். செய்தாராயின் அப்பாட்டன் பேரன் கதை மறுப்பாதலில்லையன்றோ?

மோகன நூற்களே சிவனைப் பரனென்றும் அரியைத்தாசனென்றுஞ் செப்புமெனக் கூரேசவிஜயம் 'மோகன சாத்திரத்தின் மொழிகுவ் தெண்ணினரி-பாகநின் பண்பாலென்னைப் படைத்தனையெனவு மியானுன் - கோகனகத்தாட் கன்பு குழைந்துளேனெனவு மற்றும் - வாகுடனின்பா லியானே வரங்கள் பெற்றுடையேனென்றும்' 'மொழிவண்ண மனந்தமாகமோகனசாத்திரத்தை-விழி நுதற் பெறுவோய் செய்து வெஞ்சின வரக்கரென்னு - மிழிதகவினர் மயக்க வியற்றுதியென்னவின்ன - வழிகொணூற்றமோகுணத்து மானிடரக்கர் கொள்வார்' என்ற செய்யுட்களாற் றெரிவிக்கின்றது. ஈண்டுக் காட்டப்பட்ட சரிதமோ ஐந்தாம் வேதமாகிய பாரதத்திலுள்ளது. பாரதமுமா மோகனநூல்? அன்றே.

---

4. நேத்ரேண ஸ்வேநஸாகம் தசசத கமலைர் விஷ்ணுநா பூஜிதத்வாத்.

தனது விழியுட னோராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின்.

பொருள்:— தனது கண்ணுடன் ஒப்பற்ற அன்று மலர்ந்த ஆயிரந் தாமரைப் பூக்கள் கொண்டு விஷ்ணு பூசை செய்தலானும் என்பது.

சலந்தரன் என்றொரு அசுரனிருந்தான். அவன் சிவபிரானைப் போருக்கழைத்தான். சிவபிரான் ஒரு சக்கரத்தைச் சிருட்டித்து அதனால் அவ்வசுரனைக் கொன்றார். அச்சக்கரம் அவர்கையி லிருந்தது. விட்டுணு அதற்காசைப்பட்டார். அப்பொருட்டு அவர் சிவபூசை செய்தார். ஆயிரந் தாமரை மலர்களால் ஆயிரஞ் சிவநாமங்களைச் சொல்லிச் சிவலிங்கார்ச்சனைசெய்வது அவர் நியமம். ஒரு நாள் ஒருமலர் சிவனருளால் மறைந்தது. கடைசிப் பெயருக்கு மலர் காணப்படவில்லை. அவர் தம் கண்ணைப் பிடுங்கித் தாமரைப் பூவாகப் பாவித்துக் கடைசிப் பெயரைச் சொல்லிச் சிவலிங்கத்திற் சாத்திச் சிவார்ச்சனையைப் பூர்த்தி செய்தார். சிவபிரான் சிவலிங் கத்தினிடம் வெளிப்பட்டார். நாராயணர் அவரைத் தரிசித்து வணங்கி மகிழ்ந்தார். அவருக்குத் தோண்டப்பட்ட விடத்திற் சிவ கடாட்சத்தாற் கண்ணும் உண்டாயிற்று. கண்ணையே கமலமாகக் கருதித் தம்மடியிற் சாத்திய கரியமாலின் கரை கடந்த பத்தியைக் கண்ட பரசிவப் பிரபு அவரைக் 'கமலக்கண்ணா!' வென்றழைத்தார். அதுமுதல் விட்டுணுவுக்குப் பத்மாக்ஷர், தாமரைக்கண்ணர், புண்ட ரீகாக்ஷர் என்ற பெயர்களுண்டாயின. இக் கதை காஞ்சிப் புரா ணத்திலுள்ளது.

இக்கதைக்கு மூலவசனம் 'யோவாமபாதார்ச்சித விஷ்ணு நேத்ர: .........தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவன் வலது பாதத்திலே யர்ச்சிக்கப்பட்ட விட்டுணுவின் நேத்திரத்தை யுடைய வனோ அவ்வியல்புடைய சிவபெருமானுக்கு நமஸ்காரம் ஆகுக) என்னுஞ் சரபமாகும். இதன் பூர்வபட்சம் 'சிவன் விஷ்ணுவைக் குறித்துத் தவம் பண்ணினான். விஷ்ணு பிரத்தியக்ஷமானார். சிவன் அவர் பாதத்தை ஆயிரஞ் செண்பகப் பூக்களா லர்ச்சித்தான். ஒரு பூக் குறைந்தது. அவன் தன் மூக்கை யரிந்து அப்பூவாகக் கருதிப் பெருமாளடியில் வைத்தான். பெருமாள் அவனுக்குப் பிரசாதித் தார்' என்பது. பெருமாள் பிரசந்நராயிருந்தும் அவர் சந்நிதியிற் சிவனுக்கு மூக்கறுபட்டதென்றால் விஷ்ணுவின் பிரசன்ன மகிமை யும் அவர் பத்தனடையும் பாக்கியமுஞ் சிரிப்புடையனவல்லவா? விஷ்ணு தம் கண்ணைப் பிடுங்கிச் சிவார்ச்சனை செய்ததற்கு மேற் காட்டிய சுருதிப் பிரமாணமும், 'பங்கயமாயிரம் பூவினிலோர் பூக் குறையத் - தங்கணிடந்தரன் சேவடி மேற் சாத்தலுமே - சங்கரன் .......மாற் கருளியவாறு' என்ற திருவாசகமும், நாராயணனுக்குரிய தாமரைக் கண்ணன் முதலிய பெயர்களுஞ் சான்றாம். சிவபிரான் தம்மூக்கையரிந்து நாராயணரர்ச்சனை செய்ததற்குச் சுருதிப்பிரமாண மில்லை. பிரபந்தத்திலும் அக்கதை கிடையாது. செண்பக மூக்க ரென்ற பெயரையுஞ் சிவபிரான் தாங்கிலர்.

---

5. தஸ்மை சக்ரப்ரதாநாத்.

ஆங்கவற் கிரங்கி யாழியீந் தருடலின்.

பொருள்:— அப்போது அவ்விட்டுணுவுக்குத் தயை கூர்ந்து சக்கரத்தைக் கொடுத்தலாலும் என்பது.

விட்டுணு தம் கண்ணைப் பிடுங்கி யருச்சித்ததனாற் பரசிவப் பிரபு சிவலிங்கத்தில் வெளிப்பட்டு அவருக்குக் காட்சி கொடுத்துக் 'கமலக் கண்ணா! உன் பத்திக்கு மெச்சினோம். வேண்டும் வரத்தைக் கேள்' என்றார். நாராயணர் சிரத்திற் கூப்பிய கரத்தராய்ச் சிவபிரானைப் பார்த்துச் 'சுவாமி! தேவரீர் சலந்தர வதத்தின் பொருட்டுச் சிருட்டித்து வைத்துள்ள சக்கரத்தை அடியேற்குத் தந்தருள்க' என்று பிரார்த்தித்தார். சிவபிரான் அங்ஙனமே அதனை அவருக்கருளி அந்தர்த்தானமாயினார். இக்கதை காஞ்சிப்புராணத்தி லுள்ளது.

'யோவாம பாதார்ச்சித விஷ்ணு நேத்ரஸ்தஸ்மை ததௌ சக்ரமதீவஹ்ருஷ்ட: தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவர் வலது பாதத்திலே பூசிக்கப்பட்ட விஷ்ணுவின் நேத்திரத்தையுடையவராய், அதனால் மிகமகிழ்வுற்று அந்த விஷ்ணுவுக்குச்சக்கரத்தைக் கொடுத்தாரோ, அவ்வியல்பினராகிய சிவபெருமானுக்கு நமஸ்காரம் உளதாகுக) என்ற சுரபம் அச்சரிதைக்குப்பிரமாணம். அச்சுப்பிரதிகளில் எடுபட்டுப்போன 'செக்கர்வானச் சடையோன் சேவடிக் கீழுங் நாளின் - மெய்க்கணிட்டுச் சக்கரம் நீ பெற்றவினை யாட்டேபோல்' என்ற திருவாய் மொழியுங் காண்க.

இனி, இக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— சலந்தரவதத்தின் பொருட்டுச் சிவன் சிருட்டித்த சக்கரத்தை விட்டுணு பெறுவதற்குமுன் அவ்விட்டுணுவிடம் சக்கர மிருந்ததின்றோ?

ச:— இருந்ததுண்டு. அது கூர்மழுங்கிக் கெட்டுப்போய்விட்டது. 'குவலயங் காவல் பூண்ட குபனெனு மரசற்காகச்-சிவநெறித் ததீசியோடுஞ் செருச் செய்நாள் விடுத்தவாழி - தவமுனி வயிரவாக்கை தாக்கிவாய் மடிதலோடுங் - கவலுறு மனத்தனைகிக் கடுஞ்சமர் துறந்தமாயோன்', 'இனிப்படை பெறுவ தெவ்வாறென்றுவா ளவுணர்க் காற்றுப் - பணிப்புடை யிமையோர் தம்மை யுசாவினன் படைகட்கெல்லாந் - தனிப் பெருங்குருவாயீசன் சலந்தரன் மடியக் கண்ட - சினப்பொறி சிதறுந் தீவாய்த் திகிரியொன்றுளதென் றோர்ந்தான்' என்பன காஞ்சிப் புராணம்.

2. ஆ:—அக்கெட்டுப்போன சக்கரமுஞ்சிவன் தந்ததுதானோ?

ச:— ஆம்.

3. ஆ:—பிரமாணமெங்கே?

ச:— வைதிகமாகிய மேற்கதையிலிருந்து அது ஊகித்துக் கொள்ளப்படலாம்.

4. ஆ:— சக்கரதாரணம் விட்டுணுவுக்கு அநாதி. அதனைச் சிவப்பிரசாத மென்பது தப்பு.

ச:— 'ப்ரஹ்மா விஷ்ணுச்ச ருத்ரச்ச ஸர்வேவா பூத ஜாதய: நாசமேவாநு தாவந்தி ஸலிலா நீவபாடபம்' என்பது மஹாத். பிரமனும் விஷ்ணுவும் உருத்திரனும் பூதங்களோடு படைக்கப்படுகின்றனர்; வடவைத்தீயால் ஜலம் லயமடைதல் போல அப்பூதங்களோடு அவர்களும் லயமடைகிறார்கள் என்பது அதன் பொருள். அங்ஙனம் விட்டுணுவே தோன்றி மறையுமியல்புடையராயின் அவர் கைச்சக்கரமட்டும் அநாதியாவது யாங்ஙனம்? சிவபிரான் விட்டுணுவைச் சிருட்டிக்கும்போதே சக்கரத்தையுஞ் சிருட்டித்து அவருக்கருள்வர். இடையில் அதுகெடின் வேறு செய்தளிப்பதும் அப்பெருமாற் கியல்பு.

5. ஆ:— சிவன் விட்டுணுவுக்கு அடிக்கடி சக்கரஞ் செய்து கொடுப்பா னென்பதற்கு வேறும் கதைகள் உளவோ?

ச:— 'இத்யுக்த்வா பகவாந் விஷ்ணும் தேவதேவ உமாபதி: ஏகாக்ர மனஸா த்யானமகமத் பரமேச்வர: த்யாயதஸ்தஸ்ய தேவஸ்ய ப்ராதுராஸீத் தமோ நுதம் சாருநேத்ர த்ரயோதஸ்ய ஸஹஸ்ராதித்ய ஸந்நிபம் அக்நிஸூர்யச்ச சோமச்ச தந்மயம் லோசநத்ரயாத் த்ரிதேஜோமயமத் யுக்ரம் ஜ்ஞாநாஸ்த்ரம் வஜ்ர பஞ்சரம் நாபௌ ஸோமோம்ருதமயோ ஹ்யரேஷூ பகவாந் ரவி: ப்ராந்தேஷூ பகவாநக்நிச்சக்ரஸ் யஸ்யாச்சிவாத்மந: ஸசக்ரம் மதிமாந்பூத்வாகிங்கரோமீத்ய பாஷத க்ருதாஞ்சலி கரஸ்தஸ்தௌ பஹூ பாஹூ ஸ்திரிலோசந: தம் சக்ரபாணி நாலப்ய விஷ்ணவே ப்ரததௌசிவ: விஷ்ணோர்வை தக்ஷிணம் பாஹூ மபஜத்ஸோ பிஹர்ஷித:' (விஷ்ணுவானவர் பலவாறு துதித்து நிற்கையில் தேவதேவராகிய உமாபதியானவர் நிச்சலமான மனசோடு யோசித்தனர். அப்போது ஆயிரஞ் சூரியர்களை யொத்து அக்னி சூரியன் சந்திரனென்னுந் தமது மூன்று கண்களினின்றும் அத்யுக்ரமாயும், வஜ்ரபஞ்சரத்தையுடைய ஞானாஸ்திரமாயும் நாபியில் அமிர்தமயனாகிய சந்திரனையும் அரங்களில் சூரியனையும் பக்கங்களில் அக்கினியையுங் கொண்டு சிவஸ்வரூபமாய்ச் சக்கரமானது அநேக பாஹூக்களோடும் மூன்று கண்களோடுங் கூடிய புருஷாகாரமாய் நின்று அஞ்சலி கூப்பிச் சிவனைத்

துதித்தகாலையில், ஸ்ரீ சிவபெருமான் அந்தச் சக்கரத்தைத் தமது ஸ்ரீ ஹஸ்தத்தால் தடவி விஷ்ணு மூர்த்திக்குக் கொடுத்தனர். அதை விஷ்ணுவானவர் தமது தக்ஷிண ஹஸ்தத்திற் றாங்கிக்கொண்டனர்) என்பது ஸ்ரீஸ்காந்தத்து ஈசான ஸம்ஹிதை. இப்படிப் பல பிரமாணங்களுள.

6. ஆ:—விஷ்ணுவுக்குப் பஞ்சசன னென்னுமசுரன் பாஞ்ச சனிய மென்னுஞ் சங்கைக் கொடுத்தான். சிவன் சக்கரங்கொடுத்த கதையும் அங்ஙனமே யென ஏன் கோடலாகாது?

ச:— விட்டுணு பஞ்சசனனைக் கொன்று சங்கைப் பெற்றார்: அதுபோற் சிவபிரானைக் கொன்று சக்கரத்தைப் பெறவில்லை.

7. ஆ:— மயனென்னுந் தச்சன் சக்கரமொன்றைச் செய்து விஷ்ணுவுக்குக் கொடுத்தான். அதுபோற் கோடலாமா?

ச:— மயன் விட்டுணுவைப் பிரார்த்தித்து அவருக்குச் சக்கரத்தைக் கொடுத்தான். விட்டுணு சிவபிரானைப் பிரார்த்தித்துச் சக்கரத்தை அவரிடமிருந்து கொண்டார். ஆகையால் மயன் கதையும் இங்குப் பொருந்தாது.

8. ஆ:— இராமர் அகஸ்தியரைப் பிரார்த்தித்தே அவரிடமிருந்து, அஸ்திரங்களைப் பெற்றார். அதனால் இராமர் தாழ்ந்தும் அகஸ்தியர் உயர்ந்தும் விடுவாரா?

ச:— அதனால் அகஸ்தியர் உயரமாட்டார் இராமர் தாழுமாட்டார் என்பதற்கு வான்மீகத்தில் ஆதாரமில்லை. கிருஷ்ணருக்கு உபமந்யுபோன்று இராமருக்கு அகஸ்தியர் பரமாசாரியருமாவ ரென்பதை அம்முனீந்திரர் அத்தாசரதிக்குச் செய்த ஆதித்யஹ்ருதயோபதேசத்தாலுமறிக.

9. ஆ:— சிவன் விஷ்ணுவின் சக்கரத்தைப் பூசித்துச் சூலம் பெற்றா னென்றொரு கதையுளதே. அதற்குப் புகலென்ன?

ச:— விட்டுணு சிவபிரானிடம் சக்கரம் பெற்ற கதைக்கு வேதப்பிரமாணம் முன்னர்க் காட்டப்பட்டது. 'திகழுமாலவ னாயிர மலராலேத்த வாஞெரு நீண்மலர் குறையப் - புகழினலவன் கண்ணிடந்திட லும் புரிந்து சக்கரங் கொடுத்தல் கண்டடியேன் - றிகழு நின்றிருப் பாதங்கள் பரவித் தேவ தேவ நின்றிறம் பல பிதற்றி - யகழும் வல்வினைக் கஞ்சி வந்தடைந்தே னாவடுதுறையாதி யெம்மானே' யென்ற தேவாரமுங் காண்க. அப்படியே சிவபிரான் சக்கரத்தைப் பூசித்துச் சூலம் பெற்றா ரென்பதற்கு வேதப் பிரமாணமுமில்லை. பிரபந்தப் பிரமாணந்தானுமில்லை.

சிவபிரானாற் கொடுக்கப்பட்டு இலவணாசுரன் கையிலிருந்த சூலத்தை 'அரன்பாற் பெற்ற - இந்நெடுஞ்சூல நின்கை யிருக்கவே யிமையோரேனு - மூன்றொடும் பொருவான் மூளி னுலேவரென் றுரைத்துப் போற்றி' என்று வியக்தும், 'முனிவர் விரிசடையோ னிடைப் பெற்ற வெய்ய சூலங் - கையிருக்கின் வெலற் கரியான் கையிராக் காலத்தை யறிந்து காதில் - செய்யிருக்குஞ் சுடர்வேலா நிச்சய நின்கைப்படுவனீச னென்றார்' என்று சூலங்கையிலில்லாக் காலத்திற்றான் இலவணனைக் கொல்லலாமெனச் சத்துருக்கனை எச்சரித்து மிருக்கிறது உத்தாராமாயணம். சத்துருக்கனும் அச்சமயம் பார்த்தே அவ்வசுரனைக் கொன்றான். ததீசி, தாரகன் முதலியவர்களா லவமானமடைந்த விஷ்ணு சக்கரமோ சிவசூலத்தைத் தரும்? 'விஷ்ணோரபி சிரோபித்வா லலாடே சூல பாதநாத்' (விஷ்ணுவினுடைய சிரசிலுள்ள நெற்றியிற் சூலத்தைப் பதித்தலால்) என்ற வாக்கியத்தால் சிவ சூலத்தால் நெற்றியிற் குத்திக் கோக்கப்பட்டவர் விஷ்ணு வென்பதுந் தெரிகிறது.

10. ஆ:— 'தத்வா ஏதத் ஸுதர்சநம் நாம சக்கரம் ஸார்வகாமிகம் மோக்ஷத்வாரம் ருக்மயம் யஜுர்மயம் ஸாமமயம் ப்ரஹ்ம மயமம்ருதமயம் பவதி தஸ்ய புரஸ்தாத் வஸவ ஆஸதே ருத்ரா தக்ஷிணத ஆதித்யா: பச்சாத் விச்வே தேவா உத்தரதோ ப்ரஹ்ம விஷ்ணு மகேச்வராநாப்யாம் ஸூர்யா சந்த்ரம ஸௌ பார்ச்வயோ:' (ஸுதர்சநம் என்னும் நாமத்தை யுடைய சக்கரம் ஸர்வாபேக்ஷையும் பூர்த்தி செய்வது. மோக்ஷ மார்க்கமாயிருப்பது. ருக்யஜுர் ஸாம மயமாயிருப்பது. பிரமமயம் அமிருதமயமா யிருப்பது. அதனுடைய மேற்கில் வஸுக்களும் தெற்கில் ருத்ரர்களும் கிழக்கில் ஆதித்யர்களும் வடக்கில் விசுவே தேவர்களும் நாபியில் பிரம விஷ்ணு மகேசுரர்களும் பாரிசங்களில் ஸூர்ய சந்திரர்களும் இருக்கிறார்கள்) என்பது ந்ருஸிம்ஹ பூர்வதாபிநீ. இவ்வாக்கியம் சுதர்சன மென்னுஞ் சக்கரத்தைச் சிவன் வணங்கினனென்பதற்குச் சூசனையாகாதா?

ச:— ஆண்டு ருத்ரரென்பது ஏகாதச ருத்ரர்களையும் மகேசுரனென்பது திரிமூர்த்திகளுளொருவராகிய ருத்ரரையுங் குறிக்கும். வஸுருத்ராதித்தர் பிரஹ்ம விஷ்ணு மகேசுவரர் என்ற அடுக்குகளால் அது வெளி. அவ்வெல்லாத் தேவரையுங் கடந்த துரிய சிவபிரானே விட்டுணுவாற் கண்ணிடந்தருச்சிக்கப்பட்டவர். சக்கரமருளியவரும் அவரே. அவர் அச்சக்கரத்தை வணங்கினரென்பதற்கு வேத வசனமில்லை. மேலும் விட்டுணுவும் அச் சக்கரத்தை வணங்கினரென அவ்வாக்கியஞ் சூசிப்பிக்கிறது. துரிய விஷ்ணுப் பிரஸ்தாபம் சுருதியிற் சூனியமாகலான் பூர்வபட்சம் அதனாலும் வாயடங்கவேண்டும்.

11. ஆ:— சக்கரம் ஒரு காலத்தில் அம்பரீடனைக் காக்கும் பொருட்டுத் துர்வாசரைத் துரத்தியது. சிவனாலும் அச்சக்கர வேகத்தை யடக்கி அவ்விருடியைக் காக்கமுடியவில்லை. ஆங்ஙனஞ் சிவனுக்கும் அடங்காத சக்கரத்தைச் சிவன் உண்டாக்கினனென்ப தெப்படி?

ச:— 'ஐவகை வடிவா யெங்குமாய் நின்ற வச்சுத னமல ஞனந்தன்—செய்யொளி திகழும் பங்கயக் கண்ணன் றிருமகள் கொழுநனைக் காணத் - துய்ய செய்தவத்துத் துருவாசமுனிவன் சேறலுஞ் சுடர்கொள் வைகுந்த - மெய்யுறுகோயிற் றுவார பாலக ரவ்வேத பண்டிதன்றனை விலக்க', 'விலங்கிய விருவர் தம்மையுமந்த வெஞ்சின முனிவரன் வெகுண்டு - துலங்கிய கோயிற் றுவாரம் விட்டவனி தோன்றுமின்போ யெனச் சபித்தா - னலங்கலந்துளவ மௌலியா னது கேட்டந்தணன் றனையெதிர்கொண்டு - கலங்கிய துவாரபாலர் நின் சாபங் கடப்பதெக்காலமோ வென்றான்', 'என் றலு முனிவன் பரிந் திவரெழுகா லின்புறுமன்பராய் வருத-லன்றி மும்மடங்கு பகைவராய் வருதலல்லதிங் குன்பதமணுகார் - மன்ற லந்துளவ மாலையா யென்ன மலர்மகண் மகிழ்நனுமவரைக்-கன்றிய மறையோன் சாபநீர் கடக்குங் கருத்துமற்றியாது கொலென்றான்' என்ற வில்லிபாரதச் செய்யுட்களால் துருவாசர் துய்ய செய்தவத்த ரென்பதும், வேதபண்டித ரென்பதும், விட்டுணுவைக்காண்பதற்கு வைகுண்டஞ் சென்று கோயிலுள் நுழைந்தபோது தடுத்த துவார பாலகரைச் சபித்தவரென்பதும், விட்டுணு அதனைக்கேட்டுப் பயந் தோடி அம்முனிபுங்கவரை யெதிர்கொண்டழைத்து அவரிடம் தமது துவாரபாலகருக்காகச் சாபவிமோசனம் யாசித்ததனால் அஃ தளித்தவரென்பதுந் தெரிகின்றன. பாரதம் அநுசாசனம் 264வது அத்தியாயத்திலுள்ள "(துருவாசர்) என்னைப்பார்த்து, 'கிருஷ்ணா! பாயஸம் சாப்பிட விரும்புகிறேன்' என்று ஆவலோடு சொன்னார். ..........அதனால் அவருக்கு உஷ்ணமான பாயஸத்தைக் கொடுத் தேன். அதை அவர் விரைவாகச் சாப்பிட்டு, உடனே என்னைப் பார்த்து, 'பாயஸத்தை உன்னுடைய அங்கங்களில் சீக்கிரம் தடவிக்கொள்' என்று சொன்னார். நான் சங்கியாமலே அவர் சொன்னதை அப்படியே செய்தேன். அவர் எச்சிலை உடம்பின் அங்கங்களில் பூசிக்கொண்டேன்..........சிறந்த மகிமையுள்ள அந்த ப்ராம்மணர் உடனே என்னைப் பார்த்து, '........அச்சுதரே! உம் முடைய அங்கங்களில் பாயஸந் தடவப்பட்டிருக்கும் இடங்களில் நீர் நினைக்குங் காலம் வரையில் மரணபயமில்லை. நீர் உள்ளங்கால் களில் மட்டும் தடவிக்கொள்ளவில்லை. அதனால், அங்கேதான் உமக்கு மரணம்......' என்று அன்புடன் சொன்னார்" என்பது கிருஷ்ணர் வாக்கு. துருவாசரின் எச்சிற் பாயஸத்தை உடம்பெங்

கும் பூசிக்கொண்ட கிருஷ்ணர் உள்ளங்காலிற் பூசமறந்தார். ஆகலி னன்றோ வேடன் அவரை உள்ளங்காலில் அம்பெய்துகொன்றான். அங்ஙனம் விட்டுணுவையும் அவர் துவாரபாலகரையும் வைகுண்டத் திற்றானே நடுங்கவைத்தவரும், தம் எச்சிற் பாயஸத்தாற் கிருஷ்ண ருடம்பை வச்சிரமாக்கியவருமாகிய துர்வாஸ மஹர்ஷியையா சக் கரந்துரத்தவல்லது? அது சிவாமிசபூதராகிய அம்முனீந்திரரையே ஒன்றுஞ் செய்ய முடியாதபோது சிவபிரானுக் கடங்கில தென்பது மௌடீகமே.

12. ஆ:— இந்திரன் விட்டுணுவை யாக தேவதையாகக் கொண்டு யாகமொன்றியற்றினன். சிவன் அங்கு வந்து தனக் குரிய பாகத்தை இந்திரனிடங்கேட்டான். இந்திரன் மறுத்ததால் அவனுக்குஞ் சிவனுக்கும் போர் நடந்தது. இந்திரன் ஓடினன். யாகம் அஞ்சி நாரணனைக் கூவியது. நாரணன் சக்கரத்தை யனுப்ப அது வந்து சிவனது ஐந்து தலைகளையும் வெட்டி வீழ்த்தியது. சக் கரம் சிவன் தந்ததாயின் அவனை அவ்வாறு கொல்லுமா?

ச:— ருக்'மேதபதிம் ருத்ரம்' (ருத்ரன்யாகபதி), 'ஆவோராஜா நமத்வரஸ்ய ருத்ரம்.........அவஸேக்ருணுத்வம்' (யஞ்ஞத்துக்கு ராஜாவாக உங்களைக் காக்கும் பொருட்டு ருத்தரரை நாடுக) 'த்ரிஸ் ஸப்த யத்குஹ்யா நித்வே.......நிஹிதா' (இருபத்தொரு யஞ்ஞ மும் உம்மிடத்திலேயே வைக்கப்பட்டுள்ளன), 'ருத்ரம் யஜ்ஞாநாம் ஸாதநிஷ்ட மபஸாம்' (யஞ்ஞங்களை முற்றுவிக்கும் ருத்ரன்) என்ப தாலும், பாசுபதப்ராஹ்மம் 'ருத்ரோ யாகதேவ:' (ருத்ரன் யாக தேவன்) என்பதாலும் சிவபிரானே சர்வ யாகங்களுக்கும் பதி யாதல் திண்ணம். 'யஜ்ஞோவை விஷ்ணு:' என்பதால் விஷ்ணு யாகமேயாவார். பாசுபதப்ரஹ்மம் 'விஷ்ணு. ரத்வர்யு:' என்கின் றது. ஆகவே, யாகமும் அத்வர்யுவுமான விட்டுணு யாகபதியான சிவபிரானை எதிர்த்து வெல்லவும் வல்லரா? இன்னும் சிவபிரானது ஐந்து முகங்களும் ஈசானம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஸத்யோஜாதம் எனப் பெயர்பெறும். இவ் வைந்தும் பஞ்சப்ரஹ்ம மங்களெனப்படும். நாராயணம் 'ஸத்யோ ஜாதம் ப்ரபத்யாமி ஸத்யோஜாதாயவை நமோநம: பவேபவே நாதி பவே பவஸ் வமாம் பவோத் பவாய நம: வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய நம: ச்ரேஷ்டாய நமோ ருத்ராய நம: காலாய நம: கலவிகரணாய நமோ பலவிகரணாய நமோ பலாய நமோ பலப்ரமதநாய நம: ஸர்வபூததமநாய நமோ மநோந்மநாய நம: அகோரே ப்யோத கோரேப்யோ கோரகோரதரேப்ய: ஸர்வேப்ய: ஸர்வசர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ரரூபேப்ய: தத்புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி தந்நோருத்ர: ப்ரசோதயாத் ஈசாந: ஸர்வ

வித்யாநாமீச்வர: ஸர்வபூதாநாம் ப்ரஹ்மாதி பதிர் ப்ரஹ்மணோதி பதிர் ப்ரஹ்மாசிவோமே அஸ்து ஸதாசிவோம்' என்று அவ்வைந்து முகங்களையும் ஸ்துத்யஞ் செய்கின்றது. இத்தகைய சுருதி வந்தித மான சிவசிரசுகளைச் சுதர்சனம் வெட்டவும் வல்லதா? வெட்கம்! வெட்கம்!!

13. ஆ:— மோகன நூற்களை விட்டுணுவுக்குச் சிவன் சக்கர மளித்தா னென்று பிதற்றும்.

ச:— விட்டுணுவுக்குச் சிவபிரான் சக்கர மீந்தருளிய சரிதை மேல் சரபத்தாற் காட்டப்பட்டது. உபநிஷத் மோஹன நூலா? 'குற்றமற்றவரே! ரிஷபக்கொடியுடைய சிவபெருமானால் முன்னர் உண்டாக்கப்பட்டதும் ஜ்வலிக்கின்ற அக்கினியைப் போன்றதும் சக்தியினால் யாராலும் வெல்லமுடியாத ஆச்சரிய முள்ளதும் சங்கரரைத்தவிர மற்றவரால் பார்க்கவு முடியாததுமான சக்ராயுதம் ஜலத்துக்குள் ஸஞ்சரிப்பவனும் பலத்தினால் கர்வங் கொண்டவனுமான அஸுரனைக்கொன்று அந்தப்பகவானால் உமக்களிக்கப்பட்டதன்றோ? அந்தச்சக்கரம் ஸுதர்சன மென்று பெயருள்ளதாயிருக்கட்டு மென்று ஆதியிலேயே சங்கரரால் சொல்லப்பட்டது. அது முதல் அதற்கு ஸுதர்சன மென்னும் பெயர் உலகத்தில் நிலை நின்றது' என்பது அநுசாசனம். அதில் இப்பகுதியைச்சொன்னவர் உபமந்யு: கேட்டவர் கிருஷ்ணர். பாரதம் மோஹன நூலா? அச்சுதர்சனம் 'விஷ்ணுவினது அந்த உக்கிரமான சக்கரமும் இந்திரனுடைய வஜ்ராயுதமும் மந்தாரன் என்னும் பெயருள்ள க்ரஹன் என்னும் அஸுரனுடைய தேகத்திற்பட்டுச் சிதறிப்போயின....... அந்தச்சக்கரம் கிரகனுடைய அங்கங்களில் தெறித்துப்போயிற்று ... கிரகனுடைய உடம்பில் நூற்றுக்கணக்கான சக்கரம் வஜ்ர முதலிய ஆயுதங்களும் செல்வதில்லை' என்ற அநுசாஸனம் 45-வது அத்தியாயத்தாலும், விட்டுணுவாற் சிருட்டிக்கப்பட்ட 'வராஹ மூர்த்தியும் அப்படியே அந்த சுதர்சன கிரியை தம்முடைய கோர தந்தங்களினாலே பேர்த் தெறிந்தது மல்லாமல்......ஸேவை சாதிக்கையில், திருவாழி யாழ்வானும்.........தோத்திரஞ் செய்து, கோபத்தைச் சாந்தம் பண்ணவேண்டு மென்று பிரார்த்திக்கையில்,.......' என்ற கூரேசவிஜய அடிமுடிதேடினகட்சிக்குறிப்பாலும், 'முன்னை நாளிற் பிருகு முனிவரன் - பன்னிமீதிற் பரிதியை யேவிமா - லென்னு மாயனிமையவர்க் காய்க்கொன்ற - பின்னர்ச்சாபம் பிருகுமொழிந்தனன்', 'இங்குன் மீரதை யிழக்கக் கடவையுன் - றுங்கவாழியுஞ் சோதியிலாமலே - தங்கவென்று சபித்தனன்......' என்ற அந்தச் சுவடியாலும் அசுரன் மார்பிற்பட்டு நறுங்கிப்போனதையும், பன்றியால் தூக்கியெறியப்பட்டதையும், பிருகுசாபத்தால் இருளடைந்ததையுங் கண்டடங்குக.

6. கந்தர்ப் பத்வம் ஸகத்வாத்.

ஐங்கணைக் கிழவனை யழல்விருந்தாக்கலின்.

பொருள்:— ஐந்து புஷ்ப பாணங்களுக்குரியவனாகிய மன்மதனைத்தன் நெற்றிக்கண்ணெருப்புக்கு இரையாக்கலானும் என்பது.

சனகர், சனந்தரர், சனாதனர், சனற்குமாரர் என்பவர் நான்கு மகரிஷிகள். அவர்கள் சிவபிரானிடம் ஞானோபதேசம் பெறக் கயிலைக்கு வந்தார்கள். சிவபிரான் அவர்கள் பொருட்டு ஆசாரியத் திருமேனி தாங்கினார். அவர் அக்கோலங் கொண்டிருந்தது கயிலைக்கோயில். சாதித்தது மௌனம். காட்டியது ஞானமுத்திரை. உணர்த்தியது பதி பசு பாசவுண்மை. அச்சமயம் உமாதேவியார் அங்கில்லை. இமயத்தில் அவ்வரசன் மகளாராய் வளர்ந்து வந்தனர். பார்வதி பரமேசுவரர்களின் பரிணயமும் சுப்பிரமணியப் பெருமான் திருவவதாரமும் அரிபிரமாதி சமஸ்த தேவர்களுக்கும் அவசியமாயின. தேவரெல்லாங்கூடி யோசித்தனர். அதன் பயனாகப் பிரமதேவர் மன்மதனைச் சிவபிரான்பால் ஏவினர். அவன் தன் பரிவாரங்களோடு கயிலை சென்று கோயில்புக்குப் பிரான்மேல் அம்பொன்றை விட்டான். அஃதவர்மேற்பட்டது. அவ்வாசாரிய மூர்த்தி அவனை நோக்கிச் சிறிதே திரும்பினார். நெற்றிக் கண் திறந்தது. நெருப்பொன்று பறந்தது. அவன் அதிலகப்பட்டுச் சாம்பரானான். அவன் பரிவாரங்களுக்கும் அதுவே கதி. இரதியொருத்திதான் அத்தீக் கிரையாகாதுய்ந்தவள். இக்கதை கந்தபுராணத் துள்ளது.

'யோ......பஸ்மீசகார மந்மதம்.......தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவன் மன்மதனைச் சாம்பராக்கினான் அந்தவுருத்திரனுக்கு நமஸ்காரம் ஆகட்டும்) என்னுஞ் சரபம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— பாம்பு சாத்தனைக் கடித்தது. சாத்தன் அதனைக் கொன்றான். சாத்தனைப் பற்றிய விஷம் அதனாற்போய்விடுமா? அப்படியே மன்மதன் சிவனைக் காமுறுத்தினான். சிவன் அவனைக் கொன்றான். சிவனைப் பற்றிய காமம் அதனாற் போய்விடாது.

ச:— பாம்பும் மன்மதனுஞ் சரி. சாத்தனுஞ் சிவ பிரானுஞ் சரி. விஷமுங் காமமுஞ் சரி. திட்டாந்த தார்ஷ்டாந்திகங்கள் பொருந்துமாறு இதுவே. காமமாவது பாணம், பாம்பு கொல்லப்பட்டபோது விஷமுங் கொல்லப்பட்டதில்லை. ஆகையால் விஷம் சாத்தனை வருத்தியது. ஆனால் மன்மதன் எரிக்கப்பட்டபோது பாணமும் எரிக்கப்பட்டது. 'பொன் செய்தார் முடிகாணே னழகொழுகுந் திருமுகத்துப் பொலிவு காணேன் - மின்செய்பூணணி

குலவு புயங்காணே னகன்மார்பின் மேன்மை காணேன் - கொன்செய்பூங் கணைகாணேன் சிலைகாணே னுடல்புரி கோலங்காணே - னென்செய்வே னென்கணவா வென்னையொழித் தெவ்விடத்தே யிருக்கின்றாயே' என்பதுமன்மதனும் அவன்பரிவாரங்களுஞ் சாம்பரான விடத்தில் இரதியிட்ட வோலம். ஆகையாற் பாணம் சிவபிரானை வருத்திலதென்க. 'வெய்தா மழலாகிய மேலவன்மே - லெய்தாலு மென்வாளிக ளெய்திடுமோ' என்று மன்மதனே சொல்லி விட்டான்.

2. ஆ:— சிவன் மன்மத பாணத்தாற் றாக்குண்ணாதவனாயிற் பார்வதியை மணந்திருக்கவேண்டாம்.

ச:— அந்த மணத்தின் பொருட்டுச் சிவபிரான் இச்சையைத் தாமே மேற்கொண்டார். அது அவர் சுயேச்சை. காம வசத்ததான இச்சையன்று. அதனை வெளிப்படுத்தவே அவர் திருக்கலியாணம் காம தகனத்தின் பின்னர் நிகழ்வதாயிற்று.

3. ஆ: சிவன் துரோணரின் வீட்டுக்கு அதிதியாகச் சென்றான். துரோணபத்தினி அன்னமிட வந்தாள். அவள் நிர்வாணமாயிருந்து உபசரிக்கவேண்டுமென்று அவன் சொன்னான். அவளும் அவ்வாறே செய்தாள். அவள் பகத்தைக் கண்டா னவன். காமந் தலைக்கேறியது. வீரியம் நழுவிக் கீழ்க்கிடந்த கொள்ளிற் கலந்தது. அக்கொள் குதிரைக் கிரையாயிற்று. அதன் வயிற்றில் அவ்வீரியம் புக்குக் கருவாய் வளர்ந்து குழந்தையாய்ப் பிறந்தது. அக்குழந்தையே அசுவத்தாமா. அசுவத்தின் வயிற்றிற் பிறந்ததனால் அவனுக்கு அப்பெயர் வந்தது. அவனே அப்பால் துரோணருக்கும் அவர் மனைவியாகிய கிருபிக்கும் பிள்ளையானான். இக் கதை பாரதத்திற் பிரசித்தம். பரஸ்திரீயின் பகத்தைக் கண்டு வீரியத்தை வடியவிட்ட சிவனைக் காம வசப்படாதவனென்பது ஒப்பத்தக்கதன்று.

ச:— அக்கதை உண்மையானால் துரோணர் 'ஆஹா! என் பெண்டாட்டியின் பகத்தை யொருவன் பார்த்து நழுவவிட்ட வீரியத்துக்குப் பிறந்த பிள்ளையல்லவா இவன்' என்றும், கிருபி 'ஆஹா! ஓயலான் என்பகதரிசனத்தால் விட்ட வீரியத்துக்குப் பிறந்த பிள்ளையல்லவா இவன்' என்றுமே அப்பிள்ளையை அங்கீகரித்திருக்கவேண்டும். அவ்விருவர் பெருமைக்கும் அவ்வங்கீகாரம் பொருந்துமா? ஆனால், "துரோணர்........புத்திரனை விரும்பி.......கிருபியைப் பாரியையாக அடைந்தார். கௌதமி (கிருபி), அசுவத்தாமா என்னும் புத்திரனைப் பெற்றாள். அந்தப் புத்திரன் பிறந்தவுடன் உச்சைச்ரவம் என்னும் குதிரையைப்போல் கனைத்தான். அதைக் கேட்டு ஆகாசத்திலிருந்து கண்ணுக்குத் தெரியாத ஒரு பூதம்,

'இவனுடைய உரத்தசப்தம் குதிரையின் சத்தம்போல் திக்குக்களில் வியாபித்ததனால் இந்தக் குழந்தை அசுவத்தாமா என்ற பெயரோ டிருப்பன்' என்று சொல்லிற்று. பிறகு, அந்தப் புத்திரனால் துரோணாசாரியர் மிகுந்த சந்தோஷமடைந்தார்" என்பதும் "அந்த அச்வத்தாமா இப்பொழுது கர்ஜிக்கிறார். அவர் பிறந்தவுடன், உச்சைச்ரவம் என்னும் அச்வரத்நம் போலக் கனைக்கின்ற அந்த வீரரால் பூமியும் மூவுலகங்களுமாகிய அனைத்துமே நடுங்கும்படி செய்யப்பட்டன. அந்தத்வனியைக் கேட்டுக் கண்ணிற்குப் புலப் படாத ஒரு பிராணியானது அப்பொழுது அவருக்கு 'அச்வத்தாமா' என்று பெயரிட்டது. பாண்டவரே! அப்படிப்பட்ட சூரர் இப் பொழுது கர்ஜிக்கிறார்" என்பதுமே முறையே பாரதம் ஆதி 140, துரோணம் 197-வது அத்தியாயங்களிற் பிரசித்தம். உண்மையிங் ஙனமாக, அவ்வாக்ஷேபக் கதை பாரதப் பிரசித்தமென்பது துஷ் டத்தனம். அச்வம் - குதிரையைப் போன்ற, ஸ்தாமா - ஸப்த முடையவன் என்ற சப்தார்த்தத்தையேனும் அறியமாட்டா மடமை அம்மம்ம! அறக்கொடிது. 'அயோனிஜரான துரோணா சாரியரால் உக்கிரமான விரதங்களால் முயற்சி செய்து ஈசுவரரைப் பூஜித்து அயோனிஜையான கிருபியினிடம் உண்டுபண்ணப்பட்ட வரும்......இகழப்படாதவருமான அந்த அச்வத்தாமாவை......' என்ற சல்யம் 5-வது அத்தியாயமும் ஈண்டுக் கருதற்பாலது.

4. ஆ:— கபில முனிவர் அறுபதினாயிரம் சகரர்களையெரித் தார். அதனினும் சிவன் ஒரு காமனை யெரித்தது விசேடமில்லை.

ச:— அறுபதினாயிரரல்லர்; ஆறுபது கோடி சகரர்கள் கூடி னும் ஒரு காமனுக் கீடாகார். "கபிலமகரிஷி, 'என்னாலும் அநேக ஜன்மங்கள் பக்தி யோகத்தினால் ஆராதிக்கப்பெற்ற சிவபெருமான் அன்பு வைத்து ஸம்ஸாரத்தை யொழிக்கும் தத்வஞானத்தை எனக்கு அளித்தார்' என்று சொன்னார்" என்ற அநுசாஸம் 49வது அத்தியாயத்தின்படி கபில முனிவர் ஜன்மங்கடோறும் சிவ பக்த சிரேஷ்டராயிருந்தா ரென்பதும் சிவகடாட்சத்தாலே தத்துவஞான மெய்தினா ரென்பதும் ஸ்பஷ்டம். ஆகவே, அவர் செய்த தகனமுஞ் சிவ சங்கற்பமே யென்க.

5 ஆ:— விஷ்ணு மோகினிவடிவமெடுத்தார். சிவன் அம் மோகினியைக் கண்டான். காமந் தலைக்கேறியது. வீரியம் ஒழுகி அவன் பாதத்தில் விழுந்தது. அவ்வீரியம் ஒரு புத்திரனாயிற்று. அவன் பெயர் ஹரபாத புத்திரனென்பது. மன்மதவசத்தன் சிவ னென்பதற்கு அப்புத்திரனே சான்று.

ச:—சிவபிரானுக்கு அப்பெயருள்ள பிள்ளையே கிடையாது. ஆகையால் அக்கதையும் பொய்யென்க.

6. ஆ:— இக்ஷ்வாகு என்னும் அரசனுக்குக் காமத்தை யுண்டாக்க இந்திரன் மன்மதனை ஏவினன். மன்மதனும் அவ்வர சன்மேற் பாணங்களை விட்டான. அப்போது அவ்வரசன் அக் காமனை அருச்சித்து ஏத்தினன். காமன் மகிழ்ந்து அவனைவிட்டு விட்டான். சிவன் அவ்வரசனைவிட மேலாதலில்லை.

ச:— இக்ஷ்வாகு காமனைத் துதித்தான். சிவபிரான் காமனை யெரித்தார். காமனைத் துதித்தவன் காமனுக்குக்கீழ். காமனை யெரித்தவர் காமனுக்கு மேல். ஆகவே சிவபிரான் சந்நிதானத்தில் இக்ஷ்வாகு ஒரு மசகமேயாவன்.

7. ஆ:— சிவனும் உமையுங் குரங்குருவாயிருந்து ஹநு மானைப் பெற்றனர். சிவன் காமியென்பதற்கு அதுவும் ஒரு சுரியாகும்.

ச:— ஹநுமான் ருத்ரவீரியமாகலின் ருத்ரன் ஒரு தந்தை. மருத்து அதனை அஞ்சனைக்குக் கொண்டுபோய்க் கொடுத்தவனாகை யின் மருத்து ஒரு தந்தை. கேசரி யென்ற குரங்கு அஞ்சனையை மணந்தவனாகலின் கேசரி ஒரு தந்தை. ஆக ஹநுமானுக்குத் தந்தையர் மூவர் 'ருத்ரவீர்ய ஸமுத்பவாய', 'மாருதாத்மஜாய', 'கேஸரீஸுதாய' என்னும் ஆஞ்சனேயாஷ்டோத்தரத்தால் அவ் வுண்மை யறியப்படும். அவன் மாதா அஞ்சனை யென்பாளொருத் தியே. அவள் கவுதமருக்கு அகலியை வயிற்றிற் பிறந்த பெண் ணென்ப. ஆஞ்சனேயன் மாருதி யென்பன ஹநுமானுக்குத் தாய் வழியாலும் மருத்தென்னுந் தந்தைவழியாலும் வந்த பெயர்கள். பீமனுக்குப் பாண்டுவும் வாயுவும் பிதாக்களானவாறு ஹநுமானுக் குக் கேசரியும் வாயுவுமே பிதாக்களாதல் பொருத்தம். சிவபிரானை உபசாரத்தளவிற்கொண்டு ஒதுக்கிவிடவேண்டும். 'பரமனும் பரி விற் பார்த்துத் - தடமுலை யுமைக்குக் காட்டி வாயுவின் றனய னென்றான்' என்றார் கம்பரும். அப்படிச் சிவபிரானை யொதுக்கா விட்டால் அஞ்சனைக்கு மூன்று கணவர்களுளராகிப் பாரதம் ஆதி 213-வது அத்தியாயத்திற் கண்ட 'பெண்களுக்கு இளமைப்பருவ முள்ள ஒரு கணவனிருப்பதுதான் உலக நடைக்கும் உரியது. ஆபத் காலங்களில் (ஸந்ததியில்லாதபோது) கணவன் கட்டளையின் மேல் பெண்ணுக்கு இரண்டாவது புருஷனும் சொல்லப்பட்டிருக் கிறான். மூன்றாமவனைச் சேரலாகாது. அப்படிச் சேருகிறவளுக் குப் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது' என்றவாக்கியங்களின் படி அவள் பிராயச்சித்தத்துக் குரியவளாவாள். ஹநும ஜனனத்தி லுங் கௌரவமில்லாமற் போம்.

ஒரு காலத்திற் பார்வதி பரமேசுவரர்கள் மானிட வடிவத் துடன் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்தார்கள். இந்திரன்

அங்கு வந்தான். அவர்கள் அவனை மதிக்கவில்லை. அவனுக்குக் கோபம் வந்தது. 'ஈசுவரர். இந்திரன் கோபத்தைக் கண்டு நகைத்தார். அவனை மென்மையாகக் கண்ணெடுத்து நோக்கினர். அவரால் பார்க்கப்பட்ட தேவராஜன், உடனே அசைவற்றவனகிக் கட்டை போல் நின்றான்'. இது பாரதம் ஆதி 214-வது அத்தியாயத்துள்ளது. இப்படி மென்மையான பார்வையே அவன் கொழுப்பையடக்கியது. அந்த இந்திரனே 'இன்ன காலையி னிந்திரனெதிர்வருங் கூற்ற - மன்ன மாருதி மேற்கன லாலகாலமெனக் - கொன்னு னைப்பெருங் குலிசம்விட் டெறிதலுங் கொண்ட - தன்னினைப்பினை மறந்துபோய்த் தரணியில் வீழ்ந்தான்', 'சீர்பெற்றுளிர்பூ ணஞ்சனை தன் சிறுவன் றன்னை முகநோக்கிக் - கூர்பற்றியவென் குலிசத்தாற் கூறுபடுபுண் வடுத்தீர்க - வார்பெற் றூர்நீ பெற்றதுநின் னனுவற் றிடலா லனுமனெனும் - பேர்பெற் றுலகமுள்ளளவும் பெறுதி பெயராப் புகழென்றான்' என்ற உத்தரராமாயணப்படி ஹநுமானைத் தன் வச்சிரத்தாற் கன்னத்திற் புடைத்தானென்பதும், அவ்வடி பொறுமல் அவன் வானினின்றும் பூமியில் விழுந்தா னென்பதும், அவ்வீழ்ச்சியாலும் அடியாலும் அவன் கன்னங்களுடைந்த புண்ணுயின வென்பதும், அதனலவன் ஹநுமானெனப் பெயர் பெற்றா னென்பதும், அவ்விகார முகமும் அவ்விகாரப் பெயரும் அவனுக்கு எப்போதுமிருக்கவேண்டு மென்பது அவ்விந்திரன் சங்கற்பமென்பதும் தெரிகின்றன. 'காற்றின் றனயன் கருத்தழிவுற் - றுன்மத் தனய்த் தன்வலிதா னுணராதொழிக வெனவுரைத்தார்' என்பதால் ரிஷிகளின் சாபமும் அவனுக் கிருந்தது பெறப்படும். இப்படிப்பட்ட மானக்கேடுகளை மற்றைச் சிவகுமாரர்களிடம் யாருங் கண்டிலர். ஆகையால் ஹநுமானைச் சிவசக்திகளின் குமாரனென்பது மடமை. அவனை சிவனே யென்பாரையும் ஹநுமான் 'சேயிழை பாகத் தெண்டோ ளொருவனை வணக்கஞ் செய்தான்' என்ற கம்பரடி அடித்து வீழ்த்தியது. வான்மீகத்திலும் அதற்காதார மின்மை யறிக.

8. ஆ:—சிவன் மன்மதனையெரித்தான். ஆனல்அம்மன்மதனை அநகனுக்ச் செய்தவர் விஷ்ணுவே. அநகன்-பாவமில்லாதவன்.

ச:— சிவபிரான்மேற் பாணம் விட்டது மன்மதனின் பாவச் செயல். அதனல் அவன் எரியுண்டு அநங்கனுனன். அநங்கன் - சரீரமில்லாதவன். 'திங்கண்மே வுசெஞ்சடைத் தேவன் மாரவேளிங்குநின் றெய்யவும் மெரிதரு நுதல்விழிப் - பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னதன் - னங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினன்' என்றார் கம்பர். அது அப்பாவத்துக்குத் தண்டனை. அத்தண்டனையால் அப்பாவம் நீங்கியது. ஆகவே, அவனுக்குப் பாவம் போக்கிய பரமன் பரமசிவனேயாம். விஷ்ணுவேயாயின்,

சிவபிரான் அநங்கனுக்கியகை அவர் ஏன் தடுக்களில்லை? அல்லது மீளவும் ஏன் அங்கனுக்கவில்லை? பாரதம் வனம் 294ம் பக்கத்திற் கண்ட 'விஷ்ணு தேவசத்தருக்களைக் கொன்றபின் சென்று சுத்தி செய்து கொண்டதான சமீதீர்த்தம்' என்பதும், ஸல்யம் 233ம் பக்கத்திற்கண்ட 'முற்காலத்தில்விஷ்ணுவானவர்மது கைடபஃ என்கிற இரண்டு அசுரர்களையும் கொன்று அந்த உத்தமமான தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து யோகத்தையும் உத்தமமான ஸித்தியையும் பெற்றார்' என்பதும் விஷ்ணுவையே பாவமுடையவரெனக் காட்டுகின்றன. அவர் பிறர் பாவத்தை நீக்குவது யாங்ஙனம்?

9. ஆ:— 'ப்ரஹ்மாத்யாஸ் ஸகலாதேவா: மநுஷ்யா: பசவஸ்ததா - விஷ்ணு மாயா மஹாவரை மோஹாந்த தப:ஸாவ்ருதா:' என்ற வாக்கியத்தால் விஷ்ணு சிவனை மயக்குகிறானென்பது தெரிகிறது. ஆகலின் சிவன் மன்மதனை யெரித்தா னென்பது நம்பத்தக்கதன்று.

ச:— அவ்வாக்கியம் மயங்குகிறவர்களைப் பிரமன் முதலிய தேவர்களென்கிறது. அதனைப் பிரமன் விஷ்ணு உருத்திரன் என மேல் நோக்கி யெண்ணி யங்கீகரிப்பதா? பிரமன் இந்திரன் வாயு முதலியோராகக் கீழ் நோக்கி யெண்ணி யங்கீகரிப்பதா? மேல் நோக்கியெனின், மேலிட்ட வுருத்திரனைக் கீழிட்ட விஷ்ணு மயக்குதல் யாங்ஙனம்? கீழ்நோக்கியெனின், அவ்வரிசையில் உருத்திரர் அடங்கார். ஆகலின் விஷ்ணுமாயத்திற் கட்டுண்டவர்களிற் சிவபிரான் எப்படியுஞ் சேராமை காண்க. பிரமன் உருத்திரன் இந்திரன் என வரிசைப் படுத்தலுமுண்டு. அது வைதிக மன்று. பாஞ்சராத்திரக் கிரமம். "பிநாக மென்கிற வில்லைத் தரித்தவரும்......... ரிஷிகளால் துதிக்கப்பட்டவருமான தேவதேவர் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு,.........அந்த விஷ்ணுவின் பொருட்டு வரங்களைக் கொடுத்தார். பகவான், 'நாராயணரே! என் அனுக்கிரகத்தினால், மனிதர்கள் தேவர்கள் கந்தர்வர்கள் இவர்களைக் காட்டிலும் மனத்தினால் சிந்திக்க முடியாத பலம் ஸ்வரூபம் இவைகளோடு கூடியவராக நீர் ஆகப்போகிறீர்.........' என்று கூறினார். பிறகு, சூலபாணியான ருத்திரருடைய அநுக்கிரஹத்தினாலே இவை முதலான வரங்களைப் பெற்று அந்தத் தேவரே மாயையினால் உலகத்தை மயக்கிக்கொண்டு ஸஞ்சரிக்கிறார்" என்ற துரோணம் 202வது அத்தியாயம் விஷ்ணுவுக்கு உலகை மயக்குஞ் சக்தியைச் சிவபிரானே கொடுத்தா ரென்று தெரிவிக்கின்றது.

10. ஆ:— 'ப்ராஜா பதிஞ்ச ருத்ரஞ்ச - அஹமேவ ஸ்ருஜாமிவை - தௌதுமாஞ்ச விஜா நீதோ-மமமாயா விமோ - ஹிதௌ' என்ற வாக்கியத்தால் விஷ்ணு சிவனை மோகப்படுத்துகிறாரென்பது வெளியாகலின் அவன் மன்மதனை வெல்லுதல் அசாத்தியம்.

ச:— இந்த வாக்கியம் கற்பிதம். திரிபுரத்தசுரஸ்திரீகள் ஒரு அரசமரத்தைத் தழுவுமாறு அவர்களுக்கு விஷ்ணு உபதேசித்தார். அவர்கள் அப்படிச் செய்தார்கள். விஷ்ணு அவர்களுக்குத் தெரியாமல் அம்மரத்திலிருந்துகொண்டு அப்பெண்களை ஒவ்வொருவராகப் புணர்ந்து அவர்களின் கற்பொழுக்கத்தைக் கெடுத்தார் 'கற்பினுயர் மாதர்கள் கனத்தை யொழி விப்பான் - பொற்பினசு வத்தமது போந்துவல மாகி - நிற்பிரத னைத்தழுவி நேரிழையீ ரென்றே- யற்புதமா யாபருட னய்ப்புணர்தல் செய்தான்' 'அங்கதினம் மாதரும கங்களிமி குந்து - மங்கினர்கள் கற்பினுயர் மாண்பினை.....' என்பன கூரேச விஜயம். தேவாசுரர் திருப்பாற் கடல் கடைந்த காலத்தில் ஜ்யேஷ்டை, சந்திரன், லக்ஷ்மி, ஸுரை, குதிரை, கௌஸ்துபம், பாரிஜாதம், காமதேனு, ஐராவதம் முதலிய பலபொருள்களுண்டாயின. அவற்றுள் லக்ஷ்மியை விஷ்ணு தமக்கெடுத்துக் கொண்டார். '.....அவ்வேலை தருமணி திருவுங் கொண்டடங்- கிந்திரன் முதலோர்க் கொவ்வொன் றீந்தனன் முறையின் மாதோ' என்றது கூரேச விஜயம். லக்ஷ்மி விஷ்ணுவுக்குக் கலியாணத்தால் வரிக்கப்பட்டவளுமல்லள். அங்ஙனமாக, அவர் அவளைப் பெண்டாண்டார். இவையெல்லாம் விஷ்ணுவைப் பெருமோகமுடையாரென நன்கு காட்டும். இன்னும் மாலோன் மாயோன் கிருஷ்ணன் ஜநார்த்தனன் முதலிய விஷ்ணு நாமங்களும் அவர்க்கு மோகமுளதாதலை விளக்குவனவே. மாலோன் - மயக்கத்தையுடையவன். மாயோன் - மயக்கத்தையுடையவன். கிருஷ்ணன் - கறுப்பன். ஜநார்த்தனன் - ஜனங்களை வாட்டுபவன். சிவன் சங்கரன் சம்பு உருத்திரன் ஈசுவரன் முதலிய நாம வைபவங்களைக் கொண்டு சிவபிரானது பரிசுத்தத் தன்மையையும் அறியலாம். சிவன் - மங்கலகுணமுடையவன். சங்கரன் - இன்பஞ் செய்பவன். சம்பு - இன்பமாக்குபவன். உருத்திரன் - துன்பத்தை யோட்டுபவன். ஈசுவரன் - ஐசுவரியத்தை யுடையவன். ஆகவே, சிவபிரானொருவனே காமனை வெல்லவல்ல கடவுளாதல் காண்க. சிவபிரான் யோகிருந்த காலத்தில் மன்மதனுயிருடனிருந்தும் ஜீவகோடிகளுக்குள் ஸ்திரீ புருஷ ஸம்ஸர்க்கமில்லாமற் போய்விட்டது. அஃதொன்றே அப்பிரானது சர்வ சாமர்த்தியத்தை விளக்கப்போதாதா? மன்மதனும் அரிபிரமாதிகள் போல் கண்ணுதற் பெருமான் கைப்பம்பரமே யாவன் கண்டீர். 'நாகமார் சடிலத் தண்ண ளுற்பெருந் தவருமுய்ய - யோகுசேர் நிலைமை காட்டு மொருகணத்துயிரின் பொம்மல் - வாகைவே டானு நிற்க மையலும் புணர்ப்பு மற்ற-வாகையாலகில மெல்லா மவனென்கை தெரிந்த தன்றே', 'சிலையொடு பகழி வாடத் திருமதிக் குடைசீர் குன்ற - வலிதளர் வெய்தத் தென்றன் மறிகடற் சுறவு தூங்க - வலைபுரி யானை நீங்கி யாடன்மா மதனுமாதின் - கலவிய தொழிந்தா னென்னிற் பிறர்செயல் கழறற் பாற்றோ' என்றருளினர்கள் ஸ்ரீமத்கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்.

## 7. கரள கபள நாத்.

அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலின்.

*பொருள்:—யாராலும் அடக்குவதற்கு இயலாத ஆலாலவிஷத்தைச் சாப்பிடலானும் என்பது.*

மந்தர மலையை மத்தாக நட்டு வாசுகிப் பாம்பை நாணாகக் கோத்துத் திருப்பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களுங் கடைந்தார்கள். அப்போது அப் பாம்புக்கு அம்மலையோடு தேய்ப்புண்டதால் வருத்தமுண்டாயிற்று. அதனால் அதன் வாயிலிருந்து விஷம் வெளிப்பட்டது. அதன் கொடுமையால் அகிலலோகங்களுந் தகிப்புண்டன. அவ்விஷத்துக்கு ஆலாலமென்று பெயர். அதன் வெப்பத்தாற் கருகிய தேவர் சிலர். புகைந்த தேவர் சிலர். எவ்வகைத் துன்பமும் அடையாத தேவர் யாருமிலர். கருகிய தேவருள் விஷ்ணு வொருவர். பிரமா புகைந்த வருட் சேர்ந்தார். தேவரே அன்னராயின் அசுரர் கதியைச் செப்பவும் வேண்டுமா? அங்ஙனம் விஷவேகத்தால் வெந்த தேவர்கள் கயிலைக்கு ஓடிச் சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தார்கள். சிவபிரான் அவர்களுக்கு அபயங்கொடுத்தார். அப்பால் அவ்விஷம் தன்னை யெடுக்கவந்த ஆலால சுந்தரரென்பார் கையிற் சிறிதா யடங்கியது. அது சிவாஞ்ஞை. பரசிவப் பிரபு அவ்விஷத்தை அவரிடமிருந்து வாங்கியுண்டு தம் கண்டத்தமைத்தருளினார். காளகண்டரென்ற திருநாமம் அவருக்கு அதனால் வந்தது. தேவரெல்லாம் உய்ந்தனர். இக்கதை காஞ்சிப் புராணத்துள்ளது.

'பபேதோ ஹாலாஹலம் தஹந்தம் | தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவர் தஹிக்கும் ஹாலாஹல விஷத்தைக் குடித்தாரோ அந்தவுருத்திரர்க்கு நமஸ்காரம் ஆகுக) என்ற சரபமும், 'நீலக்ரீவ: (காலகூடவிஷதாரணேநீலவர்ணக்ரீவா யஸ்ய அஸௌநீலக்ரீவ:) |' (காலகூட விஷத்தைத் தரித்தலினால் நீலவர்ணமான கண்டம் எவர்க்கு உண்டோ அவர் நீலகண்டர் எனப்படுவார்) என்ற தைத்திரிய ஸம்ஹிதையும் அக்கதைக்கு மூலவசனங்கள்.

இனி அக்கதைபற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— கடலைக்கடைந்தபோது இந்திரன் முதலிய தேவர்கள் வாசுகியின் ஒரு நுனியைப் பிடித்துக் கொண்டார்கள். அசுரர்கள் மற்றொரு நுனியைப் பிடித்துக் கொண்டார்கள். சிவன் அரக்கர் பக்கமே பற்றியிழுத்தான். விஷ்ணு அப்போது அவ்விரு கூட்டத்தார்க்குந் தலைவராக விருந்தார். அத்தலைவரை விட்டு அரக்கரு ளொருவனாய அச்சிவனை விஷபானஞ் செய்தவனாகக் கொள்வது மதியீனம்.

ச:— "தேவர்களும் அஸுரர்களும் சமுத்திரத்திலிருக்கும் பெரிய ஆமையைப் பார்த்து, 'நீ இந்த மலைக்கு ஆதாரமாக இருக்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டனர். அந்த ஆமையும், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி மந்தர மலைக்கு முதுகு கொடுத்தது. அந்தக் கூர்மத்தின் முதுகிலிருந்த அந்த மலையை இந்திரன் வச்சிராயுதத்தினால் மேலே அமுக்கினன்.........வாஸுகியின் ஒரு கோடியாகிய முகத்தை அசுரசிரேஷ்டர்கள் பிடித்துக்கொண்டனர். .........நாராயணர் எங்கே யிருந்தாரோ அந்த வாலின் பக்கத்தில் தேவர்களெல்லோருஞ் சேர்ந்து நின்றனர்.......கடைந்தபோது.... விஷம் உண்டாயிற்று. தேவர்களும் அசுரர்களும் விஷத்தால் தகிக்கப்பட்டு, பயந்து வ்யஸன மடைந்து அவ்விடம் விட்டோடினர்.... பிரமா....ருத்ர மூர்த்தியைத் தியானஞ் செய்தார்...ருத்திரமூர்த்தி உலகங்களுக்கு ஹிதஞ் செய்யக் கருதி.........அந்த விஷத்தைப் பானஞ் செய்தார்" என்பது பாரதம் ஆதி 18-வது அத்தியாயம். 'விஷத்தைத் தேவர்கள் கண்டு...அருகிருந்த......பகவானிடத்தில் முறையிடாமல் ......கயிலாசத்திலிருந்த சிவனிடத்தில்......முறையிட்டார்கள்' என்பது கூரேச விஜய விஷபாநகட்சிக் குறிப்பு. நாராயணர் தலைவராக விருந்திலர்; வாசுகியின் வாலைப் பிடித்துக்கொண்டு தேவருடன் சேர்ந்திருந்தனர்; உருத்திரர் அசுரரிடஞ் சேர்ந்திலர்; அவர் அப்போது கயிலாசத்திலிருந்தார்; விஷபானஞ் செய்தது அவரே யென்பன அவற்றால் விளங்குகின்றன.

2. ஆ:—விஷ்ணு தம் ஹுங்காரத்தால் அவ்விஷவேகத்தை யடக்கினர். அங்ஙனம் வேகம் அடங்கிய விஷத்தைச் சிவன் சாப்பிட்டது அதிசயமன்று.

ச:—விஷ்ணுவே அவ்விஷத்தை யுண்டாரென்றும் அதனாலவருடம்பு முழுதுங் கருகிய தென்றும் பூர்வபட்சஞ் சொல்லும். 'விடமெலா முண்டதா லெம் விண்டுமெய் கருமை யானன்' என்றது கூரேச விஜயம். அவர் ஹுங்காரத்தால் அவ்விஷம் வேகமடங்கியது உண்மையானால் அவர் அதைத் தின்றதுங் கருகி அழகிழந்து துன்புறவேண்டாம். 'வருகனல்வல் விடந்தாக்கி மாயவன் வெண்ணிற மேனி - கருகினனன்று தொடங்கிக் கரியனெனப் பெயர் பெற்றான் - திருமலரோனுடற் பொன்மை தீர்ந்துபுகை நிறமுற்றான் - வெருவுதிசைக் கிறையோரும் வேற்றுரு வெய்தியழுதார்' என்ற காஞ்சிப் புராணத்தால் அவ்விஷம் வெளியிலிருந்தே தன் வேகத்தால் விஷ்ணுவைக் கருக்கிக் கிருஷ்ணனாக்கியது தெரிகின்றது. எப்படியும் அவ்விஷவேகம் விஷ்ணுவின் ஹுங்காரத்தால் அடங்காமை வெளி. ஆகவே, வேறெவ்வகையாலும் வேகமடங்காத அவ்விஷத்தையே சிவபிரா னருந்தித் தம்பெருமையை வெளிப்படுத்தின ரென்க.

3. ஆ:— விஷ்ணு அவ்விஷத்தின் பெரும்பகுதியைத் தாமே யருந்தி எஞ்சிய சிறு பகுதியையே சிவனிடங் கொடுத்தார். அச் சேஷத்தை யுண்ட சிவனுக்குச் சிரேஷ்டத்துவஞ் சித்தியாது.

ச:— பெரும் பகுதியை யுண்ட பெருமாள் சிறு பகுதியை மிச்சம் வைக்கக் காரணமென்ன? ஒரு பகுதியால் உடல் கருகி யதைக் கண்டதும் மற்றொரு பகுதியால் உயிருங் கருகி மரணமேற் படுமென்று பயந்தே அவர் அது செய்திருத்தல்வேண்டும். அப் படியானாலும் சிவபிரான் அச்சேஷத்தைச் சாப்பிட்டு அவ்விஷ்ணு வுக்கும் ஏனையோர்க்கும் உயிர்ப்பிச்சை தந்தாரென்பது தப்பாது.

4. ஆ:—விஷ்ணு உண்டு மீந்த சேஷத்தைச் சிவன் வேண்டிப் பெற்றானென்பதே தீர்வு.

ச:— விஷ்ணு விஷத்தை யுண்டு உடல் கருகித் துடித்ததைச் சிவபிரான் பார்த்திருந்தும் அவ்விஷத்தைத் தாமும் பானம்பண்ண ஆசைப்பட்டாரென்பது பொருந்தாது.

5. ஆ:— 'கேசி விஷஸ்ய பாத்ரேண யத்ருத்ரேணாபிபத்ஸஹ' என்ற சுருதி மயிரழகாற் கேசியென்ற பெயரையுடைய விஷ்ணு விஷத்தை ருத்ரனாகிய பாத்திரத்தால் உண்டாரென்று காட்டுகிறது. உருத்திரனே ஒரு பாத்திரமென்றே அது குறிப்பிட்டது காண்க.

ச:— கேசம் - ரோமம். கேசி - ரோமத்தை யுடையவன். எல்லாருடைய ரோமங்களையும் போன்றதே விஷ்ணுவினுடைய ரோமமும். நரை மயிரும் அவர் தலையிலுண்டு. ஆனால், சிவபிரா னுடைய ரோமம் வெகுவிதமான விசேஷங்களை யுடையது. ஆகை யாற்றான் அவர் ஹிரண்யகேசி ஊர்த்வகேசி வ்யோமகேசி யென் றெல்லாம் அழைக்கப்பட்டார். இன்னும் 'உலகத்தில் சூரிய சந் திரர்களுடைய பிரகாசிக்கின்ற காந்திகள் கேசம் என்று பெயரு டையவை. அவைகள் முக்கண்ணரிடத்தில் நிலைபெற்றிருப்பதால் அவர் வ்யோம கேசர் என்று சொல்லப்படுகிறார்' என்று அவரது வ்யோம கேசநாமத்துக்குத் துரோணம் 203-வது அத்தியாயம் வேறு பொருளுங் கண்டுளது. ஆகவே அச்சுருதியிலுள்ள கேசி பதம் சிவபிரானையே குறிக்கிறது. அதிலுள்ள ருத்ரபதம் ஆலால சுந்தரரைச் சுட்டும். அவர் சிவபிரானின் பிரதிபிம்பமாகலின் அங் ஙனம் உபசரிக்கப்பட்டார். அவர் விஷத்தைச் சுமந்து வந்ததாற் பாத்திரமானாரென்க. பூர்வபட்சம் ஹ்ருஷீகேச நாமத்துக்கும் வ்யோமகேச நாமத்துக்கும் போற் பொருள் விரிப்பதுண்டு. விஷ வேகத்தால் விஷ்ணுவுடல் வெந்து கருகிய பிறகும் அப்பதம் அவ ருக்கு அவ்வருத்தத்தோடு பொருந்துவ தெங்ஙனம்? ஒருக்கால் விஷ்ணு வெள்ளையா யிருந்தகாலத்தில் அவருக்கு அந்த ஹ்ருஷீ கேசநாமம் பொருந்தி யிருக்கலாம்.

6. ஆ:— விஷவேகத்தால் விஷ்ணுவுடம்பு கருகியது இழிவாயின் சிவன் கண்டங் கருகியதும் இழிவாகும்.

ச:— விஷ்ணு வுடம்பு பிராகிருதம். ஆகலின் அது இரத்தம் மாமிசம் கருமயிர் நரைமயிர் காதுக் குறும்பி முதலிய அசுத்தங்களெல்லாம் நிறைந்தது. 'வன்கபான் மிசை - யூறுசெங்குருதிபாணிறைத்த காரணந்தனை', 'புண்புரிந்த வாகத்தான்' என்பன பிரபந்தம். 'திருமாலானவர் ஒன்று வெண்மையும் மற்றொன்று கருமையுமாகிய இரண்டு கேசங்களைத் தலையிலிருந்தெடுத்தார்' என்பது பாரதம் ஆதி 214வது அத்தியாயம். 'விஷ்ணுவின் காதுக் குறும்பியிலிருந்து பிறந்து' என்பது ஸபா 44வதும், 'பிரமதேவருக்குப் பிதாவும் மஹாத்மாவுமான புருஷோத்தமர், தம்முடைய கர்ணமலத்தினின்று உண்டான......மதுவென்கிற மஹாஸுரனையும்... கொன்றார்' என்பது பீஷ்மம் 67வதும் அத்தியாயங்கள். விஷம் அத்தகைய வுடம்பிற் கலந்து அதனைக் கருக்குதல் விஷ்ணுவுக்கு இழிவேயாகும். சிவபிரான் திருமேனி ஞானமயம். ஆகலின் அது பளிங்கு போன்றது. விஷம் அதனைப் பாதிக்க ஏதுவொன்றுமில்லை. விஷம் நீல வண்ணம். அது அப்படிக மிடற்றில் நின்று தன்னிறத்தை வெளியிற் காட்டிற்று. அவ்வளவே. மேலும் வேதத்தில் விஷத்தாலான நீலகண்டம் வந்திக்கப்பட்டதுபோன்று விஷத்தாலான கரிய மேனி வந்திக்கப்படவில்லை. விஷத்தாற் கருகிய மிடறுடையா னென்று சிவபிரானைத் துதிக்கும் 'பெருகும் புனலண்ணமலை பிறை சேர்கடனஞ்சைப் - பருகுந்தனை துணிவார் பொடியணிவாரது பருகிக் - கருகும் மிடறுடையார் கமழ்சடையார் கழல் பரவி - யுருகும் மனமுடையார் தமக்குறு நோயடையாவே' என்ற தேவாரம்போல் விஷத்தாற் கருகியவுடலானென்று விஷ்ணுவைத் துதிக்கும் பிரபந்தமுண்டா?

7. ஆ:— விஷ்ணுவின் மந்திரத்தைச் செபித்துச் சிவன் விஷமுண்டான்.

ச:— விஷ்ணுவே விஷவேகத்தாற் கருகியது பிரத்தியக்ஷம். ஆகலின் அவர் மந்திரம் சிவபிரானைக் காத்ததென்பது வெறுஞ்சொல்.

8. ஆ:— கருடமந்திர ஜபத்தாற் சிவன் விஷத்தைத்தின்றான்.

ச:— சிவபிரானே ஹநுமானாக வவதரித்தா ரென்று பூர்வபட்சஞ் சொல்லும். அந்த ஹநுமான் கருடனைக் கர்வபங்கஞ் செய்தானென்ற கதையும் அதற்குடன்பாடு. அவதார மூர்த்தியாகிய ஹநுமானால் அவமானமடைந்த கருடனின் மந்திரத்தை மூலமூர்த்தியாகிய சிவபிரான் செபித்தாரென்பது சிரிப்புடையதே. 'அஸுரச்ரேஷ்டனை காலநேமி.........வருணன்......முதலான

தேவர்களைத் தன் வன்மையினால் ஜயித்து அவர்களின் வேலைகளையெடுத்துக்கொண்டான்' என்ற ஸபா 51வது அத்தியாயத்தாலும், ''கார்த்தவீரியார்ஜுனன்...ஸமுத்திரத்தின் மீது...பாணங்களை.... எய்தான். ஸமுத்ரராஜன் அவனுக்கு நமஸ்காரஞ் செய்து கை கூப்பிக்கொண்டு, 'வீரனே! பாணங்களை விடாதே......பிரபுவே!... அபயங்கொடு' என்று கேட்டான்'' என்ற ஷை 96வது அத்தியாயத்தாலும் வருணனது இழிநிலைவிளங்குகிறது. அந்தப் பர்வத்து 9-வது அத்தியாயம் 'வினதையின் புத்திரரான கருடனும் அவர் வேலைக்காரரும்......வருணனைச் சலிப்பின்றிப் பணிகின்றனர்' என்பதால் சாமானியனாகிய வருணனைப் பணியும் அதிசாமானியனே கருடனென்பது விளங்கும். அதன் 51வது அத்தியாயம் 'கால நேமி........கருடனை......அடித்தான்......கருடன் களைத்திருந்ததைக் கண்டு' என்று கருடன் சாமார்த்தியத்தை இவ்வளவுதானென்று அளந்தும் விட்டது. 'கருடன்........சிறகுகளினாலும் மூக்கினாலும் நகங்களினாலும் கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் அடிப்பதற்கு ஆகாயத்திலிருந்து இறங்கினான்' என்ற ஆதி 253வது அத்தியாயம் கருடனுக்குத் தன் தலைவனையும் எதிர்க்கும் மயக்கமுஞ் செருக்கும் உள்வென்கிறது. ''மகாதேவர் அவர்கள்மேல் கிருபை வைத்து, 'அமிருதத்தைக் கொண்டுவரும் கருடனை உங்கள் தவத்தினால் உண்டாக்குவீர்கள்' என்று சொன்னார்'' என்ற அநுசாஸனம் 45வது அத்தியாயத்தில் கருடஜனனமே சிவாநுக்ரஹலப்தமென்பது தெரிகிறது. இன்னவியல்புடைய கருடனின் மந்திரத்தைச் சிவபிரான் செபித்தாரென்பது கீழ்களின் பேச்சேயாகும்.

9. ஆ:— இரணியன் ஏவிய அட்டநாகங்களாற் பிரகலாதர் கடியுண்டும் அவ்விஷத்தாற் செத்திலர். அஃதறிந்தோர் சிவன் ஒரு நாக விஷத்தைத் தின்றானென்பதை விசேடமாகக் கூறார்.

ச:—பிரகலாதன் விஷ்ணுவினமிசம். 'திருமால் புவிமேற்றனது கலையாலே', 'கனகன் புதல்வனெனவுலகங் கருதும் பிரகலாதனப்பேர் - வனைய விருக்குஞான்று' என்பதும், 'கதிரவன் மண்டலச் சோதி யநந்தமெனுந் தன்கலையோர் கலையினாலே - வதிபிரகலாதனை யிரணியற்கு மைந்தனென வகுத்தான்' என்பதுங் கூரேச விஜயம். விஷ்ணு முழுப்பொருள். பிரகலாதன் அதிலொருகூறு. ஆலால விஷத்தை விஷ்ணு தின்றாரென்பதும் அதனால் அவருடம்பு கருகிக் கெட்டதென்பதும் பூர்வபட்சம். அட்டநாக விஷத்தாற் பிரகலாதனுடம்பு கெடவில்லையென்றும் அது சொல்லும். அருகிருந்தவர்களும் பாதிக்கப்பட்டிலர். அங்ஙனம் கூற்றுப் பொருளையும் ஹிம்சியாத அட்டநாக விஷத்தினும் முழுப் பொருளையே ஹிம்சித்த ஆலால விஷம் பல் கோடி மடங்கு கொடியதென்பது நன்கு போதரும். ஆகவே, தன்வெளிப்பாடு மாத்திரத்தில் அரி

பிரமாதி ஸமஸ்த தேவர்களையும் வாட்டிப்பிடித்த அவ்வாலாலத்தைச் சிவபிரான் நுகர்ந்தது பெரு விசேடமேயா மென்க. 'த்ரைலோக்யம் மோஹிதம் யஸ்ய கந்தமாக்ராய தத்விஷம் | ப்ராக்ரஸல் லோகரக்ஷார்த்தே ப்ரஹ்மணோவசநாச்சிவ: | ததார பகவாந் கண்டே மந்த்ர மூர்த்திர் மஹேச்வர: | ததாப்ரப்ருதி தேவஸ்து நீலகண்ட இதி ச்ருதி: |' (மூன்று லோகங்களும் அவ்விஷகந்தத்தால் மோகமடைந்தன. லோகசம் ரக்ஷணார்த்தம் பிரமாவின் பிரார்த்தனையால் மந்திர மூர்த்தியும் மகேசுவரரும் பகவானுமாகிய சிவபிரான் அவ்விஷத்தைத் தம் கண்டத்திற்றரித்தார். அதுமுதல் அவர் நீலகண்டரானார். இது சுருதி) என்பது பாரதம்.

10. ஆ:— விஷத்தைப் போதைக்காகப் பானம் பண்ணுஞ் சாம்பிரதாயம் சித்தர்களுக்கும் உண்டு. அங்ஙனமாகச், சிவன் அதைப் பானம் பண்ணியது சாமர்த்திய மன்று.

ச:—அப்படியானால் அவ்விஷத்தை விஷ்ணு உண்டுவிட்டாரென்று பூர்வபட்சம் ஏன் பெருமை கூறிக்கோடல்வேண்டும்?

11. ஆ:— பூதனையின் ஸ்தன்ய விஷத்தைக் கிருஷ்ணர் குடித்துஞ் செத்திலர். அதனினுங் கொடியதா ஆலாலம்?

ச:— சருவான்மாக்களுக்குங் கேடு செய்ய வல்லது எதுவோ அதுவே விஷம். அவ்வாறு செய்தது ஆலாலமொன்றே. பூதனையின் ஸ்தன்ய விஷம் யாரையும் புண்படுத்தியதில்லை. ஆகையால் கிருஷ்ணரும் அதனால் மொத்துண்டிலர். கிருஷ்ணர் வயிறு அந்த விஷத்தைச் சீரணஞ் செய்துகொள்ள வல்லதாயிருந்தது. ஆலாலம் மூல விஷ்ணுவையே கருக்கியது. கிருஷ்ணர் அவ்விஷ்ணுவின் ஒரு மயிர். 'ஆரணங் கலைகட் கெட்டா தகன்றபூரணஞ மாகி - நாரணன் சிரத்தி லார்ந்த நளிருரோ மத்திஞென்று - வாரணந் தன்னிற் போட மால்கலை யாகப் பார்மேற் - காரண னவதரித்தான் கண்ணனுய் விண்ணோர் போற்ற' என்றது கூரேச விஜயம். ஸ்தன்யவிஷம் அக்கிருஷ்ணரை வருத்தாமையால் அம்மூல விஷ்ணுவின் மயிரைத் தானும் அசைக்கவில்லை யென்பது பெறப்படும்.

12. ஆ:—சிவன் விஷமுண்டபோது உமை அவன் கழுத்தைப் பிடித்தாள். அதனால் அவ்விஷம் அவன் கழுத்தில் நின்று விட்டது. அது அவன் வயிற்றிற் போயிருந்ததானல் அன்றே செத்திருப்பான். அவளும் அமங்கலையாயிருப்பாள்.

ச:— 'ஈசுவரர், லோக ஹிதத்திற்காக அந்த விஷத்தைத் தம் கழுத்தினுள் நிறுத்தினர்' என்ற ஆதி 18வது அத்தியாயத்தால் பார்வதியார் கழுத்தைப் பிடித்தாரென்பது அடிபட்டது. சிவ

பிரான் வயிறு அகில லோகங்களுக்கும் ஆகாம். அவர் விஷத்தைத் தம் வயிற்றுட் செலுத்தியிருந்தாராயின் அவை யெல்லாம் எரிந்து போயிருக்கும். ஆகையாற்றான் அவர் அதைக் கண்டத்தில் வைத்தருளினர். அம்மேற் கோளிலுள்ள 'லோகஹிதத்திற்காக' என்பதைக் கவனித்திடுக. அரிபிரமாதியனைவருஞ் சாகின்றவர். லக்ஷ்மி சரசுவதியாதி யனைவரும் அமங்கிலிகளாக வேண்டியவர்கள். பார்வதீபதி யொருவரே சாகாதவர். பார்வதீ தேவியாரொருவரே அமங்கிலியாகாதவர். ஆலகால சரிதமே அவ்விரண்டற்கும் போதுமான சான்றாகும். 'எவள் மஞ்சள், மை, புஷ்பம் முதலிய ஸுமங்கலி லக்ஷணங்களோடு கூடியவளாயிருந்து பர்த்தாவின் பாதங்களில் மனம் வைத்து அவன் கொடுத்த தர்ப்பண ஜலத்தைப் பானஞ் செய்பவளாகக் கணவன் முன்னிலையில் மரணமடைகிறாளோ அவள் பார்வதீ லோகத்தை யடைகிறாள். பார்வதிக்குத் தோழியாயிருந்து அந்தப்பர்வதராஜ கன்னிகையுடன் கூட மகிழ்ந்திருக்கிறாள்' என்ற ஆதி 172-வது அத்தியாயத்தால்பார்வதீ தேவியார் சர்வமங்களை யென்பது விளங்கவில்லையா?

---

## 8. கால கர்வா பஹறத்வாத்.

### தென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின்.

பொருள்:—தெற்குத் திசையின் கடவுளாகிய எமனையுதைத்து அவனுயிரை வாங்கலானும் என்பது.

மிருகண்டு என்ற முனிவர் தமக்கு நெடுங்காலம் பிள்ளையில்லாமலிருந்ததனாற் சிவபிரானைக் குறித்துத் தவஞ்செய்தார். சிவபிரான் பிரசன்னராகி அவரைப்பார்த்து 'உனக்கு நூறுவயதுவரை சீவித்திருக்குந் துஷ்டப் பிள்ளை வேண்டுமா? பதினாறு வயதுவரையே சீவித்திருக்குஞ் சிஷ்டப் பிள்ளை வேண்டுமா?' என்று கேட்டனர். அவர் சிஷ்டப் பிள்ளையையே வேண்டினார். சிவபிரான் அதனை யருளி மறைந்தார். சில காலத்துக்குள் அவருக்குப் பிள்ளை யொன்று பிறந்தது. அதற்கு மார்க்கண்டேய ரென்று பெயர். மார்க்கண்டேயருக்கு வயது பதினாறு வந்தது. அப்போது அவர்க்கு மரணஞ் சமீபித்ததைக் குறித்துப் பெற்றோர் வருந்தினர். மார்க்கண்டேயர் அதனைத் தெரிந்து பெற்றோரைத் தேற்றி மரணத்தைத் தவிர்த்துக்கொள்ளச் சிவபிரானை நோக்கித் தவஞ் செய்யச் சென்றார். அவர் செய்த தவமாவது சிவலிங்க பூசை. ஒருநாள் அவர் அப்பூசையை வழக்கம்போற் செய்துகொண்டிருந்தார். அன்று அவருடைய ஆயுள் முடிவு காலம். யமன் வந்து அவர் மேற் பாசத்தை வீசினன். அவர் பயந்து சிவலிங்கப்பெருமானைத்

தம் முறுகிய பத்தி மேலீட்டால் இறுகத் தழுவிக்கொண்டார். பக்தபராதீனராகிய பரசிவப் பிரபு அச்சிவலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு எமனை யுதைத்துக் கொன்று வீழ்த்தினர். மார்க்கண்டேயருக்கு எமபயம் அன்றோடொழிந்தது. அவர் அப்போது சிவபிரானை நோக்கி நிகழ்த்திய துதிகள் அநந்தம். சிவபிரான் மார்க்கண்டேயரின் பத்திக்கு மெச்சி 'அன்ப! உனக்குச் சிரஞ்சீவித்துவத்தைத் தந்தோம். இன்றுமுதல் நீ என்றும் பதினாறுவயதுடனேயிருந்து எமது ஞானனந்தத்தை யநுபவிப்பாயாக' என்று வரமருளி மறைந்தார். மார்க்கண்டேயரின் சிரஞ்சீவித்துவத்தால் அவர் பெற்றோர்க்கு மகிழ்ச்சி யுண்டாயிற்று. எமனும் சிவகடாக்ஷத்தால் மீண்டும் உயிர்பெற்றுத் தன்னுலகுக்குப் போனன். இக்கதை கந்தபுராணத்துள்ளது.

'யோவாமபாதேநஜகாந காலம் கோரம்......தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவர் இடது பாதத்தாற்கோரமான எமனை உதைத்தாரோ அந்த ருத்திரர்க்கு நமஸ்காரம் ஆகுக) என்னும் சுரபம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:—எமன் செத்தால் ஞானம் கருமம் பிரகிருதி மாயை உயிர் ஆனந்தம் என்ற ஆறுபொருள்களும் அழிந்துவிடவேண்டும். ஆனல் அவை அழியா. ஆகலின் அவனுஞ்சாகமாட்டான். அவனைச் சிவன் கொன்றானென்பதென்னை?

ச:—இது மொட்டந்தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவதாகும். அந்தப் பொருள்களுக்கும் எமனுக்கும் அப்படிப்பட்ட சம்பந்தம் எதுவுமில்லை. எல்லாத் தேவர்களுஞ் சில பல காரியங்கள் நடைபெறவே சிவபிரானல் நியமிக்கப்பட்டவர்கள். அவர்கள் பிறராற்றண்டிக்கப்பட்டோ தங்களிஷ்டப்படியோ அவ்வக்காரியங்களினின்றும் இடையிடையே விலகுவதுண்டு. அவர்கட்கு நியமிக்கப்பட்ட காரியங்கள் அப்போது நடைபெறாமலும் போம். உலகமும் க்ஷீணிக்கும். உலகமாவது அந்த ஆறு பொருள்களின் தொகுதியே. 'இந்தச் சந்திரன் க்ஷீணித்துச் சிறிதே மிகுதியுள்ளவனாகக் காணப்படுகிறான்.........இவனுடைய க்ஷயத்தினாலேயே பிரஜைகளும் கொடிகளும் ஓஷதிகளும் பற்பல வித்துக்களும் க்ஷயத்தை யடைந்தன; அவ்வாறே மனிதர்களும் க்ஷீணித்தார்கள்' என்ற சல்யம் 36வதும், 'அக்னி பகவான் ஒளிந்து விட்டான்...... எல்லாப் பிராணிகளுக்கும் க்ஷயமுண்டாகி விட்டது' என்ற 48 வதும் அத்தியாயங்களால் மேலுண்மை விளங்கும். அப்படியே எமனும் ஒரு சமயம் தன்னிஷ்டப்படி தன் காரியங்களினின்றும்

விலகியசெய்தி 'யமன் ஸத்ரயாகத்திற்காகப்பிரவர்த்தித்திருக்கிறான். அதனாலேதான் இந்த மனிதர்கள் இறப்பதில்லை......அந்த வைவஸ்வதன் அந்தக் காரியத்தை முழுதும் நிறை வேற்றின பிறகு, இந்த மனிதர்களுக்கு முடிவு காலம் அவசியம் வரும்' என்று ஆதி 214வது அத்தியாயத்திற் பிரசித்தம். அந்த ஆறு பொருள்களுக்கும் அப்போது நேர்ந்த கதியே அவ்வெமன் சிவபிரானலொறுக்கப் பட்டுத் தன் காரியங்களினின்று விலகிய பிறகும் ஆமென்க.

எல்லாத் தேவர்களும் பாவஞ் செய்யக் கூடியவர்களே. விஷ்ணு அதிதியைக்கொன்றும், இந்திரன் அகலியையைக் கலந்தும், பிரமன் முருகக் கடவுளை அவமதித்தும் பாவஞ் செய்தனர். அவர்க்கெல்லாம் அவ்வப்போது தண்டங் கிடைத்தது. எமனும் சிவபத்தர்மேற் பாசம் வீசிப் பாவஞ் செய்தான். ஆகலின் அவனுக்குச் சிவபிரானல் மரணமாயிற்று. அப்பாவத்துக் கதுவே தண்டனையாதல் சாஸ்திரசம்மதம். எம வதத்தால் அவன் சத்ரயாகத்திற் போலப் பூபாரம் அதிகப்பட்டது. பூமிதேவி அதைச் சுமக்கலாற்றுதல்லற்பட்டாள். அவள் கணவராகிய விஷ்ணு உடனே கயிலை சென்று சிவபிரானிடம் அப்பாரந் தவிர்த்தருளப் பிரார்த்தித்தார். அச்சங்கரரும் இரங்கி அவ்வெமனை யெழுப்பிச் சிவபத்தர் மேற் செல்லாதேயென எச்சரித்து அவனுலகுக்கனுப்பினார். பிரமனைச் சிறை வைத்து அவன் றொழிலைச் சுப்பிரமணியப் பெருமான் செய்தார். அப்படியே சிவபிரானும் எமனைக் கொன்றபின் அவன் றொழிலைச் செய்திருப்பர். பூமிதேவியின் பாப கர்மம் அதற்கிடங் கொடாமையால் அவர் அது செய்திற்றில ரென்க.

2. ஆ:—சில சமயங்களில் அரக்கர்கள் தேவர்களை ஹிம்ஸிப்பதுண்டு. அது அவ்வரக்கர்களுக்குப் பெருமையாமா? அப்படியே சிவனும் எமனை ஹிம்ஸித்திருக்கலாம். அது அவனுக்குப் பெருமையாகாது.

ச:— தேவர்கள் பிழை செய்யாமலிருக்கும்போது இராக்கதர்கள் அவர்களை ஹிம்ஸிப்பார்கள். அது அவர்களுக்குப் பெருமையாகாது. ஆனல் எமன் பிழை செய்தான். சிவபிரான் அவனைக் கொன்றார். அக்கொலை அப்பிழைக்குத் தண்டனை. அதனைப் புரிந்தது சிவபிரானுக்குப் பெருமையேயாகும்.

3. ஆ:— ஒரு சமயம் சிவனுக்கும் எமனுக்குஞ் சண்டை நடந்தது. அதிற் சிவன்றலையை எமன் அறுத்தான். அதை மறைக்கப் பார்ப்பவனே எமனைச் சிவன் கொன்றானென்பான்.

ச:— 'அப்படியே ஸ்ரீஸ்வாமியானவர்......ருத்ரனை யழைத்து நீர் ஸம்ஹாரத் தொழிலைப் பண்ணக் கடவீரென்று......நியமிக்க,... சிவன்......இந்தக் கொடிய வியாபாரம் அடியேனுக்கு நியமிக்க

வேண்டா மென்று......அழுதயின் பேரில்..........ஆகில் நீர் சூரிய னைப் பார்க்கக் கடவீர், அவனிடத்தில் நின்றும் வைவஸ்வத மனு வென்கிற இயமன் உண்டாவான், அவனைக் கொண்டு நித்திய ஸம் ஹாரங்களைப் பண்ணுவிக்கக் கடவீர், முடிவில் நீர் சுதாவாய் ப்ரளய கால ருத்ரரூபத்தைத் தரித்து ஸர்வ சம்ஹாரம் பண்ணக் கடவீ ரென்று நியமித்தார்' என்பது கூரேச விஜயம் அடிமுடி தேடின கட்சிக் குறிப்பிற் கண்டது. இந்தக் குறிப்பாலும் சிவபிரான் சர்வ சங்காரி யென்பதும் எமன் அன்றுட சங்காரி யென்பதும் விளங் கும். அங்ஙனமாயின், சர்வ சங்காரியின் றலையை அவரிற் கீழிட்ட அன்றுட சங்காரி வாங்க முடியுமா?

4. ஆ:— 'யஸ்யப்ரஹ்மச க்ஷத்ரஞ்சோ பேபவதவோதந:' என்ற வாக்கியத்தால் 'நாராயணனுக்குப் பிரஹ்மாவும், தாமச குணத்தாலே க்ஷாத்திரத்தை வகித்த சிவனும் அன்னஸ்தானமாகி றார்கள்' என்பது தெரிகிறது. நாராயணனற் சோறுபோலுண்ணப் படுகிற சிவன் எமனைக் கொன்றா னென்பது மெய்யாகாது.

ச:— அந்த வாக்கியத்தில் 'நாராயணனுக்கு' என்பதற்கும், 'சிவனும்' என்பதற்கும் பதங்களில்லை. 'க்ஷத்ரஞ்ச' என்பதற்குச் சிவபிரானென்று பொருள்கொள்ளப்படுகிறது. அது பொருந்காது. க்ஷாத்திரத்தை வகிப்பது க்ஷத்திரிய தருமம். ஆகலின் 'விஷ்ணுர் வைக்ஷத்திரிய:' (விஷ்ணு க்ஷத்திரியர்) என்றபடி அப்பதம் விஷ் ணுவையே குறிக்கும். சிவபிரானே தேவருட் பிராமணர். ஆகலின் பிரமனோடு விஷ்ணுவே சங்கரிக்கப்படுகிறாரென்ற பொருளே வாஸ் தவமாகும். அவ்விருவரும் ஒழியவே எஞ்சி நின்ற சிவபிரானே சங்காரியாவர். 'அந்நம்ப்ரஹ்மாரஸோ விஷ்ணுர் போக்தா சைவ மஹேஹச்வர:' (அன்னம் பிரமன், சாரம் விஷ்ணு, புசிப்பவர் மஹேசு வரர்) என்ற மந்திரத்தையும் ஈண்டுக் கவனித்திடுக.

'ஏக ஏவருத்ரோ நத்விதீயாயதஸ்து: | ய இமாம்லோகாநீசத ஈசநீயு: ஜநநீயு: ப்ரத்யங் ஜநாஸ்திஷ்டருத்ர:' (ஒருவனேஉருத்திரன். இரண்டாமவனில்லை. எவன் இந்த வுலகங்களை ஈசனிகளாலும் ஜனனிகளாலும் ஆளுகின்றான். ஜனங்களிடத்துப் பிரத்யக்ரூபனு யுள்ளான். மஹாசம்ஹாரகாலத்தில் எல்லாவற்றையுந் தன்னுள் ளொடுக்கிக்கொள்ளுகிறான். அதனாலே ஏக ருத்திரனெனப்படு கிறான்) என்பது அதர்வசிரஸ். 'யஸ்ஸர்வோ பரமகாலே ஸர்வா நாத்மந் யுபஸம்ஹ்ருத்யஸ் வாத்மா நந்தேஸு கேமோததே ப்ரகாச தேவாஸதேவ:' (பராந்த காலத்திலே எல்லாவற்றையும் தம்முள் உபஸம்ஹாரஞ் செய்து தமது ஆத்மாநந்த சுகத்தில் சந்தோஷித் திருப்பவர் எவரோ அவரே தேவர்) என்பது தக்ஷிணமூர்த்தி. 'யோந்தகாலே ஸர்வலோகாஞ்ஜஹார' (அந்திய காலத்தில் ஸர்வ

லோகங்களையும் சம்ஹரிப்பவருமாம்), 'யோக்நிஸ்புலிங்கேந லலாடஜேந ஸர்வம் ஜகத் பஸ்ம ஸாத்ஸம்கரோதி | புநச்ச ஸ்ருஷ்ட்வா புநரப்ய ரக்ஷத்தேவம் ஸ்வதந்த்ரம் ப்ரகடீகரோதி தஸ்மை ருத்ராய நமோ அஸ்து |' (யாருடைய நெற்றிக் கண்ணிலிருந்துண்டான நெருப்புப் பொறியினால் எல்லா வுலகங்களும் பஸ்மமாக்கப்படுகின்றனவோ.........அந்த வுருத்திரர்க்கு நமஸ்காரம் ஆகுக) என்பன சரபம். 'பஞ்சப்ரஹ்மோபஸம்ஹாரம் க்ருத்வா' (பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்ற ஐந்து தேவர்களையும் ஒடுக்கிக் கொள்ளுபவன்) என்பது பஞ்சப்ரஹ்மம். இவையெல்லாம் சிவபிரானே சர்வத்தையுஞ் சங்கரிக்குங் கர்த்தா வென்பதைத் நன்கு காட்டும்.

5. ஆ:—'ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம்' என்ற சுருதி சிவனை விஷ்ணுக்கு ஊறுகாயாக்கவில்லையா?

ச:— சிவபிரானுக்கே மிருத்யுஞ்ஜயன் என்ற பெயருண்டு. 'கிரீசோ கிரிசோம்ருட: ம்ருத்யுஞ்ஜய:' என்றது அமரம் ம்ருத்யு-எமனை. ஜயன் - ஜயித்தவர். அவர் சிவபிரானே. இவ்வுண்மைக்கு விரோதமாக ம்ருத்யு என்பதற்குச் சிவபிரானெனப் பொருள் கொண்டு அவரை விஷ்ணுவுண்டாரென்றல் மடமை. அவ்வாக்கியத்தில் எமனே ஊறுகாய். சிவபிரானே உண்டவர்.

6. ஆ:— 'தஸ்யயேந்த்ராவம்ரீருபேண - தநுர்ஜ்யாமாசித்ய ஸ்வயம் ததாத்தித் மத்ரஸ்யசிரஸ்த்வதேவா ஸப்ரவர்கோ பவத் ருத்ரஸ்ய சிரப்ரதிதாதி' என்ற மந்திரத்தால் 'தேவர்கள்யாகஞ் செய்தார்கள். அவ்வக்கினியினின்றும் ஒரு வில் வந்தது. அதைச் சிவன் பெற்றுத் தேவர்களை ஹிம்சித்தான். பிறகு அவன் வில்லின் ஒரு நுனியைத் தரையில் ஊன்றி மற்றொரு நுனியைத் தன் முகவாய்க் கட்டையால் அழுத்திக்கொண்டு நின்றான். இந்திரன் கறையான் வடிவெடுத்து வில் நாணைக் கத்தரித்தான். வில் நிமிர்ந்தது. சிவன்றலை யறுந்து போயிற்று' என்பது தெரிகிறது. இப்படிப் பட்ட சிவனுக்கு எமனைக் கொல்லுந் திறம் ஏது?

ச:— பூர்வபட்சத்தால் அம்மந்திரத்தின் யதார்த்த பாடங் கெடுத்து ஆளப்பட்டிருக்கிறது. அதிலுள்ள ருத்ரபதத்துக்குச் சாயணீயம் 'ருத்ரோ நாமா மாத்ராருணகேது காக்நி:' என்று கூறி ஆருணகேதுகாக்கினி யெனப் பொருள் விரித்து அச்சரிதத்தை அக்னிமே லேற்றியிருப்பது சர்வப்பிரசித்தம். ருத்ர பதத்துக்கு அக்கினியென்றுஞ் சிவபிரானென்றும் பொருளுண்டு. சுருதியில் அப்பதத்தால் வருஞ் சிறப்பை யெல்லாம் அக்கினி தலையிலும் இழிவை யெல்லாஞ் சிவபிரான் றலையிலுஞ் சுமத்திச் சிரிப்பது பூர்வபட்சத்துக்கு வழக்கம். பொருள்கோள்முறை தெரிந்த புலவர்

சீ யென்பரே யென்ற லஜ்ஜை அதற்கு ஏது? 'அந்த நீலகண்டரோ அவை அனைத்தையும் ஓட்டிவிட்டும் நகைத்தார் வில்லின் நுனியைப் பிடித்துக்கொண்டு பிறகு தேவர்களைத் துடித்தார். பிறகு, தேவர்களால் சொல்லப்பட்ட வாக்கானது அந்த வில்லினுடைய நாண் கயிற்றை அறுத்தது........அந்த வில்லானது விரைவாக நாண் அறுக்கப்பட்டதாகியது. பிறகு, தேவர்கள் வில்லையிழந்தவரான தேவ சிரேஷ்டரை யஜ்ஞத்துடன் கூடச் சரணமடைந்தார்கள். பிரபுவும் அருள் புரிந்தார்' என்று ஸௌப்திகம் 18-வது அத்தியாயத்திற் சிவபிரான் வில் அறுபட்ட சரிதமொன்று கேட்கப்படுகிறது. அதில் அவர் தலைபோன கதையில்லை. வில் அறுபடுமுன் ஓட்டமெடுத்த யஜ்ஞயமும் தேவர்களும் அறுபட்டபின் அவரைச் சரணமேயடைந்தார்கள். அவரும் அவர்களுக்கு அருள் புரிந்தாரென்றே அது விளக்குகிறது.

7. ஆ:— 'கண்டுந் தெளிந்துங் கற்றார் கண்ணற் காளன்றி யாவரோ - வண்டுண் மலர்த் தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழுநா - ளிண்டைச் சடைமுடி யீசனுடன்கொண்டு சாச்செல்லக்கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்றதுணர்ந்துமே' என்ற சடகோபர் பாட்டுச் சிவன் மார்க்கண்டேயனை விஷ்ணுவிடம் அழைத்துக்கொண்டு போய்ச் சிரஞ்சீவித்வத்தை வாங்கிக் கொடுத்தானென்கிறது. ஆகையால் மார்க்கண்டேயனுக்குச் சிரஞ்சீவித்வங் கொடுத்தவர் விஷ்ணுவேயாவர். சிவனல்லன்.

ச:— தக்ஷிணாமூர்த்தி 'ப்ரஹ்மாவர்த்தே மஹாபாண்டீர வடமூலே மஹாஸத்ராய ஸமேதா மஹர்ஷயச் சௌநகாதயஸ் தேஹ ஸமித்பாணய ஸதத்வஜிஜ் ஞாஸவோமார்க்கண்டேயம்சிரஜீவி நமுபஸமேத்ய பப்ரச்சு:, கேநத்வம்சிரஜீவ்யஸி கேந வாநந்த மநுபவஸீதி, பரமரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநே நேதிஸஹோவாச, கிம்தத்பரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநம், ஸஹோவாசயேந தக்ஷிணாமுகச் சிவோபரோக்ஷீக்ருதோபவதி தத்பரம ரஹஸ்ய சிவதத்வஜ்ஞாநம்' (பிரஹ்மாவர்த்தத்தில் மஹா பாண்டீர மென்னுமால மரத்தடியில், மஹா ஸத்திர மென்கிற யாகத்தின் பொருட்டுக் கூடிய சௌநகர் முதலான மஹரிஷிகள் குருசிச்ருஷார்த்தமாக ஸமித்துக் கட்டைகளைக் கையில் தரித்தவர்களும், தத்துவத்தை யறியவேண்டு மென்கிற விச்சையுள்ளவர்களுமாகிச் சிரஞ்சீவியான மார்க்கண்டேயரை யடைந்து பிரச்னஞ் செய்தார்கள். எதனால் நீர் சிரஞ்சீவியாக விருக்கின்றீர்? எதனாலானந்தத்தை யனுபவிக்கின்றீர்? என்று கேட்டவளவில் மார்க்கண்டேயர் சொல்லுகிறார் அது பரமரஹஸ்ய சிவதத்வ ஞான ஸித்தியாலென்ற வளவில் பின்னும் அந்தப் பரமரஹஸ்ய சிவதத்வஜ்ஞானமெது வென்று பிரசினித்தவர்களுக்குத் திரும்பவுஞ் சொல்லுகிறார். எதனால் தக்ஷிணாமுகரான சிவபெருமான் அப

ரோசுஷமாகப் பவிப்பாரோ, அதுவே பரம ரஹஸ்யமான சிவதத்வ ஞானமென்றறிவீர்கள்) என்கிறது. சிவதத்வஞானமே மார்க்கண்டேயர்க்குச் சிரஞ்சீவித்வத்தைத் தந்ததெனன்பது அவ்வுபநிஷத்தில ஸ்பஷ்டம். அச்சுருதியை விரோதிக்கும் அச்சடகோபர் பாட்டு ஸுக்துக்கள் சந்நிதியிற் கனப்பெறுதல் யாங்ஙனம்? "மஹேச்வரர் எதிரில் தோன்றினார். சிவனைப் பார்த்து மார்க்கண்டேய முனிவர் நமஸ்கரித்தார். பலவித ஸ்தோத்திரங்களால் துதித்தார். மஹாதேவர் அந்த மஹாமுனிவரை, 'முனியே! உனக்கு மங்களம். வரத்தைக் கேள்' என்று சொன்னார். பரமாத்மாவான அந்தச் சிவனால் இவ்வண்ணம் தெரிவிக்கப்பட்ட அவர் பரமேச்வரரைப்பார்த்து, 'சம்புவே! ஸ்வாமி! உம்முடைய சரணாரவிந்தத்தில் பற்றுவர்களால் எளிதில் அடையமுடியாததும் வேறிடத்துச் செல்லாததுமான பக்தியைத் தவிர வேறு வரத்தை நான் வேண்டவில்லை' என்று சொன்னார். பகவான் முனிவரைப் பார்த்து 'உன்னுடைய பிதாவினால் புத்திரன் உண்டாவதற்காக ஆராதிக்கப்பட்டேன். நான் உன்னால் செய்யப்பட்ட தவத்தினால் மிகவும் மகிழ்விக்கப்பட்டேன். என்னால் நீண்ட ஆயுளானது உனக்குக் கொடுக்கப்பட்டது' என்கிற வாக்கியத்தைச் சொன்னார். ஈச்வரர் இவ்வண்ணம் சொல்லி விட்டு அவ்விடத்திலேயே மறைந்தார்" என்ற வனம் 130வது அத்தியாயத்தையேனும் அவ்வாழ்வார் பாராமற் போய்விட்டார்.

8. ஆ:— மார்க்கண்டேயனுக்குச் சிரஞ்சீவித்வத்தைக் கொடுத்ததனாற்சிவன் பரமாயின், பலி வியாஸர் ஹநுமான் விபீஷணர் கிருபர் பரசுராமர் அச்வத்தாமா இவர்களுக்கு அதைக்கொடுத்தவர்களும் பரமேயாவர்,

ச:— சிவபிரானொருவரே யார்க்குஞ் சிரஞ்சீவித்வத்தைக் கொடுக்கவல்லாரென்பது அத்தக்ஷிணாமூர்த்தியால் தேற்றப். அங்ஙனமாகப் பலி முதலியவர்களுக்கும் அப்பிரான் அல்லது அவரருள் பெற்ற ஏனையோரே அதைக் கொடுத்திருக்க வேண்டுமென்பதிற் றடையென்னை? அன்றியும் அப்பலி முதலியோருஞ் சைவரேயாவர். ஒரு எலி சிவாலயத்தில் விளக்கைத் தூண்டி மறுபிறவியிற் சிவானுக்கிரகத்தாற் பலியாயிற்று. வியாஸர் தாமியற்றிய பதினெட்டுப் புராணங்களுள் பத்துப்புராணங்களாற் சிவபாரம்யங் கூறி வாழ்ந்தார். ஹநுமானைச் சிவாம்சமென்று பூர்வபட்சமே சொல்லும். விட்டுணு சிவபிரானைப் பார்த்து 'வென்றிகொளரக்கர்க்கெல்லாம் மெய்ப் பொருளாயும் வாழ்தி' என்றனராம். கூரேச விஜயக் கூற்று அது. அந்த முறையிற் பார்த்தாலும் விபீஷணனாகிய அரக்கனுக்கு மெய்ப் பொருள் சிவாபிரானேயாவர். 'க்ருபர்......ருத்ரர்களுடைய கூட்டத்திலிருந்து உண்டானவர்' என்றது ஆதி 68வது அத்தியாயம். 'அந்தப் பரசுராமர்.........மஹா

தேவரை ஸந்தோஷப்படுத்தி அவரிடமிருந்து......கோடாலியை... வரமாக அடைந்தார்' என்றது சாந்தி 48வது அத்தியாயம். 'அச்வத்தாமாவை ருத்ரரிடமிருந்துண்டானவராகவும் தெரிந்துகொள்' என்றது ஆச்ரமவாஸிகம் 33வது அத்தியாயம். மேலும் அவர்களை நோக்கி இன்னும் எமன் வந்தபாடில்லை. வந்தால் அவன் சாவானோ அவர்கள் தான் சாவார்களா என்பது சந்தேகம். துரோணம் 70வது அத்தியாயத்திலுள்ள 'ஜாமதக்நியின் குமாரருமான பரசுராமரும் திருப்தியடையாமலே உயிரையிழக்கப்போகிறார்', 'அந்த ஜாமதக்நியரே மரிக்கப்போகிறார்', 74வது அத்தியாயத்திலுள்ள "துரோணர், 'அப்பா!........நானும் என் புத்திரனும் சாச்வதர்களல்லோமென்று நினை; நாங்களெல்லோரும்........காலனால் வரிசையாக அடிக்கப்பட்டு......பரலோகம் போகப் போகிறோம்.....' என்று சொன்னார்", சௌப்திகம் 16வது அத்தியாயத்திலுள்ள 'வாஸுதேவர்......த்ரௌணியைப் பார்த்து....நீர்......மூவாயிரம் வருஷ காலம் இந்தப் பூமியில் ஸஞ்சரிக்கப் போகிறீர்'......என்றார்" என்பனவாதிய வாக்கியங்களால் அவர்களின் சிரஞ்சீவித்வங்களை உபசாரமேயென விடுக்க. மார்க்கண்டேயர் விஷயத்திலோ எமன் வதமானபடியால் அவர் சிரஞ்சீவித்வமே உண்மை. நிற்க, இங்கு எடுத்துக்கொண்ட காரணம் காலன் உதையுண்டது மாத்திரம். பூர்வபக்ஷர் அநாவசியமாகச் சிரஞ்சீவித்துவவிஷயத்தைக் கொண்டு வந்து ஆக்ஷேபத்தைக் கிளப்பியது.

9. ஆ:— எமன் விஷ்ணு பக்தர்களை மாத்திரம் தூரத்திற் கண்டதுமே வணங்கி நிற்பான். சிவனுக்குப் பயந்து சிவனடியானாகிய மார்க்கண்டேயனை அவ்வெமன் விடவுஞ் செய்வானோ?

ச:— 'சரணமாகுந் தன தாளடைந்தார்க்கெலாம்—மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்' என்பது திருவாய்மொழி. இவ்வடிகள் விஷ்ணு பக்தர்களெல்லாம் சாகிறவர்களே யென்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. மரணத்தைக் கொடுக்கும் எமன் மரணத்தையடையும் விஷ்ணு பக்தர்களை வணங்குவானென்பது விருதா கோஷம். எத்தனை அர்த்த விசேஷங்களைக் கற்பித்தாலும் மரண சப்தத்தின் அமங்கலத்துவம் மறையாமையை யறிக.

---

## 9. தைதேயா வாஸபூதத்ரிபுர விதளநாத்·

## அவுணர் முப்புர மழியவில் வாங்கலின்.

பொருள்:— அசுரர்களின் மூன்று கோட்டைகளும் நாசமாகும்படி வில்லை வளைத்தலானும் என்பது.

தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலியென்று மூன்றசுர ரிருந்தனர். சிவானுக்கிரகத்தால் ஒவ்வொருவருக்கும் ஒரு கோட்டை யிருந்தது. அவை பொன் வெள்ளி இரும்பாலாகியவை. ஆகாயத் திற் பறந்து செல்லுமியல்பு அவற்றிற் குண்டு, அவ்வசுரர் தம் கோட்டைவாசிகளோடு நினைத்த விடங்களுக்குப் பறந்துசென்று தேவர் மனிதர் முதலியவர்களைப் பலவாறு துன்புறுத்தி வந்தனர். ஆகலின் அவர்கள் சிவபிரானிடம் முறையிட்டார்கள். சிவபிரான் பூமியை ரதமும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களும், வேதங்களைக் குதிரைகளும், பிரமனைச் சாரதியும், மேருவை வில்லும், வாசுகியை நாணும், விஷ்ணுவை அம்பும், பிறரைப்பிறவும், ஆக்கிரதிகராயிருந்து கொண்டு அம்முப்புரத்தர்களோடு யுத்தஞ்செய்யச் சென்றனர். ஒவ்வொருவரும்ஒவ்வொருகருவியான அத்தனைதேவர்களும் சிவபிரானுக்குத் திரிபுரத்தை வெல்லுஞ்சாமார்த்தியம் தங்களாற்றான் வந்துள தென்று செருக்கினார்கள். அவ்வகந்தையைக்கண்டு அவர் சிறிதே சிரித்தார். தீப்பொறியொன்று அச்சிரிப்பினின்றும் புறப்பட்டு அத் திரிபுரங்களிலும் போய் விழுந்தது. உடனே அவை சாம்பராயின. ஸாதுக்கள் க்ஷேமமடைந்தார்கள். இக்கதை காஞ்சிப் புராணத்தி லுள்ளது. சிவபிரான் அம்பைப் பிரயோகித்தா ரென்றுஞ் சில புராணங்கள் சொல்லும்.

'யோலீலயைவத்ரிபுரம் ததாஹ விஷ்ணும் ஸல்யம் ஸோமமக்நிம் ச பாணம்......தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவர் லீலாமாத்திரத்தினாலே ஸோமனை நடுச்சல்யமாகவும் அக்நியையடியாகவும் விஷ்ணுவை நுனிப்பாணமாகவுங்கொண்டு திரிபுர தகனஞ் செய்தாரோ அந்த ருத்திரர்க்கு நமஸ்காரம் ஆகுக) என்னுஞ் சரபமும், 'தேஷாமஸுராணாம் த்ரிஸ்ர: ஆஸந்நயஸ் மய்யவமா அத ரஜதாத ஹரிணீ தா தேவா ஜேதும் நாசக்நுவந்தா: | தஇஷும் ஸம்ஸ்குர்வதாக் நிமநீகம் ஸோமம் சல்யம் விஷ்ணும் தேஜநந்தே ப்ருவந்த இமாமஸிஷ்யதீதி ருத்ர இத்ய ப்ருவந் | தாம் ருத்ரோ வாஸ்ருஜத்ஸதிஸ்ர: புரோபித்வைப்யோ லோகேப்யோ ஸுராந் ப்ராணுதத |' (அடியிலே இருப்புக்கோட்டையும் அதன்மேல் வெள்ளிக்கோட்டையும் அதன்மேல் சுவர்ணக்கோட்டையுமாக அந்த அசுரர்களுக்கு முப்புரங்களிருந்தன. அந்தத் தேவர்கள் அசுரர்களைச் சயிக்கச் சக்தியிலராய், அவர்கள் அக்நியைப் பாணத்தின் அடிக்காப்பாகவும், சந்திரனை நடுப்பாகமாகவும், விஷ்ணுவை நுனியாகவுங்கொண்டு ஒரு பாணத்தை யமைத்து அதனைப் பிரயோகிக்க எவர்வல்லா ரென்று ஆலோசித்துப் பின்னர் உருத்திரரே யென்று நிச்சயித்தார்கள்; நிச்சயித்தவாறே அந்தப் பாணத்தைப் பசுபதியாகிய அந்த உருத்திரர் செலுத்தி அந்த முப்புரங்களையும்

தகர்த்து அவ்வுலகங்களிலிருந்து அவர்களை ஒழித்துவிட்டார்) என்ற எஜுர்வேதமும் அக்கதைக்கு மூலவசனங்கள்.

இனி, அக்கதைபற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:-

1. ஆ:— திரிபுரத்தர்களைக் கொல்லுந்திறம் சிவனுக்கில்லை. மற்றைத் தேவர்களில் ஒவ்வொருவரும் தம்தேஜஸிற் பாதியை அவனுக்குக் கொடுத்தனர். அவன் அத்தேஜஸுகளைப் பெற்றுப் பலத்தால் அதிகரித்தவனான பிறகே திரிபுரத்தர்களைக் கொன்றான். அதற்குக் கூலியாக அவனுக்குத் தேவர்களாற் கொடுக்கப்பட்டது பசுபதி நாமம்.

ச:— 'பாசபத்தஸ்ததாஜீவ: பாசமுக்த: ஸதாசிவ:' (பாசபந்தி ஜீவர்கள். பாசமில்லாதவர் சதாசிவன்) என்றது ஸ்கந்தம். 'தத்வம் | பசுபதிரஹம்காரா விஷ்ட: ஸம்ஸாரீஜீவ: ஸஏவ பசு: | ஸர்வஜ்ஞ: பஞ்சக்ருத்ய ஸம்பந்ந: ஸர்வேச்வர ஈச: பசுபதி: | '(தத்வம் பசுபதி. அகங்காரத்தோடு கூடிய ஸம்ஸாரி ஜீவன். அந்த ஜீவனே பசு. ஸர்வஞ்ஞரும் பஞ்சகிருத்ய சம்பந்நரும் ஸர்வேசுவரரும் ஈசருமானவர் பசுபதி), 'யதாத்ருணாசிநோ விவேகஹீநா: பரப்ரேஷ்யா: க்ருஷ்யாதி கர்மஸு நியுக்தா: ஸகலது:க்கஸஹா: ஸ்வஸ்வாமிபத்ய மாநாகவாதய: பசவ: | யதாதத்ஸ்வாமிந இவஸர்வஜ்ஞ ஈச: பசுபதி: | ' (புல்லைப் புசிப்பனவும் விவேகவீன முடையனவும் பிறனாற் கிருஷ்யாதி கருமங்களில் ஏவப்படுவனவும் துக்கமுடையனவும் எஜமானனாற் கட்டப்படுவனமாயுள்ளன பசுக்கள். அன்னணமே பாசபந்த ஜீவர்களாகிய பசுக்களும் முற்றுணர்விற்கும் ஈசசத்தத்திற்கும் உரிய பசுபதியும்), 'ஜீவா: பசவ உக்தா: | தத்பதித்வாத் பசுபதி: | ). ('ஜீவர்கள் பசுக்களாகச் சொல்லப்படுகிறார்கள். அவைகளின் பதியாகலிற் சிவன் பசுபதி என்றது ஜாபால். ஸர்வே தேவா: பசுதாமவாபு: ஸ்வயம் தஸ்மாத் பசுபதிர் பபூவ | தஸ்மை ருத்ராய நமோ அஸ்து | | ' (எல்லாத் தேவர்களும் பசுத் தன்மையை யடைந்தார்கள். ஆகையால் அவன் அவர்களுக்குப் பசுபதியானான். அந்த வுருத்திரற்கு நமஸ்காரம் ஆகுக), 'விஷ்ணவாதிகாந் ஸுராந்' (விஷ்ணு முதலிய சுரர்கள்) என்றது சரபம். 'ருத்ரம் பசூநாம்ச பதிம்தத' (ருத்ரனும் பசுக்களுக்குப் பதியாயும்) என்றது நாதபிந்து. 'ஜீவ இதிச ப்ரஹ்ம விஷ்ண்வீசாநேந்த்ராதீநாம் நாமரூபத்வாராஸ்தூலோஹமிதி மித்யாத்யாஸ வசாஜ் ஜீவ:' (ஈசுவரனே பிரமன் விஷ்ணு உருத்திரன் இந்திரன் முதலிய நாமரூபவாயிலாகத் தூலமாயிருக்கிறே னென்ற அத்தியாஸத்தால் ஜீவனாகின்றனன்) என்றது நிராலம்பம். 'பசுபாச விமோசக: | பசவச்சாநவாந்தம்' (பசுக்களின் பாசத்தை விடுவிப்பவர். பசுக்களாவார் மனிதருள்பட என்றது பஸ்மஜாபாலம்.

'ஸ்வத: சிவ: பசுபதி:' (சுயமாகவே சிவன் பசுபதி), 'ஸ்வயம்பசுபதி:' (சுயமே பசுபதி) என்றது பாசுபத ப்ரஹ்மம். 'ய ஈசேஸ்ய பத்வி பதச் சதுஷ்பத:' (எவர் இருகாலும் நாற்காலுமுடைய பசுக்களை ஆளுகின்றாரோ) என்றது ரிக். 'ஏஷாமீசே பசுபதி: பசூநாஞ் சதுஷ்பதாமுத சத்விபதாம்' (நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களைப் பசுபதியானவர் ஆளுகிறார்) என்றது யஜுர். 'உமாபதயே பசுபதயே நமோநம:' (உமாபதியார்க்குப் பசுபதியார்க்கு நமஸ்காரம்) என்றது தைத்திரீய ஆரணியகம். இத்தனை சுருதி வசனங்களாலும் ஆத்மாக்கள் பாசபந்தமுடையன வென்பதும் ஆதலால் அவைகள் பசுக்களெனப்படு மென்பதும் அத்தகைய பசுக்களாவார் பிரமன் விஷ்ணு உருத்திரன் இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் மனிதர்களும் மற்றை இருகால் நாற்காற் பிராணிகளுமே யென்பதும் அப்பாசத்தை நீக்கி அவைகளுக்கு உபகரிப்பவனே பசுபதி யென்பதும் அப்பிரானுக்கு அப்பசுபதி நாமம் பிறர்கொடுத்து வாராமல் ஸ்வயமேயுள்ள தென்பதும் அப்பெயரை அநாதி தொட்டே வகிக்கும் அவ்வுமாபதியையே எல்லாரும் நமஸ்கரிக்க வேண்டு மென்பதும் பிறவும் வெட்டவெளி. அவ்வுண்மைக்கு மாறாகச் சிவபிரானுக்குப் பசுபதிப் பெயர் திரிபுரசம்மாரகாலமாகிய இடையில் தேவர்கள் கொடுக்க வந்ததெனல் பாஷண்டம். ஆனாற் பூர்வபட்சத்துக்குப் பிரமாணம்போல் நிற்பது. 'மஹாபுரம் ஜயந்தீதி இஷும் ஸமஸ்குர்வதாக்நிமநீகம் ஸோமம் சல்யம் விஷ்ணும் தேஜநம் தே ப்ருவந் க இமாமஸிஷ்யதீதி ருத்ர இத்யப்ருவந்ருத்ரோ வை க்ரூரஸ் ஸோஸ் யத்விதி ஸோ ப்ரவீத்வரம் வ்ருணா அஹமேவ பசூநாமதிபதி ரஸாநீதி தஸ்மாத் ருத்ர: பசூநாமதிபதிஸ்தாம் ருத்ரோவாஸ் ருஜத்ஸ்ர: புரோபித்வைப்யோ லோகேப்யோ ஸுராந் ப்ராணுதத' (இரும்பு வெள்ளி பொன்னாலாய பட்டணங்கள் மூன்று அசுரர்களுக்குரியனவாய் இருந்தன. தேவர்கள் அவர்களை யுத்தத்திலே வெல்ல இயலாதவர்களாய், அவர்கள் அரணை நாற்புறத்தும் சூழ்ந்து தடுத்து வெல்ல விரும்பினார்கள். அறியவேண்டியதையறியும் பிராமணர் முதலியோரும், அதனை யறியாத பிறருமாம் இவர்கள் யுத்தத்திலே வெல்ல இயலாத மஹாபுரத்தைச் சூழ்ந்து தடுத்தலால் செயிக்க வன்மையுடையராவரென்று பெரியோர் சொல்கின்றார். பின்னர்த் தேவர்கள் அக்கினியை அடிக் காஷ்டமாகவும் சோமனை நடுச்சல்யமாகவும் விஷ்ணுவை நுனியாகவும் அமைத்த ஓர் பாணத்தை நிருமித்து, யார் இதைப் பிரயோகிப்பார் என்று யோசித்து, உருத்திரரே அது செய்யவல்லுநரென்று நிச்சயித்தார்கள். 'நானே பசுக்களுக்குப் பதியாகின்றேன்' என்னும் வரம் எய்தப் பெற்றேன் என்றார் உருத்திரர். அங்ஙனம் பசுபதியாகிய உருத்திரர் அந்தப் பாணத்தைப் பிரயோகித்து, முப்புரங்களையும் தகர்த்து, அவ்வசுரர்களை யெல்லாம் இவ்வுலகங்களி

விராது கொலையத் தகித்துவிட்டார்) என்ற எஜுரிலுள்ள 'வரம் வ்ருணே' (வரம் பெற்றேன்) என்பது மாத்திரம். பசுபதிப் பெயரைத் தேவர்கள் கொடுத்தே சிவபிரான் பெற்றாரென்பது அதிற் றெணித்துவிடுமா வென்பதே இங்கு ஆராயவேண்டுவது. "ஈசுவரர், 'நீங்களெல்லோரும் என்னுடைய தேஜஸ் பலம் இவைகளுடைய ஒரு பாதியினாலே பகைவர்களை நாசஞ் செய்யுங்கள்' என்று நியமித்தார். தேவர்கள், 'ஸுரேச்வரரே! தேவரீருடையதேஜஸின் பாதிப் பாகத்தைத் தரிப்பதற்கு நாங்கள் சக்தியற்றவர்களா யிருக்கிறோம்......' என்று பிரார்த்தித்தார்கள்......ஈசுவரர், 'என்னுடைய தேஜஸைத் தரிப்பதற்கு நீங்கள் சக்தியற்றவர்களா யிருப்பீர்களேயாகில், நானே உங்களுடைய தேஜஸிற் பாதியோடு கூடியவனாக இந்தச் சத்துருக்களைக் கொல்வேன்.........எல்லாத்தேவர்களும் தனித் தனியாகப் பலத்தில் பப்பாதி எனக்குக் கொடுங்கள். துன்பத்தையடைவிக்கப்பட்டவர்களான எல்லாப் பிராணிகளும் எனக்குப் பசுவாயிருக்கும் தன்மையை ஏற்படுத்திக்கொள்ளட்டும். தேவர்களே! பசுக்களுக்குப் பதியாயிருக்குந் தன்மையானது இப்பொழுது எனக்கு உண்டாகுக......' என்று கூறினார்...... ஈசுவரருடைய இவ்விதமான வார்த்தையைக் கேட்டுத் தேவர்களெல்லோரும் பசுத் தன்மையைப் பற்றி ஸந்தேகங் கொண்டவர்களாக விசன மடைந்தார்கள். அவர்களுடைய மனோபாவத்தைத் தேவரான ருத்திரர் அறிந்து அவர்களைக் குறித்து......'தேவச்ரேஷ்டர்களே! உங்களுக்கு இந்தப் பசுத்தன்மை விஷயத்தில் பயம் வேண்டாம். பசுத்தன்மைக்கு விமோசனத்தைக் கேளுங்கள். அதனைச் செய்ய வேண்டும். உங்களுள் எவன், பசுபதியான என் விஷயமான விரதத்தை அநுஷ்டிக்கிறானோ அவன் பசுத்தன்மையினின்று விடுபடுவான்.......இன்னும் மற்ற எவர்கள் இந்த விரதத்தை அனுஷ்டிப்பார்களோ அவர்களும் விடுபடுவார்கள்.........' என்று கூறினார். தேவதேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவரும் பிரபுவும் தலைவருமான அந்தச் சங்கரரைப் பார்த்துத் தேவர்கள், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு எங்களுடைய தேஜஸைச் சேர்ந்த இந்த அர்த்தாம்சத்தையும் தேவரீர் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள்..........சங்கரர் 'அவ்வாறே ஆகட்டும்' என்று மறுமொழி கூறினார். பிறகு, தேவர்களனைவர்களும் மஹாத்மாவான பசுபதியின்பொருட்டுத்தேஜஸினுடையபாதியைக் கொடுத்தார்கள். எல்லாத் தேவர்களுடைய தேஜஸினுடைய பாதியையும் பெற்றுக்கொண்டு தேஜஸினாலே அதிகரித்தவராகி மீண்டும் அதிக பலசாலியானார். அதுமுதல் அவர் தேவர்களுள் தேவதேவரானார்; அப்பொழுது, பசுஸ்வரூபிகளான எல்லாப் பிராணிகளுக்கும் பதியுமானார்; பசுக்களாயிருக்கிற எல்லாப் பிராணிகளுக்கும் பதியாயிருத்தலால் பசுபதி யென்று......சொல்லப்படுகிறார்......"

என்பது சர்ணம் 25-வது அத்தியாயம். இப்பகுதியை 'வராம்வ்ருணே' என்ற சுருதிக்கு உபப் பிரமாணமாகக் கொள்ளலாம். 'மூவருமுப்பத்து மூவரு மற்றொழிந்த தேவருங் காணாச் சிவபெருமான்' என்ற மணிவாசகப்படி திரிமூர்த்திகளும் முப்பத்துமுக்கோடியரும் ஏனையரு மெனத் தேவர்களின் சங்கியை முப்பத்துமூன்று கோடிக்கும் மேலாகிறது. ஏனையராவார் மஹேச்வர ஸதாசிவாதிகள். இந்த ஏனையரும் திரிமூர்த்திகளுளொருவராய வுருத்திரரும் இங்கு நீக்கப்பட்டனர். திரிபுரத்தர்களாற் சங்கட மெய்தியவர் மற்றை முப்பத்து மூன்று கோடியே யிரண்டுபேர்தான். இவர்களை மாத்திரந் தேவரெனத் தொகுப்பதுஞ் சுருதிக்குண்டு. 'விஷ்ண்வாதிகாந் ஸுராந்' (விஷ்ணு முதலியசுரர்கள்) என்றது சரபம். 'விஷ்ண் வாதிஸுரைராஜஸ்ரய' (விஷ்ணு வாதிசுரர்களுக்கு மேலான) என்றது தேஜோபிந்து. சிவபிரான் ஒருவரே. அத்தனை கோடிப்பேரும் அவ்வொருவரின் தேஜஸிற் பாதியைத் தானும் தாங்க வலியற்றார். அதனை அவர்களுக்கு உணர்த்திய பிறகே அத்தனை கோடிபேரின் தேஜஸின் பாதியை அவரொருவரே தாங்கினார். சிவ தேஜஸைத் தாங்கமுடியாமையாலும் தங்கள் தேஜஸைச் சமர்பித்துவிட்டமையாலும் தேவர்கள் பசுக்களானார்கள். தம் தேஜஸை யிழவாமையாலும் தேவர்களின் தேஜஸைத் தாம் அங்கீகரித்தமையாலும் சிவபிரான் பசுபதியானார். இதனால் தேவர்களுக்குப் பசுத்துவமும் சிவபிரானுக்குப் பசுபதித்துவமும் ஸஹஜமாயின. பெரும் பான்மையோராலுஞ் சகிக்கமுடியாத தேஜஸையுடைய ஒருவருக்கு அப்பெரும்பாலோரின் தேஜஸும் வந்து பலமதிகரித்த தென்பது வெறும் உபசாரமன்றியாதாம்? இன்னும் தேவர்கள் தங்களுக்குப் பசுத்துவம் சம்பவித்ததைக் குறித்துக் கவன்றதும் அதற்குப் பரிகாரம் பாசுபதவிரதாநுஷ்டானமே யானதும் அதிற் பிரசித்தம். மேலும் அதிற்கண்ட சிவவசனமனைத்துங் கம்பீர நடையிலும் தேவவசன மனைத்தும் தாஸ நடையிலு மிருக்கின்றன. ஆகவே இத்தனையும் அவ்வுபப்பிரும்மணத்திற் கொள்ளக் கிடப்பதால் 'வரர்வ்ருணே' என்ற சுருதிக்குப் 'பின்வருமாறு பொருள்கோடலே அமைவுடைத்து. பசுக்கள் பாசபத்தர்களாகையால் அவர்கள் தங்களுக்குப் பதியாகிய சிவனை மறந்து தற்போதத்தால் தங்களையே பதிகளென வகங்கரித்துச் சிக்ஷைரக்ஷையடைதல் அநுபவசித்தம்......இவர்களுக்கு இவ்வகந்தை அடிக்கடி பாசிபோல் வந்து மூடுவது ஸஹஜம். அவ்வப்போது இவர்களைச் சிக்ஷிப்பதும், இரக்ஷிப்பதும் சிவனாரது அருளியற்கை. இது நிற்க. திரிபுரர்களால் தேவர்கள் பெருந் துன்பமடைந்து சிவனை அடைக்கலம் புகுந்து எங்களை ரக்ஷிக்கவேண்டுமென்று இரந்தார்கள். அதனைக் கேட்டு சிவபிரான் திருவுள்ளமிரங்கி உங்களை நீங்கள் பதி என்று கொண்டிருப்பதை எமக்கு

அர்ப்பணம் பண்ணிவிடுவீர்களானால், நாம் திரிபுர ஸம்ஹாரம் பண்ணி உங்களை ரக்ஷிக்கின்றோம் என்று கூறினர். அதாவது நீவிர் பசுக்களென்பதை மறந்து நம்மையே பதிகளெனத் தனித் தனி மயங்கியிருக்கின்றீர்களாகையால், அந்தத் தீயவெண்ணத்தை மாற்றி விடுங்கள் என்பதாம். அப்படி அவர்கள் செய்வதனால் அவர்களது சொந்தமாகிய பசுத்வத்தைத் தெளிந்து சிவனாது சொந்தமாகிய பதித்வத்தை அவருக்கு அளித்தவராகக் கட்டில்லை. இவ்வுண்மை தேர்ந்தவர்கள் சிவனார் கேட்டவரமினைத்தென்று அறியாமற் போகார். சிவபெருமான் இதமாகப் பேசித் தேவர்களைக் குணப்படுத்தினமையால், வரத்தைக் கோரினர் என்று படிக்கப் பட்டது. ஒரு பிதா தனது பிள்ளையைப் பார்த்து நான் உனது பிதா என்னும் வரத்தை எனக்குக் கொடு என்று கோரியதாக நாம் ஒப்புவோம். இதற்குப் பொருளென்னை? என்னிடத்தில் பிதா என்கிற மரியாதையும் அச்சமுமின்றி இதுகாறும் நீ கெட்டலைந்தது போல் இனியுங் கெடாமல் பிதா என்னும் உரிமையை என்னிடம் பாராட்டி எனது கட்டளையினின்று சுகிக்கக்கடவாய் என்று இதங் கூறினதாகவேயன்றோ முடியும்? இதனால் பிதாவுக்கு கௌரவங் குறைந்துவிடுமா? பிள்ளை க்ஷேமப்படுவதேயன்றோ பிதாவுக்கு முக்கியம். இப்படியே பசுபதியாகிய சிவன் பசுக்களை இதரூபத்தால் தமது வசப்படுத்திக் கொண்டாரென வறிக. பசுக்கள் தமது அகங்காரவடிவமாகிய ஸ்வதந்திர மொழிந்து தாம் பரதந்திரர்களென்று அங்கீகரித்துக்கொண்டமையே அவர்கள் பசுபதித்துவம் ஆகிய வரத்தைச் சிவனாருக்களித்ததாம். எனவே, சிவனே சுதந்திரனெனத் தெளிந்து அவருக்கு யாவருமொரே காலத்தில் ஊழியர்களாக நின்று அடங்கினமையே முடிவாயிற்று. பசுவை நோக்கப் பாசத்துக்கு இயக்கமின்மையும், பதியை நோக்கப் பாசத்துக்கும் பசுவுக்கும் இயக்கமின்மையும் ஸித்தமாகையால், சிவசந்நிதியில்விஷ்ணுவாதி சேதநங்களும், பூம்யாதி அசேதநங்களும் இயங்கப்பெற்று முறையே பசுவும் பாசமுமாக வெளிப்பட்டன. சிவன் அவற்றை இயக்குந் தலைவராகிப் பசுபதி என வெளிப்பட்டனர். நமதன்பர் பிரஸ்தாபித்த திரிபுர ஸம்ஹாரப் பிரஸங்கத்தாற் போதரு முண்மையை ஈண்டு யாம் பிரகாசப்படுத்திவிட்டோம்' என்பது. இம்மேற்கோள் 'இராமதத்வ தீபிகையினது ஆபாச விளக்கம்' என்ற கிரந்தத்தி லுள்ளது. 'சிவனை மறந்தவழி நானெனப்படு பசுத்துவத்தையும் எனதெனப்படு உடல் பொருள்களையுஞ் சீடனிடமிருந்து ஞானாசாரியர் வாங்கிக் கோடல் போலத் தங்களைப் பதியென வெண்ணிக் கலாய்த்துத் திரியும் அந்தத் தேவர்கண்மீது வைத்த பெருங் கருணையாற்றானே சிவபிரானார் தங்களை நீங்கள்பதியெனக் கொண்டிருத்தலை எமக்கு அர்ப்பணஞ்செய்து விடுமின் என்றார்.... பசுக்களாகிய நீங்கள் அவ்விதஞ் செய்வீர்களாயின் திரிபுர சம்மார

மும் இரக்ஷிப்புங் கிடைக்கும்' என்பது அச்சுருதிக்கு'நாலாயிரப்பிர பந்த விசாரம்' என்ற நூல் 7-வது அத்தியாயத்திற் கண்ட வியாக் கியையாம்.

2. ஆ:— திரிபுரத்தவரிடம் சித்தரஸம் என்றொரு கிணறிருந் தது. அதன் நீர் மாண்டவர்க்கு மீண்டும் உயிர்கொடுக்கும். சிவன் யுத்தத்திற் கொன்ற அசுரர்கள் அக்கிணற்றிற் றள்ளப்பட்டார்கள். அப்பிரேதங்க ளெல்லாம் உயிர்பெற்று அசுரவீரர்களாகி யுத்தத் திற்குத் திரும்பிவிட்டன. ஆகவே, சிவன் அனுத்து விஷ்ணுவைப் பிரார்த்தித்தான். விஷ்ணு உபகரித்தார்.

ச:— "ப்ரம்மதேவரைப் பார்த்து, ஹரியானவன் (தாரகாக்ஷ குமாரன்), 'சஸ்திரங்களால் கொல்லப்பட்டு எந்தக் குளத்தில் விழு பவர்கள் மறுபடியும் அதிக பலசாலிகளாகத் தோன்றுவார்களோ அந்தக் குளமானது எங்களுடைய பட்டணத்தில் உண்டாகவேண் டும்' என்று வேண்டினன்.........அந்த ஹரியானவன் வரத்தைப் பெற்று அவ்விடத்தில் மரித்தவர்களைப் பிழைக்கச் செய்யும் 'ம்ருத ஸஞ்சீவினி' என்கிற அவ்விதமான குளத்தை உண்டுபண்ணினன் ......." என்ற கர்ணம் 24-வது அத்தியாயம் அது கிணறன்று குள மென்றும் அதன்பெயர் சித்தரஸமன்று ம்ருதஸஞ்சீவினி யென் றும் தெரிவிக்கின்றது. "பிறகு, அவர்கள்............சதுர் முகனை வணங்கி..........'இந்த மூன்று பட்டணங்களும் ஐக்கியமடையப் போகின்றன. ஒன்று சேர்ந்த இந்த மூன்று பட்டணங்களையும் அப்பொழுது பெருமை பொருந்திய தேவச்ரேஷ்டனன எவன் ஒரே பாணத்தினல் நாசம் செய்வனே அவனே எங்களுக்கு ம்ருத் யுவாகுக' என்று வேண்டினர்கள்... ...... ஸ்ரீ பிரம்மதேவர், 'அவ் வாறேஆகுக' என்று.... சொல்லிவிட்டு.......எகினர்", "ஸ்ரீபிரம்ம தேவர் தேவர்களைப் பார்த்து, 'தேவர்களே!......அந்தத் தூர்க்கங் கள் ஒரே பாணத்தினல் பிளக்கத் தக்கவைகள். வேறு விதத்தா லில்லை. அந்தப் பட்டணங்களை முக்கண்ணரே பாணத்தால் நன் ருகப் பிளப்பதற்குத் திறமையுள்ளவர்.......' என்று கூறினர்" என் பன கர்ணம் 24-வது அத்தியாயம். 'மஹேச்வரர்.......அந்தத் திரிபுரத்தை ஒரே பாணத்தினல் நாசஞ் செய்தார்' என்பது அப் பர்வம் 27-வது அத்தியாயம். 'அந்த அஸுரர்கள்......பரமேச்வர ரால்......ஒரே பாணத்தினலே......தள்ளப்பட்டார்கள்' என்பது சாந்தி 300 வது அத்தியாயம். சிவபிரான் ஒன்றுக்கு மேற்பட்ட அம்புகளைப் பிரயோகித்தாலன்றிச் சிலவசுரர்கள் சாதலும் அக் கிணற்றூற் பிழைத்தலும் இல்லை. சிவபிரான் இரண்டம்பு பிரயோ கித்து விட்டாராஞல் அப்பால் எத்தனைகோடி அம்புகளைப் பிரயோ கித்தாலும் அப்பட்டணங்கள் அழியா. அசுரர்கள் பெற்றவரம் அது. திரிபுராரி யென்ற பெயரும் சிவபிராற்குச் செல்லாது. ஆக லின் அவர் பிரயோகித்தது ஒரே அம்பு. அதனலே அம்முப்புரங்

களும் பாழாயின. ஆங்ஙனமாகச் சிலவசுரர்கள் மாண்டதற்கும் சித்கரஸக்கினாறு அவர்களை யெழுப்பியதற்கும் அந்தப் பிரமாணங் களில் இடமெங்கே?

3. ஆ:— விஷ்ணுவைக் குறித்துச் சிவன் தன் சடையை யரிந்து நெருப்பிலிட்டுத் தவம் புரிந்தான். அதன்மேல் விஷ்ணு வெளிப்பட்டு அவனுக்கு ரதத்தைச் சமைத்துக் கொடுத்தார்.

ச:— பூர்வ பட்சம் ஒரு சமயம் சிவபிரானின் லிங்க மறுந்த தென்றது; அடுத்த சமயம் மூக்கறுந்ததென்றது; பின்னொரு சமயம் தலையறுந்ததென்றது; இப்போது சடை யறுந்ததென் கிறது. 'அந்த ஹரர்......பூமியை ரதமாகவும்.......சந்திர சூரியர் களைச் சக்கரங்களாகவும்......விஷ்ணுவைப் பாணமாகவும்........ செய்து கொண்டும்' என்றது துரோணம் 203-வது அத்தியாயம். 'எல்லாத் தேவர்களும்......சங்கரரின் பொருட்டு....விச்வகர்மாவை அழைத்துத் தேர் அமைக்கும்படி சொன்னார்கள். விச்வகர்மாவும் ......ஒரு ரதத்தை உண்டுபண்ணினன்' என்றது கர்ணம் 26-வது அத்தியாயம். இவைகளில் விஷ்ணு ரதத்தைச் செய்து கொடுத்தா ரென்பது காணப்படவில்லை. ஆகலின் அச்சடையரிந்த கதை பொய்யாதல் காண்க. இன்னும் கர்ணம் 24-வது அத்தியாயம் 'தேவச்ரேஷ்டர்கள் தேவ வருஷத்தில் ஆயிரம் வருஷம் தவம் புரிந்து விருஷபத்வஜரிடம் சென்றனர். தேவர்கள் ப்ரம்மாவை முன்னிட்டுக்கொண்டு சரண்யரான ருத்திரரைச் சரணமடைந்து... பெருந் தவம் புரிந்தார்கள்' என்றதால் தேவர்களுக்குச் சிவபிரான் எளிதில் அருளில்லை யென்பதும், அவர்கள் விஷ்ணுபராக்கிரமத்தி னுஞ் சிவபராக்கிரமம் ஏற்றமுடைத் தென்பதை யறிந்தே அத் துணை வருஷங்கள் தவங்கிடந்தார்களென்பதும் விளங்கும். மேலும் அப் பூர்வபட்சக் கதை 'திரிபுரர்களைக் கொல்லுவதற்காகத் தீக்ஷை பெற்றவரான ருத்ரருடைய ஜடைகள் சுக்கிராசாரியரால் தலையி லிருந்தும் அறுத்து அக்னியில் போடப்பட்டன' என்ற சாந்தி 351-வது அத்தியாயத்தோடு முரணுவதுங் காண்க. இதுவும் பாஞ்சராத்திர சாஸ்திராந்தர்க்கத்தைச் சொல்லும் பகுதியில் வந்த அத்தியாயமாகலின் பாரததாற்பரியமாகாது. "சுக்கிரர்...பரமேச்வர ருடைய உதரத்தில் பிரவேசித்தார்...அவர் அங்கிருந்துகொண்டே ...ஈசரை ஸ்தோத்ரமும் செய்தார்......சுக்ரர் அப்படி உதரத்திலிருந் துகொண்டே, 'எனக்கு அனுக்ரகம் செய்யவேண்டும்' என்று அடிக்கடி சொன்னார்......மஹாதேவர்... ...அவரை நோக்கி, 'சிச் னத்தால் வெளியில் போ' என்று சொன்னார்.........அவர் சிச்னத் தால் வெளிவந்து சுக்கிரத்தன்மையை அடைந்தார்" என்ற சாந்தி 295-வது அத்தியாயத்தாலும், "சுக்ராசாரியர், '......சிந்திக்க முடி யாததும், ஒப்பற்றதும், ஈச்வரன் கொடுத்ததுமாகிய மந்திரம் எனக்

குப் பலம். இந்த லோகத்தில் என்றும் அழியாத ஸஞ்சீவினி யென்னும் வித்தையைத் தெளிவாக அறிந்திருக்கிறேன்.........' என்று சொன்னார்" என்ற ஆதி 72-வது அத்தியாயத்தாலும் சுக்கிரர் ஒருவகையிற்சிவபுத்திரரென்பதும், அவருக்கு யார்க்குங் கிடையாத ஸஞ்சீவினி வித்தை சிவபிரானாற் கிடைத்ததென்பதும் புலனாகின்றன. அத்தகைய சுக்கிரரா சிவபிரான் சடையை யறுக்கவல்லார்? பாஞ்சராத்திரச் சுவடிகள் அற்ப பரிபாகிகளை யுத்தேசித்துப் பிறந்தன. ஆகலின் பாரதம் தன்னளவிற் சொன்ன சிவோத்கிருஷ்டங்களை நிக்கிருஷ்டகளாக்கியும், நாராயண நிக்ருஷ்டங்களை உத்கிருஷ்டங்களாக்கியும், அப்பாஞ்சராத்திரப் பகுதிகளிற் காட்டுவது பொருத்தமே. அதற்கு ஒரு உதாரணம் வருமாறு:— விஷ்ணுவின் காதுக்குறும்பியிலிருந்து மதுகைடபர்கள் தோன்றினார்களென்பது பாரதப்பகுதி. அதிலுள்ள பாஞ்சராத்திரப் பகுதி அந்தக் காதுக் குறும்பியை 'முன்னமே ஸூர்ய கிரணத்திற்கு நிகரான பத்மத்தின் தளத்தில் நாராயணரால் செய்யப்பட்டவைகளும் சிறந்த குணமுடையவைகளுமான இரண்டு ஜலத்திவலைகளிருந்தன......அச்சுதரானவர் அவைகளைப் பார்த்தார். அவைகளில் ஒரு பிந்துவானது தேன் நிறமுடையதும், அழகான காந்தியுடையதுமாயிற்று. அப்பொழுது, அது நாராயணருடைய ஆஜ்ஞையினால்......மதுவென்கிற அஸுரனாயிற்று..... மற்றப் பிந்துவானது கைடபனாயிற்று' என்று சாந்தி 357-வது அத்தியாயத்தால் உயர்வுபடுத்துகிறது. இப்படியே எல்லாமு மென்க.

இங்ஙனமே பூர்வபட்சம் பார்வதி தேவியார் விஷயத்திலும் கதைகள் கற்பிப்பதுண்டு. அப்பாஞ்சராத்திரப் பகுதியிலும் அன்ன கதைகள் காணப்படும். சிலவருமாறு:— ஒன்று பார்வதிதேவியாரை இராவணனபகரித்தா னென்பது. இதற்காதாரம் யாண்டுங் கிடையாது. வான்மீகத்தில் இராவணனது காமக் கொடுமையை விஸ்தரிக்க வந்த விடங்களிற்றானும் அப்பிரஸ்தாபமில்லை. ஆனால் இராமன் மனைவியை இராவணனடித்துக் கொண்டு போனானென்பதற்கும், கண்ணன் மனைவியரைக் கள்வரடித்துக்கொண்டு போனாரென்பதற்கும் பூர்வபட்சம் லஜ்ஜைப்பட்டுப் பிரதியாகக் கற்பித்துக் கொண்ட கதையே அது வென்க. இராமன் மனைவி பறிபோன கதைக்கு வான்மீகமும், கண்ணன் மனைவியர் பறிபோன கதைக்கு 'கிருஷ்ணருடையபதினாறாயிரம் மனைவிகளும்.......வஜ்ரனை முன்னிட்டுக்கொண்டு சென்றார்கள். அந்த விருஷ்ணிக் கூட்டத்தை ...அர்ஜுனன் அழைத்துச் சென்றான்.......பிறகு, பார்த்தனொருவனால் அழைத்துக்கொண்டு போகப்படுகிறவர்களும் பர்த்தாக்களை இழந்தவர்களுமான ஸ்திரீகளைப் பார்த்துத் திருடர்களுக்கு ஆசையுண்டாயிற்று......பிறகு......அந்த உத்தம ஸ்திரீகள் நான்கு பக்

கத்திலும் இழுக்கப்பட்டார்கள்......அந்த மிலேச்சர்கள் அர்ஜுனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே விருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களின் ஸ்திரீகளைத் தூக்கிக்கொண்டு நான்கு பக்கத்திலும் சென்றுவிட்டார்கள்.......பிறகு, அர்ஜுனன்.........மிச்சமுள்ள விருஷ்ணி ஸ்ரீதிகளை அழைத்துக்கொண்டு குருக்ஷேத்திரம் வந்திறங்கினன்' என்ற மௌஸலம் 8-வது அத்தியாயமும், 'ஈரெண்ணாயிரமுத லேழை மார்களைச்—சீரிலா வேடுவர் சினத்திற் கைகொள' என்ற பாகவதமும் ஆதாரமாகும். அடுத்தது பார்வதி தேவியாரே துரௌபதியாகப் பிறந்து ஐவரை மணந்து சுகித்தாளென்பது. 'திரௌபதியும், லக்ஷ்மி முன்செய்த தவத்தினலுண்டான சங்கருடைய அனுக்ரஹத்தினல் பாண்டவர்களைவர்க்கும் மனைவியானாள்' என்ற ஆதி 215-வது அத்தியாயத்தால் திரௌபதியாய்ப் பிறந்து ஐவரைச் சுகித்துப் பலவல்லல்களையும் பட்டவள் லக்ஷ்மியேயென்பது வெளி. திரௌபதியும் என்பதை யடுத்துள்ள காற்புள்ளி லக்ஷ்மி யென்பதை யடுத்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவ்வாக்கியம் பொருள் பயவாமை காண்க. "இந்திரன்........, 'யுதிஷ்டிரரே! இவள், கர்ப்பத்தில் பிறவாதவளும் உலகங்களுக்குப் பிரியமானவளும் புண்யஸம்பந்த முள்ளவளுமான லக்ஷ்மி. இவள் உமக்காக திரௌபதி வடிவமெடுத்துக்கொண்டு மானிடத் தன்மையை அடைந்தாள். இவள் உங்களுடைய போகத்திற்காகப் பரமசிவனல் படைக்கப்பட்டுத் துருபதனுடைய குலத்தில் பிறந்தாள். உங்களாலும் அடுக்கப்பட்டாள்'.......என்று கூறினன்" என்பது ஸ்வர்க்காரோஹணம் 4-வது அத்தியாயம். ஆகவே லக்ஷ்மியே திரௌபதியாகி ஐவரை மணந்தாளென்ற வுண்மையை மறைப்பதற்குப் பூர்வபட்சம் கற்பித்ததே பார்வதியார் துரௌபதியானரென்ற கதை யென்க. மூன்றாவது "உமையானவள்......ஹிமவானுக்குப் புத்திரியானாள். இமய மலையினுடைய புத்ரியான உமை என்கிற கன்னிகையை ருத்ரர் விரும்பினர். பிருகு மஹரிஷியும் ஹிமவானை அடைந்து, 'இந்தக் கன்னிகையை எனக்குக்கொடு' என்று கேட்டார். அவரை நோக்கி ஹிமவான், 'ருத்திரானவர் என் புத்திரியினல் விரும்பப்பட்ட நாயகராயிருக்கிறார்' என்று சொன்னன். (அப்பொழுது) பிருகுவானவர் அவனை நோக்கி, 'கன்னியைவரிப்பதில் விருப்பமுள்ள நான் உன்னல் மறுக்கப்பட்டமையால் நீ ரத்தினங்களுக்கு இருப்பிடமாக மாட்டாய்' என்று சொன்னர். இது வரையில் இந்த முனி வசனம் நிலைத்திருக்கிறது" என்ற சாந்தி 351-வது அத்தியாயம். இதுவும் பாஞ்சராத்திரப் பிரசங்க சந்தர்ப்பத்தில் வந்ததாகும். 'மழை வளந்தரூஉம் பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகார்' என்பது கற்பிலக்கணம். இது மணிமேகலை 22-ம் காதை 45, 46-ம் அடி. லக்ஷ்மியின் அவதாரங்களான சீதை துரௌபதி முதலியவர்களின் சுயம்வரமெல்லாம் அவ்விலக்கணத்

துக்கு மாறுபட்டுக் கீழ்ப்படுவனவாம். கிருஷ்ணன் ராஜஸபையைப் பார்த்துச் சிசுபாலனுகிய 'இந்த மூடன் ருக்மிணியின் மேல் ஆசை கொண்டிருந்தான்' என்றும், சிசுபாலன் கிருஷ்ணனைப் பார்த்துக் 'கிருஷ்ண! ருக்மிணியை நான் முதலில் வரித்ததாக ராஜ ஸபையில் விசேஷமாகச் சொல்லியும் நீ வெட்கப்படாமலிருப்பதேன்! மதுஸூதன! உன்னைவிட வேறு எந்தப் புருஷன் தன் மனைவியை வேறொருவன் முன்னால் வரித்ததாக அறிந்து அதைச் சான்றோரிடம் விளம்புவான்' என்றும் சொன்ன ஸபா 28-வது அத்தியாயத்தையும் ஈண்டுக் கவனித்திடுக. இன்ன அசங்கியங்க ளொன்றுமில்லாதவர் ஸ்ரீ பார்வதி தேவியாரொருவரே. அவரொருவரே சுயம்வரமாதி யெதுவுமின்றிப் பரமேசுவரருக்கு மனைவியாரான பெண்ணினல்லார். தன்னை யாசிரயிப்பவர்களுக்குண்டாகுந் தலையிறக்கத்துக்கு ஒருவித சமாதானம் போன்ற அப்பாஞ்சராத்திரப் பகுதியிற் கண்ட பிருகு சாபத்தைப் பாரதம் தன்னளவில் 'ஸமுத்திரமும் இமயமலையும் இரண்டுமரத்தினங்களுக்கு நிதிகளென்று பிரஸித்தமானவைகளாக இருப்பது போல......' என்று ஸ்வர்க்காரோஹணம் 5-வது அத்தியாயத்திற் கூறிப் பொய்யாக்கிவிட்டது. விடவே, லக்ஷ்மியாகிய சீதை ருக்மிணி திரௌபதிமுதலியவர்களைப் பலர் இச்சித்தார்க ளென்ற பாரதத்துக்குப் பிரதியாகப் பாஞ்சராத்திரம் பிதற்றுஞ் சிவநிந்தையே ஸ்ரீ பார்வதிதேவியாரைப் பிருகு இச்சித்தாரென்னுங் கற்பனையென்க.

4. ஆ:—'மால்... பவுத்தனுருவாகியவனுற்ற-மத்தமனதர்க்க வுபதேசமும் வகுத்துப்-புத்திபை மருட்டி- சிவபூசையை மறுத்து', 'கற்பினுயர் மாதர்கள் கனத்தையொழிவிப்பான்—பொற்பினசுவத்தமது போந்தவலமாகி—நிற்பிரதனைத் தழுவி நேரிழையீ ரென்றே-அற்புத மாயாபுருடனைப் புணர்தல் செய்தான்', 'அங்கதினம் மாதரு மகங்களி மிகுந்து—மங்கினர்கள் கற்பினுயர் மாண்பினை', 'மூன்றுபேர்......வேதத்தினிடத்தில் பிராமாண்ய புத்தியாலும், அவர்களுடைய ஸ்திரிகளின் கற்பின் பலத்தினாலும்...பிரபலராய்' என்றபடி விஷ்ணு அவ்வசுரர்களின் சிவபூஜா பலத்தையும் அவர்களின் பெண்டிரது பாதிவிரத்திய பலத்தையும் அழித்திடாவிடில் சிவனால் அவ்வசுரர்களைக் கொல்லமுடியுமா?

ச:— அந்தப் பிரமாணங்களுட் செய்யுட் பகுதி சிவபூசையையும் பாதி விரத்தியத்தையும் ஒருங்கெண்ணியுள்ளது. கடைசிப் பிரமாணமாகிய வசனம் சிவபூஜாஸ்தானத்தில் வேதத்தினிடத்தில் பிராமாண்ய புத்தியென்பதை வைத்திருக்கிறது. பாதி விரத்தியமே ஸ்திரீ லக்ஷணமாவது போன்று சிவபூஜையே புருஷலக்ஷணமாமென்பதும், வேதத்திற் பிராமாண்ய புத்தியாவது சிவ பூஜையேயென்பதும் அவற்றின் சூசனை. விஷ்ணு அவற்றைக் கெடுத்தது

அவருக்குப் பெருமைதானோ? அசுரர்கள் அந்தப் பலத்தைத் தூர்விநி யோகம் பண்ணுமலிருந்தால் விஷ்ணு அவற்றை யழித்திருக்கவே மாட்டா ரென்க. அசுரர்கள் செய்தது சிவபூஜை. அதைக் கெடுத் தவர் விஷ்ணு. அவர் அதைத் தம்பொருட்டே கெடுத்திடல் வேண் டும். சிவபிரான் பொருட்டென்றல் யாங்ஙனம்?

5. ஆ:— சிவனுக்கு விஷ்ணு கவசத்தைப் பிரமனும் ஹரி பஞ்சரத்தை ஹரியும் உபதேசித்தனர். அம்மந்திரவலியாலன்றே அவன் திரிபுர சம்ஹாரஞ் செய்தான்?

ச:— திரிபுரசம்ஹாரத்தின் பொருட்டுச் சிவசந்நிதியில் அம் பாகி ஜடத்துவமெய்திய திருமாலின் மந்திரவலியாற் சிவபிரான் முப்புரமெரித்தா ரென்பது விருதாகோஷம்.

6. ஆ:— விஷ்ணுவாகிய அம்பை அவ்வளவு சாமானிய மாகச் சொல்லக்கூடாது.

ச:— 'பிறகு, ருத்திரர் வில்லில் நாணேறிட்டு அவ்விதமான பாணத்தைப் பூட்டிப்பாசுபதாஸ்திரத்தோடுசேர்த்துத் திரிபுரத்தை அழிக்கவேண்டுமென்று எண்ணினார்' என்ற கர்ணம் 27வது அத்தி யாயப்படி விஷ்ணுவாகிய பாணம் தன்னளவில் வலியற்றதாய்ப் பாசுபதாஸ்திரத்தின் ஸாநித்தியம் பெற்றே திரிபுரத்தை யெரித் தது பெறப்படும். ஆகவே அவ்விஷ்ணு பாணத்தின் சாமானியத் துவம் பாரத சம்மதமாதல் காண்க.

7. ஆ:—'விஷ்ணுராத்மா பகவத:—பவஸ்யா மிததேஜஸ: | தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸஸவிஷேஹே மஹேச்வர:— என்றதில், அமிதமான தேஜஸ்ஸோடு கூடின பவனென்னும் பேருடைய சிவனுக்கு விஷ்ணுவானவர் அந்தராத்மாவா யிருந்த காரணத்தினலே......' என்பதாற் சிவனுக்கு விஷ்ணு அந்தராத்மா வென்பது தெரியவில்லையா? ஆகையாலன்றே அவனுக்கு மேருவை யும் வளைக்குந் திறம் வந்தது?

ச:—வடமொழியில் ஆத்மாவென்றிருப்பதை அந்தராத்மா வென்றும், பகவனென்றிருப்பதை விட்டும் அவ்வாக்கியத்தைப் பூர்வபட்சம் தப்பாக மொழி பெயர்த்துளது. 'ஷாட்குண்ய பரி பூர்ணரும் அளவற்ற தேஜஸையுடையவருமான ஈசுவரருக்கு மஹா விஷ்ணுவானவர் ஆத்மா............' என்பது தமிழ் வசனவியாஸ பாரத மொழிபெயர்ப்பு. இப்பெயர்ப்பும் பாரபட்சமாகவே யிருக் கிறது. மூலத்தில் 'மஹத்' என்ற அடை 'ஈச்வர:' என்றபதத்தோடு சேர்ந்தது. 'விஷ்ணு' பதத்துக்கு அம்மூலத்தில் ஒரு விசேஷண பதமுங் கிடையாது. இப்பெயர்ப்பு அம் 'மஹத்' சப்தத்தை 'ஈச்

வர:' என்பதினின்றும் பிரித்த 'விஷ்ணு:' என்பதோடு சேர்த்த மஹாவிஷ்ணு வென்றுரைக்கியது சிறிதும் நியாயமாகாது. ம. வீ. இராமாநுஜாசாரியாரின் அத்தமிழ் வசன வியாஸ பாரதத்தைப் பற்றி இன்னும் இரண்டொரு விஷயங்கள் இங்கு காட்டவேண்டுவது அவசியமாகும். அப்பெரியார் வியாஸ பாரதத்தைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்ட செயல் செயற்கரியதேயாகும். ஆயினும் அப்பெயர்ப்புச் சில விடங்களில் நமக்கு நம்பிக்கையைக் கெடுத்து மூலத்துக்கே திரும்பவும் நம்மைத் தாக்குகிறது. மேலே காட்டப்பட்டதொன்று. இன்னும் இரண்டோரிடங்களையே இங்குக் காட்டுதும். ஆதி பர்வத்தில் முதலத்தியாயத்தில் 'கிருஷ்ணனும் வேதமும் பிராமணர்களும் வேர்கள்' என்ற பெயர்ப்புக் காணப்படுகிறது. அதற்குமூலம் 'மூலம் க்ருஷ்ணோ ப்ரஹ்மச ப்ராஹ்மணச்ச' என்பது. 'ப்ரஹ்மம்' என்ற பதத்தைவேதமென்று பெயர்த்திருக்கிறது அது. அந்த'ப்ரஹ்மம்' அந்தவிடத்திற்சிவபிரானையேகுறிக்கிறதென்று ஸ்ரீமத் அப்பய தீக்ஷிதேந்திரர் முதலிய பெரியோர்களெல்லாம் விசாரணை முகத்தால் தீர்மானித்திருப்பது வித்வ ஜனங்களுக்கெல்லாந் தெரியும். பெயர்ப்பாசிரியர் அந்தப் பதத்தைச் சிவபிரானென்று பெயர்க்க விரும்பாவிட்டாலும் பிரமம் என்றேனும் தம் பெயர்ப்பிற் போட்டுவிட்டிருக்கலாம். ஆனால் அவர் அதனை வேதமெனப் பெயர்த்து வைத்ததை நாம் என்னென்போம்? விஷ்ணுவினுடைய சக்கரம் சிவபிரானாற் கொடுக்கப்பட்டதென்னும் விஷயம் ஸௌப்திக பர்வத்திலுமுண்டென்பர் சைவர். அவ்விஷயம் அப்பர்வத்துத் தமிழ்ப் பெயர்ப்பின் 56வது பக்கத்தில் உடுக்குறியைப் போட்டியிருக்கவேண்டும். ஆனால் அங்கு 'பயங்கரமான சக்கரம்' என்ற பெயர்ப்பே காணப்படுகிறது. அவ்விடத்தில் வேறுபாடமுமுண்டென அடிக்குறிப்பாற் றெரிகிறது. அந்தப் பாடம் எதுவோ? இன்னதென்று சுருக்கியாவது அடியிற் காட்டியிருக்கலாம். பயனற்ற விஷயங்களையும் அப்படிக் காட்டும் வழக்கம் அவருக்கில்லாமலில்லை. நிற்கப், பூர்வபட்சம் எடுத்தாண்ட அக் கர்ணபர்வத்து 26வது அத்தியாய வசனம் சிவபிரானை அளவில்லாத தேஜஸையுடைய பகவானென்றும் மஹேச்வரனென்றும் பல விசேஷண பதங்களால் மதித்து விஷ்ணுவை ஒருவிசேஷணத்தாலும் மதியாமையால் அவ்விஷ்ணுவை எந்த அர்த்தத்தில் ஆத்மாவென்று சொல்லியிருக்கு மென்றாராய்வது ஸாதுக்களுக்கு ஆநந்தமாகவேயிருக்கும். 'கிருஷ்ணருடைய ஆத்மாவான அர்ஜுனன் மஹாத்மாவான அவரைக் குறித்து.......' என்பது வனம் 49-வது பக்கத்திற் கண்டது. ஆத்மா வென்பதற்குச் சரீர மென்றும் உயிரென்றும் பொருளுண்டு இந்த வாக்கியத்தில் அர்ஜுனன் சரீரமும் கிருஷ்ணன் உயிரும் ஆவர். இத்தாற்பரியம் அம்மஹத் விசேஷணம் அவ்வாத்மப் பிரயோகங்களுக்கு முறையே இன்மையுண்மைகளாற்

பெறப்படும். அப்படியே "பாரதத்தில் 'அளவில் பேரொளிப் பக வனுருத்திரற் கச்சுத ஞன்மா' வாமெனச் சிவனுக்கு விண்டு ஆன்மா வென்றது அபேத மென்னும் பொருள்பட உபசரித்துக் கூறியது. சரீர மென்னும் பொருட்டெனினும் அமையும். இவ் வாறன்றி, ஆண்டு ஆன்மா வென்றது அந்தரியாமி யென்னும் பொருட்டு எனக் கொள்ளின், 'அளவில் பேரொளிப் பகவன்' என்று உயர்த்திக் கூறியதோடு முரணுமாறறிக" என்ற ஸ்ரீ பாஷ் யத்தால் அவ்விடத்தில் விஷ்ணுவின் நிலை ஸ்பஷ்டமாயிற்று. இவரா சிவபிரானுக்கு மேருவை வளைக்க வலிகொடுக்க வல்லார்?

---

## 10. தக்ஷயாகே ஜயத்வாத்.

### தக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலின்.

பொருள்:— தக்ஷனுடைய யாகத்தை நாசஞ் செய்து அப் பால் அவனுக்கு நலஞ் செய்தலானும் என்பது.

பிரமாவின் பிள்ளை தக்ஷன். உமாதேவியார் அவனுக்கு மக ளாராய் வளர்ந்தனர். அக்காலத்தில் அவருக்குப் பெயர் தாக்ஷா யணி. அவரைப் பரமசிவன் மணந்தார். ஒருநாள் தக்ஷன் கயிலைக் குச் சென்றான். மகளாரும் மருகரும் அவனை வரவேற்கவில்லை. அவனுக்குக் கோபம் வந்தது. அவன் தன்னிருப்பிடந் திரும்பி னன். அவனால் யாகமொன்று நடத்தப்பட்டது. சர்வயாகங் களுக்கும் பதியாகிய சிவபிரான் அதில் ஒதுக்கப்பட்டனர். அவர் ஸ்தானத்தில் வீற்றிருந்தவர் விஷ்ணு. தேவர் முனிவர் பிராமணர் ஆகிய எல்லாரும் அந்த யாகத்துக்கு வந்திருந்தனர். தந்தை செய்த யாகத்தைப் பார்க்க வந்த தாக்ஷாயணியார் மட்டும் தக்ஷனால் அவ மதிக்கப்பட்டுத் திரும்பினர். ததீசி மகரிஷி அங்கு வந்து அப் பெருஞ் சிவத்துரோக சபையில் சிவஸர்வோத்தமத்தை யெடுத்து வெகுவாகப் பிரசங்கித்துத் தக்ஷனையும் மற்றவரையும் எச்சரித் தார். ஒருவருங் கேட்கவில்லை. அவர் அவ்வெல்லாரையுஞ் சபித்து அவ்விடம் விட்டகன்றனர். சிவபிரானுக்கு அனைத்துந் தெரிந்தன. அவர் கோபித்தார். நெற்றிக்கண் திறந்தது. வீரபத்திரர் வெளிப் பட்டார். சிவபிரான் அவரைப் பார்த்து, 'மைந்தா! நீ இக்கணமே தக்கனுடைய யாகசாலைக்குச் செல். எமக்குரிய ஹவிர்ப்பாகத்தை அவனிடங்கேள். தந்தால் வாங்கிவா. மறுத்தால் அந்த யாகத்தை நாசஞ் செய்' என்று கட்டளையிட்டார். அக்கட்டளை வீரபத்திர ருக்குச் சிரோபூஷணமாயிற்று. அவர் உடனே அவன் யாகசாலை யிற் பிரவேசித்தார். தக்ஷன் ஹவிர்ப்பாகங் கொடுக்க மறுத்தான். வீரபத்திர மூர்த்தி கரை கடந்த கோபத்தினரானர். அவர் சமீபத்

திலிருந்த விஷ்ணுவைக் கதையா லடித்துத் தள்ளினர். பிரமனைக் குட்டினர். வாணி முதலியோரை மூக்கு முதலியவற்றை யரிந்தார். சந்திரனைத் தேய்த்தார். சூரியனைப் பல்லையுடைத்துக் கண்ணைப் பிடுங்கினர். எமனைக் கழுத்தை யறுத்தார். இந்திரனை வெட்டினர். அக்கினியைக் கையையும் நாவையுந் துண்டித்தார். மானுருக் கொண்டோடிய யாகத்தை யெய்தார். தக்ஷனைத் தலையைத் திருகினர். பிறரைப் பிறசெய்தார். இன்னணம் அந்த யாகம் நாசமாக்கப்பட்டது. எஞ்சிய தேவர்கள் வீரபத்திரரை வணங்கிச் சிவஸ்துதி செய்தார்கள். வீரபத்திரர் ஓய்ந்தார். சிவபிரான் வெளிப்பட்டு இறந்தவர்களை யெல்லாம் எழுப்பி 'இனி எமக்குத் துரோகமான காரியங்களைச் செய்யாதீர். செய்பவரைச் சார்ந்தும் நில்லாதீர்' என்று எச்சரித்து அனுப்பிவிட்டு வீரபத்திரருடன் அந்தர்த்தானமானர். இக்கதை கந்த புராணத்துள்ளது.

'பூஷாப்ராச்யதோருணாத் தஸ்மாத்பூஷாப்ரபிஷ்டபா கோந்தகோஹிதம் தேவா அப்ருவந் | தேவாவை யஜ்ஞாத் ருத்ரமந்தராயந்த்ஸ யஜ்ஞமவித்யத்' (அவர்கள் பூஷன் உண்ணுமாறு அதனைக் கொடுத்தார்கள்; உருத்திரர் அவன் பற்களை உடைத்தார்; தேவர்கள் சிவபிரானை யஞ்ஞத்தினின்று விலக்கச்சிவபிரான் யஞ்ஞத்தை அழித்தார்) என்ற எசுர்வேத தைத்திரீய சங்கிதையும், 'தக்பகாய தக்ஷிணத: ஆஸீநாய பர்யாஜஹ்ரு: | தக்பகோவீக்ஷாஞ் சக்ரே தஸ்யாக்ஷிணீ நிர்ததாஹ' (வலப்பக்கத்தில் இருக்கும் பகனுக்கு அதனைக் கொடுத்தார்கள்; அவன் அதனைப் பார்த்தான்; அவர் அவன் கண்களைத் தகித்தார்) என்ற சதபதப் பிராஹ்மணமும், 'யோதக்ஷயஜ்ஞே ஸுரஸங்காந் விஜித்ய விஷ்ணும் பபந்தோரகபாசேந வீர: தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எந்த வீரர் தக்ஷயாகத்திலே தேவகூட்டங்களைச்செயித்து விஷ்ணுவை நாகபாசத்திற் கட்டினரோ, அந்த உருத்திரர்க்கு நமஸ்காரம் ஆகுக) என்ற சரபமும் அக்கதைக்கு மூலவசனங்கள்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— புராணங்கள் பதினெட்டு. அவற்றுள் மூன்று ஸாத்விகம். ஆறு ராஜஸம். ஒன்பது தாமஸம். விஷ்ணு புராணங்கள் முதல் வகை. சிவபுராணங்கள் கடைவகை. ஏனைத் தேவர் புராணங்கள் இடைவகை. ஸாத்விக புராணங்கள் தக்ஷயாகத்தில் விஷ்ணுவும் பிரமாவும் வரவில்லை யென்னும். ஆனல் அவ்விருவரும் வந்தனரென்றும் மற்றைத் தேவர்கள்போல் தண்டிக்கப்பட்டனரென்றும் தாமஸ புராணங்கள் சொல்லும். தாமஸ புராணங்கள் தள்ளத்தக்கன. கொள்ளத்தக்கவை ஸாத்விக புராணங்களே. ஆகலின் விஷ்ணு பிரமர்கள் தக்ஷயாகத்திலில்லை யென்பதே சரி.

ச:— சிவாகமங்களை மோகன நூலென்பது போன்ற பித்துரையே சிவபுராணங்களைத் தாமஸ நூலென்பதும், வேதம் சிவாகமங்களை வந்தித்ததுபோல் 'கிம் தத்வம் ப்ரஹ்மவாதிநாம் புராணேஷ்வஷ்டாதசஸு ஸ்ம்ருதிஷ்வஷ்டாத சஸ்வபி' (பிரமவாதிகள் பதினெட்டுப் புராணங்களிலும் பதினெட்டு ஸ்மிருதிகளிலும் அறிதற்குரிய தத்வம் என்ன?) என்ற ராமரஹஸ்யத்தாற் சிவபுராணங்களையும் வந்தித்துளது. புராணங்கள் பதினெட்டாவன:— சைவம், பாகவதம், பவிஷ்யம், மார்க்கண்டேயம், லிங்கம், ஸ்காந்தம், வராஹம், வாமனம், மத்ஸ்யம், கூர்மம், ப்ரம்மாண்டம், ப்ரஹ்மம், பத்மம், காருடம், நாரதீயம், வைஷ்ணவம், ஆக்நேயம், ப்ரம்மகைவர்த்தம் என்பன. அவற்றுள் முதற்பதினொன்றும் சிவபுராணங்கள். அடுத்த இரண்டும் பிரம புராணங்கள். அடுத்த மூன்றும் விஷ்ணு புராணங்கள். ஆக்நேயம் அக்னிபுராணம். ப்ரம்மகைவர்த்தம் ஸூர்ய புராணம். சிவபுராணங்கள் ஸாத்விகம். பிரம புராணங்கள் ராஜஸம். விஷ்ணு புராணங்கள் தாமஸம். கடைசியிரண்டும் திரிகுண யுக்தம். பாகவதமாவது தேவீபாகவதம். சிலர் அதனை விலக்கிக் கிருஷ்ண பாகவதத்தைக் கோடலுமுண்டு. அப்போது சிவபுராணங்கள் பத்தாகி விஷ்ணு புராணங்கள் நான்காகும். அதனால் பூர்வபட்சத்தின் மூன்று ஆறு ஒன்பது என்ற கணக்குத் தப்பாய் முடியும். தேவீபாகவதத்தைக் கொண்டால் மூன்றென்பது மட்டும் பொருந்தும்.

வக்தா விஷயம் சுரோதா என்னும் மூன்றனுள் எதுபற்றிச் சிவபுராணங்கள் தாமஸமாகும்? வக்தா வியாஸர். விஷயம் சிவபிரான். சுரோதா ஸூதர். 'குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்—மிகைநாடி மிக்ககொளல்' என்றபடி மிகையான தாமஸபுராணங்களைச் சொன்ன வியாஸர் மிகையான தாமஸியாகி முழுத்தாமஸியென்றெதுக்கப்படுவர். படவே, 'கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்-கொள்ளா ரறிவுடை யார்' என்றபடி அவர் சொன்னசாத்விகராஜஸ புராணங்களும் மதிப்பழியும். ஆனாற் பூர்வபட்சத்துக்குத் தன் புராணங்களை அவ்வாறு விட்டிட இஷ்டமிராது. அப்படியானால் அது சிவபுராணங்களையே சாத்விகமெனக் கோடல்வேண்டும். அப்போதுதான் மிகையானசாத்விக புராணங்களைச் சொன்ன வியாஸர் மிகையான சாத்விகியாகி முழுச்சாத்விகியென் றங்கீகரிக்கப்படுவர். படவே, அவர் சொன்ன தாமஸ ராஜஸ புராணங்களுஞ் சோபான முறையிலோ பூர்வோத்தரமுறையிலோ மதிப்புறும். 'தமோமாயாத் மகோ ருத்ர: ஸாத்விக மாயாத் மகோ விஷ்ணு ராஜஸ மாயாத் மகோ ப்ரஹ்மா' என்ற பாசுபத ப்ரஹ்மத்தால் உருத்திரர் தாமஸியும் விஷ்ணு சாத்விகியும் பிரமா ராஜஸியும், 'ஸாத்விகீ ருத்ரே பக்தே ப்ரஹ்மணி ராஜஸீ | தாமஸீ தைத்ய பக்ஷேஷு மாயாத்ரேதாஹ்யுதாஹ்ருதா |' என்ற க்ருஷ்ணத்தால் உருத்திரர்

சாத்விகியும் பிரமா ராஜஸியும் விஷ்ணு தாமஸியும் ஆவர். பூர்வ பட்சத்துக்கு இம்முறை நிவிர்த்திசெய்து கொள்ளத் தெரியாது. ஆகலின் அது தனக்குப் பிரதிகூலம்போற்றோன்றுஞ் சுருதியைத் தள்ளி அநுகூலம் போற் றோன்றுஞ் சுருதியைக்கொண்டு கூத்தாடும். அச்செயல் பாஷண்டம். பொருள் கோள்முறையில் அம் முறை தவிர்த்து எல்லாச் சுருதிகளையும் வந்திப்பதே வைதிகம். அந்த முறையில் ஸூதஸம் ஹிதை அந்த வாக்கியங்களுக்கு 'ரஜோ குணேநஸம் சந்தோ ப்ரஹ்மாதிஷ்டாய தம் குணம் ஸ்ரஷ்டாபவதி ஸர்வஸ்ய ஜகத: பண்டிதோத்தமா: குணேந தமஸாச் சந்தோ விஷ்ணுஸ் ஸத்வகுணம்புதா: அதிஷ்டாய பவேத் ஸர்வ ஜகத: பாலக: ப்ரபு: ததாஸத்வகுணச் சந்தோ ருத்ரோ விப்ராஸ்தமோ குணம் அதிஷ்டாய பவேத்தத்ஜகதஸ்ஸத்யவாதிந:' (ராஜஸ குணத்தால் மூடப்பட்ட பிரமா அந்தக்குணத்தையே அதிஷ்டித்து ஸர்வஜகத்துக்குஞ் சிருஷ்டி கர்த்தாவானார். தாமஸ குணத்தால் மூடப்பட்ட விஷ்ணுசத்துவகுணத்தை அதிஷ்டித்து ஸர்வ ஜகத்துக்கும் ரக்ஷக கர்த்தாவானார். ஸத்வகுணத்தால் மூடப்பட்டவுருத்திரர் தாமஸ குணத்தை அதிஷ்டித்து ஸர்வஜகத்துக்கும் ஸம்ஹாரகர்த்தாவானார்) என்று வியாக்கியானஞ் செய்தது. அதனால் மும்மூர்த்திகளுள் ஒவ்வொருவருக்கும் முக்குணங்களுள் ஒன்று சகஜமும் மற்றொன்று அதிஷ்டானமுமா மென்பதும், பிரமாவுக்கு இரண்டும் ராஜஸம், விஷ்ணுவுக்குச் சகஜம் தாமஸம் அதிஷ்டானம் சத்வம், ருத்ரருக்குச் சகஜம் ஸத்வம் அதிஷ்டானம் தாமஸ மென்பதும்பெறப்படும். படவே, அவ்விரண்டு சுருதிகளுள் முன்னது அதிஷ்டானம் பற்றியும் பின்னது சகஜம் பற்றியும் எழுந்தனவாகும். ஆகவே சகஜ தாமஸியாகிய விஷ்ணுவையே தாமஸவிஷய மெனல் வேண்டும். ஸஹஜஸாத்விகியாகிய வுருத்திரர் தாமஸ விஷயமாதல் யாண்டு மில்லை. முன் வியாஸருக்குச் சொன்ன விவகாரமே இங்கு ஸூத மஹரிஷிக்குமாம். ஆகவே ஸாத்விக வக்தாவாகிய வியாஸர் ஸாத்விக விஷயமாகிய பரசிவமாஹாத்மியத்தை ஸாத்விக சுரோதாவாகிய ஸூதருக்கு லோகக்ஷேமத்தை யுத்தேசித்துச் சிவபுராணங்களிற் பிரசங்கித்தாரென்றே துணிவர் நல்லோர். திரிகுண ரஹிதரான சதுர்த்த சிவபிரானின் அதியற்புத மகிமாவர்ணனங்களை ஸாத்விக ஸஹிதராகிய திரிதீய வுருத்திரர் மேலேற்றிச் சொல்வது புராணங்களின் சாம்பிரதாய மென்பதை யிங்கு மறவற்க.

விஷ்ணு பத்தவதார மெடுத்தார். ஒவ்வொரு அவதாரத்தின் முழுச் சரிதையையும் விஷ்ணு புராணங்களிற் காணமுடியாது. விஷ்ணுவின் உத்கர்ஷம் எதுவரையிலுண்டோ அதுவரையிலுள்ள சரிதந்தான் அப்புராணங்களிற் காணப்படும். அவரது அபகர்ஷங்களும் அடங்கிய சரிதை ஏனைத் தேவர் புராணங்களிற் சிறிதும் சிவ

புராணங்களில் முழுதுமாக விருக்கும். பின்வருவது ஒரெடுத்துக்
காட்டு விஷ்ணு நரசிங்கமாகி இரணியனைக் கொன்றார். விஷ்ணு
புராணங்களில் அந்தக் கௌரவம் வரையிற்றானுண்டு. அந்நரசிங்
கத்தைச் சிவபிரான் சரபமூர்த்தியாகி வதஞ்செய்தார். விஷ்ணு
வின் இந்த அகௌரவத்தைச் சிவபுராணங்களிற்றான் பார்க்கலாம்.
ஆகவே நரசிங்காவதாரக் கதையை முழுவதுமறிதல் சிவபுராணங்
களைப் படித்தன்றி முடியாதென்பதறிக. இதனால் விஷ்ணு புரா
ணங்கள் பூர்வமும் சிவபுராணங்கள் உத்தரமுமாகின்றன. அற்ப
பரிபாகிகட்கே விஷ்ணு புராணங்கள் பூர்ணம்போற் றோன்றும்.
பூர்வபட்சம் இதர புராணங்களிலுள்ள விஷ்ணு வபகர்ஷங்களைக்
கண்டிக்க விஷ்ணு புராணங்களுக்கு ஆற்றலில்லாமையை யறிந்தே
அவ்விதர புராணங்களுக்குச் சிலவுத்தரங்களைத் தனக்கனுகூலமாகக்
கற்பித்து வைத்துக்கொண்டது. அக்கற்பனைகளே பாத்மோத்தரம்
காந்தோத்தரம் கூர்மோத்தரம் முதலியனவாம். சிவபுராணங்
களிற் காணப்படும் விஷ்ணுவபகர்ஷங்களை விஷ்ணு புராணங்களாற்
கண்டிக்கவேண்டும். பூர்வ பட்சத்துக்கு அதுவே அடுக்கும். அங்
ஙனமின்றி அது அப்போலி யுத்தரங்களாற் கண்டிக்கின் விஷ்ணு
புராணங்களுக்கு அவ்வலி யெங்கேயென்ற சங்கை யெழும். அன்றி
யும் அவ்வுத்தரங்களெல்லாம் விஷ்ணுபரத்துவத்தையே சொல்வன
வாக அவற்றுள் அடங்குமியல்புடைய பூர்வங்களைக்கொண்டு அவ்விதர
புராணங்களை ராஜஸ தாமஸங்களென்று நிந்திப்பது குற்றமென்ப
தும் பதினெட்டு புராணங்களுமே சாத்விகமென்று அங்கீகரிப்பதே
பொருத்தமென்பதும் ஸ்திரமாகும். பூர்வபட்சத்துக்கு அப்போ
தும் சங்கடம். சைவர்களுக்கும் விஷ்ணுத்தரம் காருடோத்தரம்
பாகவதோத்தரம் முதலிய எத்தனையோ வுத்தரங்களைப் பிறர் கண்டு
கொள்ளாதபடி கற்பித்துக் கொள்ளச் சக்தியுண்டு. அவர்கள்
புருஷோத்தமர்கள்; ஆரிய திராவிடாதி பாஷாந்தரங்களில் ஸத்சாஸ்
திர ஸம்பத்தை அபரிமிதமாகவுடையவர்கள். ஆகலின் அவ்வஞ்சச்
செயல் அவர்கட்கு வரவேண்டுவதில்லை. தம்மளவில் உத்தரஸ்தானத்
தில் மிளிர்கின்ற பத்து அல்லது பதினொரு சிவபுராணங்களின்
பலமே அவர்கள் செய்யும் திக்விஜயத்துக்குப் போதும்.

சாந்தோக்யாதிகளில் 'இதிஹாஸ புராணம் பஞ்சமம் வேதா
நாம்' என்று இதிகாசம் முன்னும் புராணம் பின்னும் வருவதால்
புராணங்களிலும் இதிகாசமே ஏற்றமுடைத்தென்றும் அவ்விதி
காசம் பாரதமே யென்றுங் கூறித், தன் புராணங்களின் கௌர
வத்தை வலியுறுக்க வலியற்று மெல்ல நழுவுதலும் பூர்வபட்சத்துக்
குண்டு.

இப்படிப் பலவிதத்திலும் அலக்கண்படுவன விஷ்ணு புராணங்
கள். தக்ஷயாகத்தில் அரிபிரமர் வந்திருந்ததை அப் பூர்வபாகஞ்

சொல்லாவிட்டால் உத்தரபாகமாகிய சிவபுராணங்கள் சொன்னதை அநங்கீகாரமென்றல் நியாயமாகாது. பாரதமும் சாந்தி 290வது அத்தியாயத்தில் 'கங்காத் துவாரத்தில் மங்களகரமான இடத்தில் தக்ஷன் யாகம் செய்தான். அப்பொழுது......எல்லோரும்...... தக்ஷனென்கிற ஸ்ருஷ்டி கர்த்தனை ஸ்தோத்திரம் செய்தார்கள். உடனே, தேவர்கள்......இந்திரனுடன் வந்தார்கள். ஊஷ்மபர்களும்.........பிரம்மாவுடன் வந்தார்கள்' என்றதாற் பிரமா வந்ததும், "தக்ஷன், 'யாகத்தின் தலைவருக்காக ஸ்வர்ண பாத்திரத்தில் வைக்கப்பட்டதும் விதிப்படி மந்திரத்தினால் பரிசுத்தமுள்ளதுமான இந்த ஹவிஸை, நிகரற்றவிஷ்ணுவினுடைய பாகமாகச்சேர்ப்பிக்கின்றேன்'......என்று சொன்னான்" என்றதால் விஷ்ணு வந்ததும் வெட்ட வெளி. யாரும் யாகசாலைக்கு வராமற் பாகத்தை ஏற்க முடியாதென்பதை ஓர்ந்துணர்க. ஆகவே அவ்யாகசாலையில் அரி பிரமர் வந்திருந்தனரென்பதும் வீரபத்திரரால் மற்றைத் தேவர்கள் போற் றண்டிக்கப்பட்டனரென்பதும் சத்தியமே. அச்சிவ புராணப் பிரஸ்தாபங்களை மேல் மூலவசனம் ஆதரிப்பதுங் காண்க.

2. ஆ:— சிவன் யாகபலனை நேரிற் பெறுமற்போமாறு தக்ஷன் அவனைச் சபித்தான்.

ச:— 'ருத்திருடைய பராக்கிரமத்தைக் கண்டு தேவர்களும் ரிஷிகளும் பயந்தனர். பிறகு, தேவசிரேஷ்டர்கள் சிவனைப் பிரார்த்தித்தனர்......மகேச்வரர் கோபம் நீங்கினர். பிறகு, தேவர்கள் யாகத்தில் சிவனுக்குச் சிறந்த பாகத்தை ஏற்படுத்தினர். அரசே! பயத்தினால் தேவர்கள் அவரைச் சரண மடைந்தனர்' என்றது அநுசாஸனம் 265வது அத்தியாயம். 'அந்த மகேச்வரர்......... அம்புகளைத் தேவர்களை லக்ஷயம் வைத்து மறுபடியும் ஸந்தானம் செய்தார். அதைக் கண்டு எல்லாத் தேவதைகளும் மகேச்வரரை நமஸ்காரம் செய்து அவருக்கு ச்ரேஷ்டமான யஜ்ஞபாகத்தைக் கல்பித்தார்கள். அரசரே! தேவர்கள் பயத்தால் சரணமடைந்தார்கள்' என்றது துரோணம் 203-வது அத்தியாயம். 'தேவர்கள் வில்லை இழுந்தவரான தேவசிரேஷ்டரை யஜ்ஞத்துடன்கூடச் சரணமடைந்தார்கள். பிரபுவும் அருள் புரிந்தார்...தேவர்கள் இவருக்கு எல்லா ஹவிஸுகளையும் பாகமாக ஏற்படுத்தினார்கள்' என்றது ஸௌப்திகம் 18-வது அத்தியாயம். இவற்றால் தேவர்கள் சிவபிரானை நமஸ்கரித்து அவருக்கு நடுங்கி ஹவிஸைத் தந்தார்களென்பதும், அதுவும் சிறந்த ஹவிஸென்பதும் சாந்தி 290வது அத்தியாயம் சிவபிரானை 'யாகத்தில் எல்லாருக்கும் முதலில் பூஜிக்கின்றவருமான பிரபு' என்றதால் அவர் ஹவிஸை முதலிற் பெற வுரியவரென்பதும் புலனாகின்றன. ஆகவே அவர் அதைநேரிற்பெறுமல் போவதற்கு நேர்ந்த தடையென்ன? நிற்க, "வீரபத்திரருடைய வார்த்தையைக்

கேட்டு......தக்ஷன் பரமேச்வரரைப் பணிந்து ஸ்தோத்திரத்தினால் ஸந்தோஷிக்கச் செய்யலானான். 'தேவரும் சிக்ஷகரும் சாச்வதரும் நிலையுள்ளவரும் அழிவில்லாதவரும் மஹாத்மாவும் எல்லா வுலகத்திற்கும் பதியுமான மஹாதேவரை நான் சரணமடைகிறேன்' என்றான்'', 'தக்ஷனைவன் முழங்கால்கள் பூமியிற் படிய நமஸ்கரித்து ஈச்வரரிடமிருந்து வரத்தை யடைந்து விருஷபத்வஜரான அவரை ஆயிரத்தெட்டு நாமங்களினால் துதித்தான்' என்ற சாந்தி 290-வது அத்தியாயத்தால் சிவஸந்நிதியில் தக்ஷன் ஸ்திதி இவ்விதமிருந்ததென்பது தெரிகிறது. அந்நாமங்களனைத்தையும் அவ்வத்தியாயத்திற்காணலாம். அப்பால் அந்த அத்தியாயந்தானே ''தக்ஷன் மஹாதேவரைத் துதித்து விட்டு நின்றான். பகவானும் மிகவும் பிரீதியடைந்து......தக்ஷனை நோக்கிச் சொல்லலானார். '...தக்ஷ! உன்னுடைய இந்த ஸ்தோத்திரத்தினால் மிகவும் சந்தோஷமடைந்தேன்......என்னுடைய பக்கத்திலிருக்கப்போகிறாய்......எனதருளால் ஆயிரம் அச்வமேதங்கள் நூறு வாஜபேயங்கள் ஆகிய இவற்றின் பயன் அடைவாய்' என்றார்'' என்றுஞ்சொல்லிற்று. இப்படிச் சிவபிரானிடம் சரணமடைந்தவனும் வரம்பெற்றவனுமாகிய தக்ஷனா அப்பிரானைச் சபிப்பான்?

3 ஆ:— சிவனுக்கு மயானவாஸம் தக்ஷன் கொடுத்த சாபத்தால் வந்தது.

ச:—சர்வசம்மார காலத்தில் அரிபிரமாதியனைத்துயிர்களும் வடவைத் தீயாற்கடல் நாசமடைதல்போல நாசமடைய, அவ்விடந்தான் சுடுகாடு. அப்போது அங்கு மிச்சமிருக்கக் கூடியவர் அவ்வுயிர்களை நாசம் பண்ணிய கர்த்தாவே. அவர் சங்கார கருத்தாவாகிய சிவபிரான். அச்சம்மாரானந்தரம் அவர் உறையுமிடம் அச்சுடுகாட்டைத் தவிர வேறும் இருக்குமோ? ஆகையால் அம்மயானவாஸம் அவரது ஏகத்துவத்தை விளக்குஞ் சாட்சியாதல் காண்க. அது சாபத்தால் நேரக்கூடியதா? அற்றன்று, உலகிடைக் காணப்படும் ஸாமானிய மயானங்களில் வசிப்பதையே அச்சாபம் சுட்டுமெனின், அநுசாஸனம் 207-வது அத்தியாயம் ''மகா தேவர், '......தேவியே!......பூதங்களை நான் மயானத்தில் நிறுத்தினேன். ......அங்கிருந்துகொண்டு எல்லாப் பிராணிகளின் பயத்தையும் போக்குகிறேன்......பரிசுத்தத்தை விரும்பும் பிராமணர்கள் மயானத்தை எப்போதும் பரிசுத்த மென்று சொல்லுகின்றனர். தவம் செய்கிறவர்களாலும் மோக்ஷத்தைக் கருதுகிறவர்களாலும் மயானம் எப்போதும் அடையப்படுகிறது........அது வீரர்களுடைய ஸ்தானமாயிருப்பதாலும் அதனை எனக்கு இடமாகச் செய்து கொண்டேன்......உச்சிப்போதிலும் காலை மாலைகளிலும் ருத்திர

ரைத் தேவதையாகவுடைய (திருவாதிரை) நக்ஷத்திரத்திலும் தீர்க்காயுளை விரும்புகிறவர் அசுத்தத்துடன் அங்கே போகக்கூடாதென்பது நிச்சயம். பூதங்களினுலுண்டான பயத்தைப் போக்குவதற்கு என்னைத் தவிர மற்றொருவனால் முடியாது. நான் அங்கிருந்துகொண்டு ஒவ்வொருநாளும் ஜனங்களையெல்லாம் காப்பாற்றுகிறேன். என் கட்டளையினால் இங்குள்ள பூதங்களின் கூட்டங்கள் யாரையுங் கொல்லுவதில்லை. உலகங்களின் நன்மைக்காக அந்தப் பூதங்களை நான் மயானத்தில் ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருக்கிறேன்.......' என்று சொன்னார்" என்று புகழ்ந்து அம்மயானம் சுத்த மென்பதையும் சிவபிரான் அதில் வசிப்பது லோகோபகார மென்பதையுங் காட்டுகிறது. இங்குஞ் சாபத்துக்கிடமேது? 'மாயா மமதாஹங்கார தஹநம் ச்மசாநே' (மாயை மமதை யகங்காரங்களைத் தகித்தவிடம் மயானம்) என்ற நிர்வாணத்தாற் சிவபிரானிருந்தருளும் மயானம் ஞானிகளினுள்ளமுமேயாமென்க. மகா மயானத்தை ஆனந்தவனமென்று அவ்வுபநிஷத்தே 'மஹாச்மசாநேப்யாநந்தவநேவாஸ' என்ற வாக்கியத்தாற் கூறியுமிருக்கிறது.

4. ஆ:— தக்ஷன் வீரபத்திரனையும் பூதப்பிரேத பசாசங்களுக்குத் தலைவனுமாறு சபித்தான்.

ச:—அம்மூண்மையாயின் அடிபட்ட நாய் குரைப்பதுபோன்றதாகும் அடிபட்ட தக்ஷன் அவ்வீரரைச்சபித்தது. சாந்தி 211வது அத்தியாயத்திற் கருடன் 'அந்த ஸ்ரீஜநார்த்தனரையும் நான் ஆகாயத்தில் ஸந்தோஷத்துடன் கண்டேன். அவர் பாற் கடலின் மேற்பாகத்திலுள்ள சிறந்த கறுத்த மேகம் போலத் தோன்றினர்....... ப்ரம்மா முதல் ஸ்தம்பமென்னும் ஜந்துவரையில் சபிக்கக்கூடாதென்று கோபத்துடன் புருவங்களை நெரித்துக்கொண்டு, கோணலான கண்ணுள்ள பலவிதப் பூதக் கூட்டங்கள் அங்கு இருந்தன' என்று தான் 'பாற் கடலின் வடகரையில்......ஸ்ரீ ஹரியினுடைய வைகர்ணமென்னும் ஆலயத்திற்' பூதங்களைக்கண்டதாகச் சொல்லுகிறான். அவைகளின் மகிமாவர்ணனங்களும் அவ்வத்தியாயத்திற் பிரசித்தம். அங்ஙனம் பூதகணங்களுக்கு அவ்விஷ்ணுவாலயமும் உறைவிடமாகுற் பூர்வபக்ஷம் அவைகளைமதிக்கத்தானேவேண்டும்? அங்ஙனமின்றி அவைகளையும் அவைகளுக்குத் தலைவராயிருப்பவரையும் சாபவசத்தினரென அவமதித்தல் அதற்குப் பெரியதோர் பாகவதாபசாரமாகும். பூர்வபட்சம் பூதப் பிரேத பசாசங்களை நிந்தித்த பாவத்தாலேயே அது மதிக்கும் ஆழ்வார்களுள் ஒருவர் பூதமும் மற்றொருவர் பேயுமானரென்க. நம்மாழ்வார் சிறிது காலமாயினும் பிரேதசுபாவத்தோடிருந்தார். நிற்க, அந்த யாகத்தில் 'நந்தியானவன் ப்ராஹ்மணர்கள் அர்த்தகாமபராளாய்ப் போகக்கடவர்களென்றும், பின்னும் அநேக விதங்களாகச் சபித்தான்'

என்றது பூர்வபட்சம். ஆனல் அந்தச் சாபம் பலித்ததா? இல்லையா? என்பதைச் சொல்லாமல் விட்டுவிட்டது. தர்மத்துக்கும் மோக்ஷத்துக்கும் சாதனமான வைதிக சைவாசாரம் பிராமணர்களாற் கைவிடப்பட்டது. அவர்கள் ஆசரிப்பன பாஞ்சராத்திர மாயாவாதாதி அவைதிகமதங்களே. ஆகலின் அச்சாபம் அவர்களுக்குப்பலித்ததென்பது வாஸ்தவமாயிற்று. "அந்த யாகத்தை.......வீரபத்ரர் .........எரித்தனர்.........பிறகு, நான் முகன் முதலான எல்லாத் தேவர்களும் ஸ்ருஷ்டி கர்த்தனை தக்ஷனும் அஞ்சலி செய்து கொண்டு, 'நீர் யார்? சொல்லும்' என்று கேட்க, 'வீரபத்ரர், '......நான் வீரபத்திரரென்று பெயர் பெற்றவன்.........உமாபதியான தேவதேவரைச் சரணமடை.......' என்றுசொன்னர்" என்ற சாந்தி 290வது அத்தியாயத்தால் பிரமனுகிய அப்பனும் தக்கனுகிய பிள்ளையும் வீரபத்திரர் முன் நின்ற நிலையைக் கண்டவர் தக்ஷனுக்கு வீரபத்திரரைச் சபிக்க வலியுண்டென்று மறந்துஞ் சொல்வரா?

5. ஆ:— தக்ஷன் விரும்பின யாகபலனை விஷ்ணுவே அவனுக்குக் கொடுத்தார்.

ச:— அவன் விரும்பின பலன் இன்னதென்று சொல்லாமல் அவனுக்கு அதைக் கொடுத்தார் விஷ்ணுவென்பது வஞ்சப் பிரசங்கம். பிரத்தியக்ஷ பலன் அந்தப் பெரியவனுக்குத் தலை போனதும் ஆட்டின்தலை வந்ததுமேயாம். அப்பலனை வீரபத்திரமூர்த்தியே அவனுக்குக் கொடுத்துவிட்டார். அவன் சிவபிரானைப் பணிந்த பிறகு அப்பிரானே அவனுக்கு வரங்கள் கொடுத்த செய்தி மேற் கூறப்பட்டது.

6. ஆ:— ஹவிர்ப்பாகத்தை முதலில் உருத்திரனுக்குக் கொடுத்து அப்பால் புனர்ஸ்நாநமும் ஆசமனமுஞ்செய்து மற்றைத் தேவர்களுக்குங் கொடுக்கவேண்டுமென்று விஷ்ணு நியமித்து அவனுக்கேற்பட்ட சாபதோஷத்தை மாற்றினர்.

ச:— இந்த நியமத்தை 'ப்ரஹ்மா இந்த்ராதி தேவர்கள்' செய்ததாக அக்கட்சிக் குறிப்புச் சொல்லுகிறது. இஃதொரு முரண். "ஆயின், 'அப உபஸ்ப்ருச்ய' என்கிற வாக்கியத்தால் உதக பரிசேஷனம், ருத்ராஹ்ப்யனந்தரத்தில் ஆசாரமாவதென்னையெனின் யாகங்களில் ருத்ராவிர்பாகம் முதலில் கொடுக்கவேண்டியதாகலின் அங்ஙனங் கொடுத்தபிறகு விஷ்ணுவாதிதேவர்களுக்கு அவரோடு சமானமாக வுடனே கொடுக்கப்படாதாகையால் ருத்ராஹ்ப்யனந்தரமாகிய ஜலபரிஷேசனம் உருத்திரமூர்த்தி அந்தர்த்தானமாதற் பொருட்டென்று முதனூலுணர்த்துமென்க. 'அப: பரிச்ஷிஞ்சதி ருத்ரஸ்யாந்தர்ஹித்யை:' என்கிறசுருதியால்உருத்திரமூர்த்தியினுடைய அந்தர்த்தானத்திற்காகச் சலபரிஷேசனம்

செய்கின்றார்களென்று பெறப்பட்டது. 'யோமஹாதேவ மங்யே ந்ஹீந தைவேநதுர்மதி: ஸக்ருத் ஸாதாரணம் ப்ரூயாத் ஸோந்த்ய ஜோநாந்த்யஜோந்த்யஜ:' என்கிற புராணவசனத்தால் எவன் அன்னியமான ஹீனதெய்வங்களோடு சமானமாக ஒரு வார்த்தையாவது மஹாதேவரைப் பேசுவானே அந்தத்துர்மதியே சண்டாளனுவானன்றி லோகப் பிரதீதியால் சண்டாளனென்றழைக்கப்படுமவன் சண்டாளனுகான் என்று ஸ்பஷ்டமாய்க் கூறப் பட்டிருக்கின்றது. மேல்வாக்கியங்களால் ருத்ராஹுத்யனந்தரம் ஜலபரிஷேசனப் பிரசங்கம் நிர்ப்பாதிதமாய் விட்டதென்க. இன்னுஞ் சிவபெருமானைச் சாமானியமாகிய இதரதெய்வங்களோடு சமானமாகக்கொண்டு நமஸ்காரஸ்தோத்திராதிகள் செய்யப்படாதென்று விதிக்கும் ருக்வேத வாக்கியத்தை யிங்கே யுதகரிக்கின்றோம். 'மாத்வாருத்ர பிக்ருதாமா நமோ நமோபிர்மாதுஷ்டு தீவ் ருஷபமாஸஹூதி:' இந்தச் சுருதியில், சுரச்சிரேஷ்டப் பிரபுவாகிய ஹே ருத்ரமூர்த்தி! உன்னை இதர தெய்வங்களோடு நமஸ்காரங்களாலும், துஷ்ட ஸ்தோத்திரங்களாலும், ஆஹ்வானங்களாலும் கோபிக்கச் செய்யோமாக என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதனால் சிவபெருமானோடு சமானமாக இதரதெய்வங்கட் கவிர்ப் பாகங் கொடுப்பாரைப் பரமேசுவரர் கோபிப்பாரென்பது பெறப் படுதலால் சகலதேவதாஸ்வாமியாகிய ஸ்ரீ ருத்ரமூர்த்திக்கு அன்னிய தெய்வங்களோடு ஸமானமாய் ஸ்மார்த்த சுரௌத கர்மங்களில் ஆஹுதி செய்தல் கூடாதென்றும், ருத்ராஹுதி கொடுத்த பிறகு அவர் அந்தர்த்தானஞ் செய்தற்காகவே ஜலபரிஷேசனம் ஆசாரமாயிற்றென்றும், உருத்திர மூர்த்தி அந்தர்த்தானஞ் செய்த பிறகே மற்றைத் தேவர்களுக்கு ஆஹுதி கொடுத்தல் வேண்டுமென்றும் நிச்சயித்து மேலோரநுஷ்டித்து வருகின்றனர். சிவ பெருமான் அந்தர்த்தானஞ் செய்யாத பட்சத்தில் அவரோடு சமானமாய் அன்னிய தெய்வங்கட் காஹுதி செய்யக்கூடாதாகையால் ருத்ராஹுத்யனந்தரமான ஜலபரிஷேசனம் அத்தியாவசியகரமாயிற்றென்க. இப்படி விசாரித்தறியாத மூடஜனங்கள் உருத்திர மூர்த்தி நீச்சதெய்வமாகையால் ஜலபரிஷேசனம் அவர்க்காசாரமாயிற்றென்று தங்கள் சுவடிகளில் எழுதியிருக்கின்றனர். அவர்களறியாமையை யெடுத்துரைக்க எமக்கு நாணமாயிருக்கின்றது. அவரப்படியே நீச்சதெய்வமாகிற பட்சத்தில் சமஸ்த தேவர்களுக்குங் கொடுத்துத்தீர்ந்த பிறகு அவர் பெறுதற்குரியாரேயன்றி முதலில் அல்லது இடையிற் பெறுதற்குரியாரென்பது எவ்வளவும் பொருந்தாது. இங்ஙனமாகவும், ஜலபரிஷேசனம் விதித்தமையால் அவர்க்குப்பின்னர் ஆஹுதி பெறுதற்கான தேவர்களின்னுமிருப்பதாகப் புலப்படுகின்றது. ஆகவே, அவர்க்குப் பிற்பட்டவர்கள் அதிக நீச்சமுடையாரென்பது பெறப்பட்டது. அதிக

நீச்சமுடையாரைவிட்டு அற்ப நீச்சமுடையார்க்குச் சலபரிஷேசனம் விதித்தது யாது காரணம்? அன்றியும், உருத்திரமூர்த்தி நீச்ச தெய்வமானபோது முறையே அவர்க்குப் பின்னவர்கள் அதிகநீச்சமுடையாரென்பதுபெறப்பட்டநியாயத்தால் ஜலபரிஷேசனம் அநாவசிய மென்றே நிச்சயிக்கப்படுகிறது. உருத்திர மூர்த்தியொருவர் தவிர மற்றவர்கள் நீச்சமுடையாரல்லவெனின், அல்லாதவர்களைப் பின்னிருத்தி உருத்திர மூர்த்தியை முன்னிருத்தியதற்குக் காரணம்வேண்டும். இது எங்குள்ள சாம்பிரதாயம்? இனி இந்த விதிமுறையால் பஞ்சமனுக்கு முன்மரியாதையும், பிராமணனுக்குப் பின் மரியாதையும் செய்யவேண்டிவரும். இப்படிப் பூர்வோத்தர விரோதங்கள் வெகுவாய்க் காணப்படுதலால் உருத்திர மூர்த்தியை நீச்சதெய்வமென்று பிதற்றியது பேதமையாய் விட்டது. ஆகவே, அதிபரமாப்தராகிய உருத்திரமூர்த்திக்குக் கொடுத்த கரங்கொண்டே நீச்ச தெய்வங்களாகிய விஷ்ணுவாதி தேவர்களுக்குச் சமானமாய் ஆஹுதி கொடுக்கப்படாதென்றே ருத்ராஹுத்யனந்தரமான ஜலபரிஷேசனம் ஆசாரமாயிற்றென்க. மேலிரண்டு நியாயங்களாலும் ஜலபரிஷேசனப்பிரசங்கம் நிர்ப்பாதிதமாய் விட்டதாகையால் எக்ஞபதித்துவம் சிவபெருமானுக்கே யென்பது எல்லா விதத்தானுஞ் சாதிக்கப்பட்டது" என்ற 'சிவாதிக்ய ரத்நாவளி' முதற் பாகத்தால் அவ்வாக்ஷேப விருள் ஓடியதறிக.

---

## 11. பார்த்தஸ்ய ஸ்வாஸ்த்ர தாநாத்.

### தனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்.

பொருள்:— அர்ச்சுனனுக்குத் தனது பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தலானும் என்பது.

அர்ச்சுனன் இரண்டுமுறை சிவபிரானிடம் பாசுபதாஸ்திரம் பெற்றான். அவற்றின் மூலவசனங்கள் வருமாறு:— (கதை அவைகளால் விளங்குமாகலின் தனித்தெழுதப்படவில்லை).

பாரதம் வனம் 38, 39, 40-வது அத்தியாயங்களிற் கண்டது இது. "எல்லா மஹரிஷிகளும் அர்ஜுனன் உக்கிரமான தவத்திலிருப்பதைத் தெரிவிக்கவேண்டுமென்ற எண்ணமுள்ளவர்களாகி... பரமசிவனை நோக்கிச் சென்றார்கள். யாவரும்......மஹாதேவரை வணங்கி......அந்தச் செய்கையைத் தெரிவித்தார்கள்........பரமசிவனார்......வேடன் வேஷத்தைத் தரித்துக்கொண்டு.........புறப்பட்டார்......அவர்......மூகனென்பவனைப் பார்த்தார்......அர்ஜுனன்......அடிக்கவே.......வேடனும்........பாணத்தை ஒரே குறியான அந்தப் பன்றியில் ஒரே காலத்தில் விட்டான்!............அந்த

இரண்டு பாணங்களும்......அந்த மூகனுடைய சரீரத்தில் ஒரே காலத்தில் விழுந்தன......அந்த ராக்ஷஸன்......இறந்தான்......... அர்ஜுனன்......ஒரு மனிதரைக் கண்டான். அர்ஜுனன்......... அவரை நோக்கி......'நீ யார்?.........என்றுற் குறிவைக்கப்பட்ட இந்தப் பன்றியை நீ எதற்காக அடித்தாய்?......இது வேட்டைக் குரிய முறையன்று......உன்னை உயிரிலிருந்து நழுவச் செய்வேன்' என்றான்......வேடன்......'....இது முந்தி எனக்கே குறியாயிற்று. (ஆதலால்) என்னுடையதே......ஓ! மந்தபுத்தியுள்ளவனே!...... என்னால் உயிருடன் விடப்படமாட்டாய்......' என்றான். அர்ஜுனன்......பாணங்களாலும் அடித்தான்...பரமசிவன்....பாணங்களை ஏற்றுக்கொண்டார்.... அர்ஜுனன் வேடனிடத்தில் சரமாரியை நன்கு பெய்தான். அதனைச் சிவன் சந்தோஷமுள்ள மனத்துடன் ஏற்றுக்கொண்டார். பிநாகியானவர் ஒரு முகூர்த்த காலம் அம்பு மழையைத் தாங்கிக்கொண்டு மலைபோல் அசைவற்றவராகிக் காயப் படுத்தப்படாத சரீரத்துடன் நின்றார்.....அர்ஜுனன்......நாராசங்களை......விட்டான்.....சூலபாணியான பகவான்..........கல் மழையை மலையானது ஏற்றுக்கொள்வதுபோல அவைகளை ஏற்றுக் கொண்டார்..... அர்ஜுனன் வில் நுனியால் சண்டை செய்தான். மலையில் வசிப்பவர்......வில்லையும் பறித்துக்கொண்டார்....அர்ஜுனன்......கத்தியை......அவருடைய தலையில் எறிந்தான்: அந்த... கத்தியும் அவருடைய தலையை யடைந்து சிதறிற்று...பகவான்... கைக் குத்துக்களால் அர்ஜுனனைத் துன்புறுத்தினார்......மஹாதேவர்......அவனை....பலத்தால் மிஞ்சினார்......தேவதேவரால்... அர்ஜுனன் இறுகக்கட்டப்பட்ட அவயவங்களால் உருண்டையாகச் செய்யப்பட்டவன் போல விளங்கினான். அர்ஜுனன் மூச்சற்றவனும் அசைவற்றவனும் ஆனான்; பிறகு, ஒன்றுந் தெரியாமல் (மயங்கி) விழுந்தான். அதனால், சங்கரர் சந்தோஷமுள்ளவராயினார். அந்தப் பாண்டவன்......திரும்பவும் அறிவு வந்தவனாகி எழுந்து... பிநாகியைச் சரணமடைந்து மண்ணாலான பேடையைச் செய்து கொண்டு அந்தச்சிவபிரானைமலர்மாலையால் பூஜித்தான். அப்பொழுது ......அர்ஜுனன், அந்த மாலையை வேடனுடைய தலையில் இருக்கக் கண்டான். ஸந்தோஷத்தால் மனத்தெளிவை அடைந்து அவருடைய கால்களில் விழுந்தான். பிறகு, சங்கரர், அவன் விஷயத்தில் ப்ரீதியுள்ளவராயினர். பிறகு, அவர்......இவனை நோக்கி... 'ஓ! ஓ! அர்ஜுன!..........உன் விஷயத்தில் பிரீதி அடைந்தேன். என்னைப்பார்......உனக்கு ஞானக் கண்ணைக் கொடுக்கிறேன்...... அஸ்திரத்தை...உனக்குக் கொடுப்பேன். நீயன்றோ.....என்னுடைய......அஸ்திரத்தை ஏற்றுக்கொள்வதற்குச் சக்தியுள்ளவன்?' என்றார். பிறகு அவ்விடத்தில் அர்ஜுனன்...... மஹாதேவரைப் பார்வதியுடன் பார்த்தான்...அந்த அர்ஜுனன் முழுங்கால்களால்

பூமியை அடைந்தும் தலையினால் வணங்கியும் சிவபெருமானை அருள் வரும்படி செய்தான்... ஹரர்...'ஓ! மனிதருட் சிறந்தவனே!...... வரனை... பெற்றுக்கொள்ளு...' என்றார். அர்ஜுனன்...'ஓ! வ்ருஷபத்வஜரே! ப்ரபுவே! மஹாதேவரே!... பாசுபதாஸ்திரத்தை விரும்புகிறேன்...' என்றான். சங்கரர்...'... பாண்டவ! நான்... பாசுபதமென்கிற அஸ்திரத்தை உனக்குக் கொடுக்கிறேன்...' என்றார்... அர்ஜுனன்.... பரமசிவனைப் பாதங்களைப் பிடித்து வணங்கி, 'உபதேசம் செய்வீராக' என்று வேண்டினான்... பரமர்.... அந்த அஸ்திரத்தை அர்ஜுனனைக் கற்கச் செய்தார். (அந்த அஸ்திரமானது).... அர்ஜுனனை வந்தடைந்தது. அப்பொழுது அர்ஜுனனும்...... அதனைப் பெற்றுக்கொண்டான்.... சிவபிரான்... காண்டீவ மென்ற வில்லை... அவனுக்குக் கொடுத்தார். பிறகு.... ஈச்வரர் பார்வதியுடன் ... அர்ஜுனன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஆகாசத்தை அடைந்தார்". சிவபிரான் தம்மோடு அர்ஜுனன் சண்டைசெய்த போது அவனிடமிருந்து பறித்துக்கொண்ட காண்டீவத்தைத் திருப்பிக் கொடுத்தா ரென்பதையே 'காண்டீவ மென்றவில்லை... கொடுத்தார் என்பது காட்டுகின்றது.

துரோணம் 79, 80, 81-வது அத்தியாயங்களிற் கண்டது இது. "வாஸுதேவர்... அர்ஜுனனுடைய அரண்மனை சென்று தீர்த்தத்தை ஆசமனம் செய்து மங்களகரமான லக்ஷணங்களுள்ள தரையில் வைடூர்யத்திற் கொப்பான தர்ப்பங்களை நல்ல படுக்கையாகப் பரப்பினர். பிறகு, அந்தப் படுக்கையை உத்தமமான ஆயுதங்களால் சூழப்பட்டதாகச் செய்து, மாலையினாலும் அக்ஷதங்களாலும் மிக்க மங்களகரமான கந்தங்களாலும் சாஸ்திர முறைப்படி அலங்கரித்தார். பிறகு தீர்த்தத்தை ஆசமனம் செய்தவனும்... பரிசாரகர்களை யுடையவனுமான பார்த்தனுக்கு, திரியம்பகரின் பொருட்டுத் தினந்தோறும் இரவில் செய்வதான பலியைக் காண்பித்தார். பிறகு, பார்த்தன் ஸந்தோஷமடைந்து மாதவரைக் கந்தங்களாலும் பூமாலைகளாலும் அலங்காரஞ் செய்து, இராத்திரியில் செய்வதான அந்தப் பலியை அந்தத்திரியம்பகருக்காக நிவேதனஞ் செய்தான். கோவிந்தர் பல்குனனைப் பார்த்து, 'நல்லது, நல்லது' என்று... சொன்னர். பிறகு... கிருஷ்ணர்... தம்... இடம் சென்றார். .... அந்த அர்ஜுனனிடம்.... கருடத்வஜர் ஸ்வப்னத்தில் வந்தார்.... பீபத்ஸு.... அப்பொழுது, 'கேசவரே!.... பெரிய ப்ரதிஜ்ஞை ஜயத்ரதனைக் கொல்லும் விஷயத்தில் என்னால் செய்யப்பட்டது... ப்ரதிஜ்ஞை.... தவறுமேயானல் என்னைப்போன்றவன் எவ்வாறு ஜீவிப்பான்?....' என்று... சொல்லினன்.... கண்ணபிரான் கிழக்கு முகமாக ...விருந்து ஜலத்தைத் தொட்டு... அர்ஜுனனுடைய ஹிதத்தின் பொருட்டு, 'பார்த்த!.. பாசுபத மென்கிற உத்தமமான அஸ்திர

மானது சாச்வதமானது. அந்த அஸ்திரத்தைஇப்பொழுது நீ அறிந்தால் நாளைத்தினம் ஜயத்ரதனைக் கொல்வாய். ஆகலால், அதனை அறிவதற்காக விருஷபத்வஜரை...சரணமடை...அந்தத் தேவரை.... தியானம் செய்து மௌனத்துடனிரு பிறகு, அவருடைய அனுக்ரஹத்தினாலே...அந்தஅஸ்திரத்தை....நீஅடைவாய்' என்று...சொன்னார்...தனஞ்சயன்...ஆசமனம் செய்து...ருத்திரரைத் தியானித்தான். பிறகு, அர்ஜுனன்...தன்னைக் கேசவருடன் ஆகாயத்தில் கண்டான்...கிருஷ்ணனோடு கூடின அர்ஜுனன் ஆகாசத்தையும்...விஷ்ணுபதமென்னுமிடத்தையும் அடைந்து............சென்றான். அப்பொழுது அவன்...ஒளியுள்ள ஒரு மலையையும் கண்டான்... அதன் உச்சியில்......விருஷபத்வஜரைக் கண்டான்.........வாஸுதேவரோ பார்த்தனோடுகூட அவரைப் பார்த்து, சாச்வதமான வேதமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சிரஸினால் வணங்கினார்...அந்த ஈச்வரரை அப்பொழுது கிருஷ்ணார்ஜுனர் இருவரும் வாக்கினாலும் மனத்தினாலும் புத்தியினாலும் செய்கையினாலும் நமஸ்காரஞ் செய்தார்கள்...அந்தச் சங்கரரை அவ்விருவர்களும் சரணமடைந்தார்கள்...பிறகு ஈச்வரர்...அவ்விருவர்களையும் பார்த்து ...'புருஷ சிரேஷ்டர்களே! ..நீங்கள் வந்த காரியம் என்ன? அதனை நிறைவேற்றுகிறேன்'...என்று கூறினார். பிறகு...வாஸுதேவர் அர்ஜுனனிருவரும் அபிமுகமாக எழுந்திருந்து கைகளைக் குவித்துக் கொண்டு பக்தியோடு திவ்யமான ஸ்தோத்திரத்தினால்...துதித்தார்கள். '...எங்களுடைய அபீஷ்டமானது ஸித்திக்கவேண்டும்' என்று கூறினார்கள்....அர்ஜுனனோடு சேர்ந்து வாஸுதேவர் மஹாதேவரை ஸ்தோத்திரம் செய்துவிட்டு அப்பொழுது பாசுபதாஸ்திரத்தை அடைவதற்காக அவரை ப்ரஸன்னமாகும்படிசெய்தார். பிறகு...பார்த்தன்...விருஷபத்வஜரைமலர்ந்தகண்களால் கண்டான். தன்னால் நன்றாக இரவில் ஏற்படுத்தப்பட்டதும் வாஸுதேவருக்கு நிவேதனம் செய்யப்பட்டதும் சாஸ்திரத்தில் சொல்லியமுறைப்படி அனுஷ்டிக்கப்பட்டதுமான அந்தப் பலியையும் முக்கண்ணரருகில் கண்டான். பிறகு, பாண்டவன்...சங்கரரை நோக்கி, 'நான் திவ்யமான அஸ்திரத்தை விரும்புகிறேன்' என்று கூறினான். பிறகு சங்கரர்...வாஸுதேவரையும் அர்ஜுனனையும் பார்த்து '...அந்தத் தடாகத்தில்...என்னால்...வில்லும் அம்பும் வைக்கப்பட்டிருக்கின்றன...அம்புடன் கூடின...அந்தவில்லை...கொண்டு வாருங்கள்' என்று கூறினார்...அந்த அர்ஜுனனும் அச்சுதரும்...அந்தத் தடாகத்தை யடைந்து ஜலத்தினுள் பயங்கரமான ஒரு ஸர்ப்பத்தைக் கண்டார்கள்...வேறு ஒரு சிறந்த ஸர்ப்பத்தையுங் கண்டார்கள். கிருஷ்ணரும் பார்த்தனும்...ஆசமனஞ் செய்து கைகளைக் குவித்துக்கொண்டு...ருத்திரரை நமஸ்கரித்து...சதருத்ரியமென்கிற...மந்திரத்தைஉச்சரித்துக்கொண்டு...அந்தஸர்ப்பங்களையும் ஸ்தோத்திரம்

பண்ணினார்கள். பிறகு அவ்விரண்டு...ஸர்ப்பங்களும் ருத்ரருடைய மகிமையினாலே...வில்லும் அம்புமாயின...அவ்விருவரும்...இரண்டையும்...பரமசிவனிடத்தில் கொடுத்தார்கள்...சங்கரர்...அந்தப் பாசுபதாஸ்திரத்தையும் பிரதிஜ்ஞையினுடைய நிறைவேறுதலையும் வரனாகவளித்தார்...அர்ஜுனன் ஈச்வரரிடத்திலிருந்து...பாசுபதாஸ்திரத்தைப் பெற்று...தன் காரியம் நிறைவேறினதென்றே எண்ணினான்...அர்ஜுனனும் ஹிருஷீகேசரும் ஸந்தோஷமடைந்து அந்த மஹேசுவரரை முடிகளாலே பல முறை வணங்கினார்கள்...அர்ஜுனனும் கேசவரும் ருத்ரரால் அனுமதி கொடுக்கப்பட்டு மிகுந்த ஸந்தோஷத்தோடு தம்...மிடத்தை வந்தடைந்தார்கள்”.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:-

1. ஆ:— கயிலாச யாத்ரா சமயத்தில் அர்ச்சுனன் சிவபூசை செய்யவேண்டுமென்று கிருஷ்ணரிடம் சொன்னான். கிருஷ்ணர் அவனைப்பார்த்து, ‘என்பாதங்களில் நீ பூசை செய். அப்பூசையைக் கயிலையிற் சிவன் முடியிற்காண்பாய்’ என்றார். அவனும் அப்படியே செய்து கிருஷ்ணரின் காலிலிட்ட பூக்களைக்கயிலையிற் சிவன் முடியிலிருக்கக் கண்டான். அதற்குப் பிரமாணம் ‘பார்த்தோப நீதம் மதுஸூதநஸ்ய பாதாரவிந்தார்ச்சித சித்ரபுஷ்பம்—ததர்ச கங்காதர மௌளிமத்யே பபூவ வீர: க்ருத நிச்சிதார்த்த:’ என்ற பாரதம். ‘தீர்த்தனுலகளந்த சேவடி மேற் பூந்தாமஞ்—சேர்த்தி யவையே சிவன் முடிமேற் றான்கண்டு—பார்த்தன் றெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை—பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே’ என்றார் நம்மாழ்வாரும். சிவனைப் பரம்பொருளென வெண்ணியிருந்த அர்ச்சுனனுக்கு அம்மயக்கத்தைத் தெளிவித்தற்கே அவனோடு கிருஷ்ணருங் கயிலை சென்றார்.

ச:— ‘பார்த்தன் மாதவனை அலங்காரஞ் செய்து பலியைத் திரியம்பகருக்காக நிவேதனஞ் செய்தான்’ என்பது மூலம். மாதவனை—மாதவராகிய விக்கிரகத்தில் திரியம்பகருக்காக—திரியம்பகனை ஆவாகித்தது பார்த்தனுக்குக் கிருஷ்ணர் விக்கிரகமும் சிவபிரான் அதிலாவாகிக்கப்பட்ட வழிபடு கடவுளுமாயினரென்பதே அதனாற் கொள்ளக் கிடக்கிறது. ‘வாஸுதேவருக்கு நிவேதனம் செய்யப்பட்ட பலியை முக்கண்ணரருகில் கண்டான்’ என்பது அம்மூலத்துள்ள மற்றொரு வாக்கியம். வாஸுதேவருக்கு—வாஸுதேவராகிய விக்கிரகத்தின்முன் அர்ச்சுனன் கிருஷ்ணரின்பாதத்திலிட்ட பூக்களைச் சிவபிரானின் முடியிற் கண்டானென்பதற்கு அம்மூலத்தில் வசனமில்லை. அதனாற் ‘பார்த்தோப நீதம்’ என்ற வாக்கியம் படைக்கப்பட்டதாகும். சமீப காலத்தில் வைஷ்ணவ பூமான்களால் மொழிபெயர்த்து வெளியிடப்பட்ட தமிழ் வியாஸ பாரத வசனத்திற்றானும் அவ்வாக்கியப் பெயர்ப்புச் சூனியம். ஆக,

அந்நம்மாழ்வார் பாட்டும் மூலவசனத்தோடுமுரணி மதிப்புக் குலைய லாயிற்றென்க. ஆனால் வில்லிபுத்தூரார் அப்பாட்டிலுள்ள அடி, முடியென்ற தார்ப்பிரயோகங்களைத் தள்ளி மேல் என்ற சத்பிர யோகத்தையமைத்துக் 'கண்ணன் மேலணி மலரனைத்துங் காயெரி-வண்ணன் மேற் காண்டலு மகிழ்ந்த மேதினி—யுண்ணு மாதவன் சிவனுருவ மென்றுணர்ந்—தண்ணலு முடல் புளகரும் பினனரோ' என்று மூலவசனத்தை யனுசரித்துப் பாடிக் கௌரவமெய்தினர். 'செங்க ணெடியான் மேற் றேர்விசய னேற்றியபூப் பைங்கண் வெள் ளேற்றான் பாற் கண்டற்று—லெங்கு, முடிமன்னர் சூடியபூ மொய்ம் மலர்த்தார் மாற, னடியிசையே காணப் படும்' என்ற முத்தொள்ளாயிரச் செய்யுளையும் நோக்குக. யுதிஷ்டிரராகிய மரத்தாக்குக் 'கிருஷ்ணனும் வேதமும் பிராமணர்களும் வேர்கள்' என்பது ஆதி 1-வது அத்தியாயம். கிருஷ்ணரும் உத்யோகம் 29-வது அத்தியாயத்தில் 'யுதிஷ்டிரரானவர் தர்ம ரூபமான பெரிய மரம்...நானும் வேதமும் பிராமணர்களும் (அதன்) வேர்' என்றார். அவ்வாக்கியத்திற்கு வடமொழிமூலம் 'மூலம் க்ருஷ்ணோ ப்ரஹ்மச ப்ராஹ்மணச்ச' என்பது. இதிலுள்ள 'ப்ரஹ்மம்' என்ற பதமே வேத மெனப் பெயர்க்கப்பட்டது. அப்பெயர்ப்புத் தப்பு. கிருஷ்ணரையும் பிராம்மணர்களையும் சல்லி வேர்கள்போற் பக்கங்களிலும் பிரமத்தை ஆணிவேர் போல் நடுவிலும் வைத்துளது அப்பர்வம். கிருஷ்ணரும் பிராமணருஞ் சேதனர்கள். பக்கவேர்கள் சேதனராஞல் ஆணிவேராகிய பிரமம் அவரினுஞ் சிறந்த சேதனமாக வன்றோ இருக்கவேண்டும்? அப்படியிருக்க அப்பிரமத்தை வேதமென அசேதன வஸ்துவாக மொழிபெயர்க்கலாமா? பாண்டவர் துரியோதனனிடமிருந்து ராஜ்யத்தைப் பெறுதற்கு மட்டும் கிருஷ்ணர் அவர்கள் சார்பாய் நின்றார். பிராமணர்கள் பாண்டவர்களுக்கு ஆசி கூறிக்கொண்டே அவர்கள் சென்றவிடமெல்லாஞ் சென்றார்கள். அவ்விருவர் சகாயங்களும் அவ்வளவே. ஆனால் ஐந்து இந்திரர்கள் பாண்டவராய்ப் பிறந்தது, லக்ஷ்மி துரௌபதியாய்ப் பிறந்தது, அவர்கள் அவளை மணந்தது, கிருஷ்ணர் அவர்களுக்குச்சகாயரானது, பார்த்தனுக்குக் காண்டீவம் பாசுபதாஸ்திரம் முதலியன கிடைத்தது, திரௌபதி துகிலுரியப்பட்டது, யுத்தத்தில் அவர்களெல்லாம் அடி உதை மோகம் மூர்ச்சை கிலேசம் ரோதனம் பயம் முதலியன அடைந்தது, முடிவில் அவர்கட்கு ஜயம் லாபம் மரணம் அநந்தரகதி கிடைத்தது ஆகியவெல்லாம் அப்பாண்டவர் வினையிருந்தவாறு அவர்கட்கு உறுத்தி வைத்தவர் சிவபிரானே. பாரதம் ஆத்யந்தம் அவ்வுண்மை பிரசித்தம். அக் காரணத்தால் அப்பிரம பதத்தாற் சுட்டப்பட்ட பரம்பொருள் சர்வஜ்ஞராகிய சங்கரரே யாவர். ஆகவே அர்ச்சுனன் சிவபாத்துவத்தை யயர்த்துச் சிறிதும் சீவியானென்க. கிருஷ்ணரும் அன்னரே.

2. ஆ:— அடியிலிட்டதை முடியிற் கண்டானென்பதை விலக்கிக் 'கண்ணன்மே லணிமல ரனைத்துங் காயெரி வண்ணன் மேற் காண்டலும்' என்பதைக் கொண்டாலும், 'அரியுஞ் சிவனு மொன்று' என்ற உலக வழக்குத்தானே போதரும்? அதனைவிட்டுக் கிருஷ்ணரை விக்கிரக மென்றும் சிவனை அதிலாவாகிக்கப்பட்ட தெய்வமென்றும் ஏன் சொல்லவேண்டும்?

ச:—வில்லியார் அச்செய்யுளிற்றானே 'மாதவன் சிவனுருவம்' என்று சொல்லி விட்டார். உருவம்—திருமேனி. ஆகலின் அவ் வாக்ஷேபம் நிரஸ்தம். மேலும், மேற்காட்டப்பட்ட வனபர்வ மூலத்தில் அர்ஜுனன் 'மண்ணாலான மேடையைச் செய்து கொண்டு அந்தச் சிவபிரானை மலர் மாலையால் பூஜித்தான். அப்பொழுது...அர்ஜுனன், அந்த மாலையை வேடனுடைய தலையில் இருக்கக் கண்டான்' என்றிருக்கிறது. மேடையாவது சிவலிங்கம். அதனால் அம்மேடையுஞ் சிவபிரானும் ஒன்றெனச்சொல்லி விடலாமா? அவன் கிருஷ்ணரிடத்திற் சிவபிரானைப் பூசித்தானென்பதற்குத் தாற்பரியமாகவே அது மிளிர்கிறது. ஆகவே, மேடையும் கிருஷ்ணரும் விக்கிரகஸ்தானத்தில் ஒன்றே யென்பதும், மேடையிற் போலக் கிருஷ்ணரிலும் ஆவாகிக்கப்பட்ட பரமாத்வே சிவபிரானென்பதுமே தீர்மானம்.

3. ஆ:— கிருஷ்ணர் கைலைக்கு வந்ததும் சிவன் எழுந்து ஓடோடியும் வந்து அவரைவணங்கி எதிர்கொண்டழைத்து ஆசனத் திருத்தி அருகில் நின்று உபசரித்தான். அத்தகைய சிவனையா கிருஷ்ணர் வணங்குவர்?

ச:— 'பிறகு அந்த வார்த்தையைக் கேட்டு மிகுந்த புத்திசாலிகளும் மஹாத்மாக்களும் குற்றமற்றவர்களுமான வாஸுதேவர் அர்ஜுனனிருவரும் அபிமுகமாக எழுந்திருந்து கைகளைக்குவித்துக் கொண்டு பக்தியோடு திவ்யமான ஸ்தோத்திரத்தினால் பின்வருமாறு துதித்தார்கள்' என்றது துரோணம் 80-வது அத்தியாயம். அத்தோத்திரத்தையும் ஆண்டே காண்க. 'அர்ஜுனனும் ஹிருஷீகேசரும் ஸந்தோஷமடைந்து அந்த மஹேசுவரரை முடிகளாலே பல முறை வணங்கினார்கள்' என்பது அதன் 81-வது அத்தியாயம். சிவபிரான் கயிலையில் கிருஷ்ணரை அதிகார தோரணையிற்கூட உட்காரச் சொல்லவில்லை. அக்கேசவர் நின்ற வண்ணமே காரிய சாதகஞ் செய்துகொண்டு திரும்பினர்.

4. ஆ:—சிவன் செய்த மோகன சாத்திரப்படி. அவனையுங் கடவுளாக எண்ணிச் சிலர் வணங்கட்டு மென்ற திருவுள மேலீட்டால் கிருஷ்ணர் அவனை அங்கும் மற்ற விடங்களிலும் வணங்கிக் காட்டினர். ஆகலின் அவ்வணக்கம் நாடகமேயாமென்க.

ச:— 'வாஸுதேவர்....யுதிஷ்டிரரிடம் சென்று....அவருடைய பாதங்களில் வந்தனஞ் செய்து' என்றது ஆதி 206-வது அத்தியாயம். 'கண்ணபிரான்....குந்தியின் பாதங்களைத் தலையால் வணங்கினார்', 'கிருஷ்ண பகவான்....யுதிஷ்டிரரிடம் விடைபெற்று,...... அவருக்கு அபிவாதனத்தோடு பாதங்களைத் தொட்டு வந்தனஞ் செய்தார்' என்றது ஸபா 2-ம் அத்தியாயம். 'பலராமரும் கிருஷ்ணனும்......இந்திரனுக்கு நமஸ்காரஞ் செய்தனர்' என்றது அதன் 55-வது அத்தியாயம். 'வாஸுதேவர்......ஸாந்தீபனியின் பாதங்களை...பிடித்து வந்தனஞ் செய்தார்' என்றது அதன் 58-வது அத்தியாயம். 'வாஸுதேவர்....தர்மபுத்திரரை நமஸ்கரித்து' என்றது வனம் 12-வது அத்தியாயம். 'கோவிந்தர்.......யுதிஷ்டிரரை நமஸ்கரித்து' என்றது அதன் 22-வது அத்தியாயம். 'கிருஷ்ண பகவான் ...தர்ம ராஜரையும்...பீமனையும்...வந்தனம் பண்ணினார்' என்றது அதன் 185-வது அத்தியாயம். 'ஜனார்த்தனரானவர், விருஷபத்தைப் பின் பக்கத்தில் தொட்டுப் பிராம்மணர்களை நமஸ்கரித்து அக்கினியைப்பிரதக்ஷிணம் செய்து...', 'அச்சுதர் தேவர்களுக்கு நமஸ்காரம் செய்து' என்றது உத்யோகம் 82-வது அத்யாயம். 'ஜனார்த்தனர்... எல்லா முனிவர்களையும் வணங்கிப் பூஜித்து' என்றது அதன் 83-வது அத்தியாயம். 'பகவானும்...விதிப்படி சுத்தியைச் செய்து கொண்டு...ஸந்தியாவந்தனம் செய்தார்' என்றது அதன் 84-வது அத்தியாயம். பகவான் என்றது கிருஷ்ணரை. 'ஸ்ரீ வாஸுதேவர் அவளுடைய கிரகத்தில் புகுந்து, பாதங்களில் வணங்கி' என்றது அதன் 132-வது அத்தியாயம். அவள் என்றது குந்தியை. 'வாஸுதேவர் முதலான எல்லாரும் அவரை வணங்கினார்கள்' என்றது அதன் 157-வது அத்தியாயம். அவரென்றது பலராமரை. 'ஹலாயுதர், முதியவர்களான விராடனையும் துருபதனையும் வணங்கிவிட்டு' என்றது அவ்வத்தியாயம். 'அவ்விருவரும்.......அவருடைய இரண்டு சரணங்களிலும் வந்தனம் செய்தார்கள்' என்றது கர்ணம் 68-வது அத்தியாயம். இருவரென்றது கிருஷ்ணார்ஜுனர்களை. 'அவ்விருவரும் (யுதிஷ்டிரரை) வந்தனம் செய்து கைகுவித்து நின்றனர்' என்றது அவ்வத்தியாயம். இருவரென்றது கிருஷ்ணார்ச்சுனரை. 'கேசவர், ஸ்ரீவியாஸர் திருதராஷ்டிர மகாராஜர் இவர்களின் கால்களில், வணங்கி என்றது ஸல்யம் 64-வது அத்தியாயம். 'அவ்விருவரும் திருதராஷ்டிர ராஜனிடம் சென்று.........அவனுடைய பாதங்களைத் தொட்டுவணங்கினார்கள்...அவ்விருவரும், அவ்வாறே காந்தாரி, குந்தி, தர்மபுத்திரர், பீமஸேனன் இவர்களுடைய பாதங்களையும் தொட்டு வணங்கினார்கள்' என்றது ஆச்வமேதிகம் 52-வது அத்தியாயம். இருவரென்றது கிருஷ்ணார்ச்சுனரை. 'கண்ணபிரான் .......(அவளை)ப் பிரதக்ஷிணம் செய்தார்' என்றது அவ்வத்தியாயம்.

அவளை யென்றது குந்தியை. 'அவர்......தந்தையையும் தாயையும் நமஸ்கரித்தார்' என்றது அதன் 59-வது அத்தியாயம். அவரென்றது கிருஷ்ணரை. சிவன் மோகனசாத்திரஞ்செய்ததுபோல் யுதிஷ்டிரர், குந்தி, இந்திரன், ஸாந்தீபனி, பீமன், பிராமணர்கள், அக்கினி, தேவர்கள், முனிவர்கள், ஸந்தியை, பலராமர், விராடன், துருபதன், வியாசர், திருதராஷ்டிரன், காந்தாரி, வஸுதேவர், தேவகி ஆகியவர்களெல்லாம் என்னென்ன மோகன சாத்திரங்கள் செய்தார்கள்? அவர்களை யார் வணங்கட்டுமென்று கிருஷ்ணர் வணங்கிக் காட்டினார்? அவர் செய்த அத்தனை வணக்கங்களும் யதார்த்தமா? நாடகமா? யதார்த்தமாயின், அவர் சிவபிரானை வணங்கியது மட்டும் நாடகமாதல் யாங்ஙனம்? நாடகமேயாயின், கிருஷ்ணர் பிறந்து செத்தது வரையிலுள்ள அவர் செய்கல்லனைத்தையும் ஒன்றும் விடாமல் எடுத்தெழுதி அவற்றுள் இவையிவை நாடகம் இவையிவை யதார்த்தம் என்று பாகுபாடு செய்யப் பூர்வபட்சம் முன் வரவேண்டும். ஆனால் அது கிருஷ்ணரிடங் கண்ட அபகர்ஷங்களை யெல்லாம் லீலை யென்றும் உத்கர்ஷங்களையெல்லாம் யதார்த்தமென்றுமே கூறும். அப்படியானால் ராவண கும்பகர்ண கம்ச சிசுபாலனாதியரிடமும் அந்த நியாயத்தை யேற்றி அவர்களையுங் கிருஷ்ணரைப்போற் பரம்பொருள்களென்று ஏன் சொல்லக்கூடாது? அவர்களெல்லாம் ராமகிருஷ்ணரால் வதமாயினரேயெனின் அது அவ்விராவணனாதியர்க்கு ஒரு லீலையாகலாம். அவ்விராமகிருஷ்ணனாதியரையும் பரமெனச் சிலர் வணங்கட்டு மென்ற எண்ணத்தோடு தான் அவ்விராவணனாதியர் அவர்கள் கையால் மடிந்தவர்கள்போல் மாயஞ்செய்து கொண்டனரென்றால் இழுக்கொன்றுமில்லை. இம் முட்டுப்பாடுகளை யெல்லாம் யோசிக்கவல்லார், கிருஷ்ணர் தமது தாஸத்தன்மையையும் சிவபிரான் முதலியோரது எஜமானத் தன்மையையும் உணர்ந்து அவ்வணக்கங்களை யதார்த்தத்தாற் செய்தாரென்றே துணிவர். 'நாராயண பரோத்யாதா' என்பது நாராயணமும், 'சிவ ஏகோ த்யேய:' என்பது அதர்வசிகையும் ஆகும்.

---

## 12. நரஹரி விஜயாத்.

மானுட மடங்கலை வலிதபக் கோறலின்.

பொருள்:— நரசிங்கத்தை அதன்வலி கெடும்படி அடித்துக் கொல்லுதலானும் என்பது.

இரணியனென்பவன் ஓரசுரன். அவன் தேவர்களுக்குப் பரம விரோதி. அவர்கள் அவனுக்குப் பயந்தார்கள். விஷ்ணு அவர்களைக் காக்க விரும்பினார். அவரமிசமொன்று இரணியனுக்குப் பிள்ளை யாயிற்று. அப்பிள்ளையே பிரகலாதன். அவனைத் தந்தை வெறுத்

தான். அப்பிள்ளையைக்கொல்ல அவ்வரசுரன் செய்த சூழ்ச்சிகள் பல. ஒரு சமயம் அவ்விரணியனைக் கொல்ல விஷ்ணு நரசிங்க மானார். அவ்வுருத் தூணில் முளைத்தது. இரணியன் நரசிங்கத் துக்கு இரையானான். அவனிரத்தமும் அதனாற் குடிக்கப்பட்டது. அவ்விரத்த வெறியால் அது மூவுலகங்களையும் பீடித்தது. தேவர் கள் அதனைச் சிவபிரானிடம் முறையிட்டார்கள். அவர் சரபவுருக்கொண்டார். அச்சரபம் அந்நரசிங்கத்தைக் கொன்றது. இக்கதை காஞ்சிப்புராணத்துள்ளது.

'யோ கோரம் வேஷமாஸ்தாய சரபாக்கியம் மஹேசுவர: | ந்ருஸிம்ஹம் லோகஹந்தாரம் ஸம்ஜகார மஹாபல: | ஹரிக்ஹரந் தம் பாதாப்யா மநுயாந்தி ஸுரேச்வரா: | மாவதீ: புருஷம் விஷ் ணும் விக்ரமஸ்வ மஹாநிதி | க்ருபயாந் பகவாந் விஷ்ணும் விததார நகை: கரை: | சர்மாம்பரோமஹாவீரோ வீரபத்ரோ பபூவஹ | | ஸ ஏகோ ருத்ரோ த்யேய:' (பயங்கரமான சரபவேஷந்தாங்கி உலக பீடிதமாயிருந்த நரசிங்கத்தை ஹிம்ஸித்தவரும், பாதங்களால் ஹரியை ஹரிக்கின்றவரும், புருஷரூப விஷ்ணுவை வதஞ் செய்யா மல் தேவரீரது பராக்கிரமத்தை மாத்திரங் காட்டி யருளல்வேண்டு மென்று சர்வதேவர்களாலும் மகாராத்திரியிற் பின்றொடர்ந்து பிரார்த்திக்கப்பட்டவரும், கிருபையினால் நரசிங்கத்தின் உடம்பி னது தோலை நகங்களாற் கிழித்துரித்தெடுத்து வஸ்திரமாக வணிந்துகொண்டவரும், மஹா பலமுள்ள வீரபத்திர மூர்த்தியான வரும் ஆகிய எவருண்டோ அந்த வுருத்திரரொருவரே தியேயர்), 'யோமத்ஸ்ய கூர்மாதி வராஹ ஸிம்ஹாந் விஷ்ணும் க்ரமந்தம் வாமநமாதி விஷ்ணும் விவிக்லபம் பீட்யமா நம்...தஸ்மை ருத்ராய நமோ அஸ்து' (எவர் விஷ்ணுவையும் விஷ்ணுவினவதாரங்களான மச்சம் கூர்மம் வராகம் நரசிங்கம் முதலியவற்றையும் வாட்டிப் பீடிக்கின்றாரோ அந்த வுருத்திரருக்கு நமஸ்காரம் ஆகுக) என்ற சரபம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதைபற்றிய ஆக்ஷேபசமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— 'ஹரம் ஹரந்தமநுயாந்தி தேவா: | விச்வஸ் யேசாநம் வ்ருஷபம் மதீநாம்' (நரசிம்மனைக் கொல்லும்படி சரப ரூபமாய் வந்த சிவனைக் கொன்ற ஹரியைத் தேவர்கள் பின் சென்றார்கள்) என்ற வேதவசனத்தால் நரசிம்மமே சரபத்தைக் கொன்றதென்பது விளங்கவில்லையா?

ச:— 'ஹரம் ஹரந்தம்' என்பது பொய்ப்பாடம். 'ஹரிம் ஹரந்தம்' என்ற பாடமே சரியானது. அவ்வுண்மையை நேரில் வேதம் படித்தறிக. மேலும் இந்தப்பாடம் 'ஹரிம் ஹரந்தம் பாதாப்யா மநுயாந்தி ஸுரேச்வரா:' என்று சரபத்திற் பரிவசான மடைகிறது. இதிலுள்ள ஹரிபதம் விட்டுணுவைச் சுட்டுவதோடு நரசிங்கத்தையுஞ் சுட்டும். அதனை விசேடிக்கும் பதமோ ஆண்

டொன்றுமில்லை. ஆறாற் சரபத்தைச் சுட்டும் பதம் பல சொற்களால் விசேடிக்கப்பட்டுளது. சரபமே கொலையுண்டதென்பது அச்சுருதிக்குக் கருத்தாயின் அது அப்பறவையை அத்துணை விசேடிக்கவேண்டாம். ஆகவே சரபமே நரசிங்கத்தைக் கொன்றதென்பதுதான் அதன் கருத்து. அது அவ்வாக்கியத்துக்கு 'ஹரியென்னும் நரசிங்கத்தை அரிக்கின்றவராயும் அஷ்டாதசவித்தைகளையும் ஸ்வரூபமாகக் கொண்ட விருஷபஸ்வாமியாயும் ஈசானமூர்த்தியாயும் விளங்குகின்றவராயுமுள்ள சரபேசுவரரைத் தேவர்கள் பின்சென்றார்கள்' என்று நேர்பொருளுரைப்பதாற் கிடக்கும். பூர்வபட்சம் 'ஹரிம் ஹரந்தம்' என்ற பாடத்தையே கொண்டு தன் கருத்தை அதற்குப் பொருளாக்கப் அபார்ப்பதுமுண்டு. தவும் செல்லாதென்பது 'ஹரந்தம் என்னும் ஹரணக் கிரியையினது காரகாகாங்க்ஷையில் விஹிதமான கர்மபதயோஜனிக்கு ஸந்நிஹிதமாகி அநுகூலித்த ஹரிம் என்னும் பதத்தை விட்டு அத்யந்த வியவதானத்திலுள்ள ஈசானம் என்னும் பதத்தை வருவித்துக் கொண்டு அர்த்த கல்பனஞ் செய்தல் தூரான்வயமாக முடிவதால், ஸந்நிதிபங்கதோஷம் பிராப்தமாவதாகப் பண்டிதர் விதப்பர். விஸ்வேசரான சரபமூர்த்தியை நரசிங்கமாகிய விஷ்ணு அழித்தாரென்பதில்(அக்நிநாஸிசேத்)என்றபடி யோக்கியதாபங்கதோஷமுண்டாவதாகவும், (ஆகாங்க்ஷயோக்யதா | ஸந்நிமதாம் | பதாநாம் | ஸமூஹ வாக்யம்) என்னும் சாஸ்திரோக்தவாக்கிய லக்ஷண பங்க தோஷ முண்டாவதாகவும் அறியவேண்டியது. இந்த விசாரத்தால் பூர்வபக்ஷிகள் தமக்காதாரமாகத் தேடிக்கொண்ட தைத்திரிய சுருதியின் யோக்யதை வெட்டவெளியானதால், இனி அவர்களுடைய துன்மார்க்கம் பலிக்கமாட்டாது. இன்னும் விரிக்கிற் பெருகும்' என்று 'கூரேச விஜயபங்கம்' என்ற ஸத்சாத்திரத்தில் ஸ்பஷ்டம். மேலும் பொருள் வெளிப்படையாக விளங்குஞ் சுருதிகட்கேற்பவே பொருள் சிறிதோ பெரிதோ மறைந்து கிடக்குஞ் சுருதிகட்குப் பொருள் காணவேண்டு மென்பது முறை. மேல் மூலவசனம் வெளிப்படையான பொருளையுடைய சுருதி. பூர்வபட்சம் ஆண்டது அத்தகையதன்று. ஆகலின் அம்மூலவசனத்தை அனுசரித்தே அஃதாண்ட வசனமும் சீவிக்கவேண்டுமென்க. இன்னும் நரசிங்கத்தைச் சரபம் கொன்றதென்னும் வாக்கியம் சரபத்திலுள்ளது. அப்படியே சரபத்தை நரசிங்கம் கொன்றது மெய்யானல் அவ்வாக்கியம் ந்ருஸிம்ஹ பூர்வ உத்தரதாபிநிகளிற் கிடத்தலே பொருத்தம். அஃதில்லை.

2. ஆ:—விஷ்ணு நரசிங்கமானதும் சிவன் சரபமாகி அவரையெதிர்த்தான். விஷ்ணு நரசிங்க வடிவத்தை மாற்றிக்கண்டபேருண்டமாகிச் சரபத்தை யெதிர்த்தார். சிவன் சரபவடிவத்தை

மாற்றிச் சருவதோமுகமாகிக் கண்டபேருண்டத்தை யெதிர்த்தான். விஷ்ணு கண்டபேருண்ட வடிவை மாற்றிச் சருவதோபத்திரமாகிச் சருவதோமுகத்தை யெதிர்த்துக் கிழித்துவிட்டார்.

ச:— சிங்கத்தைக் கொல்லவல்லது சரபமும், சரபத்தைக் கொல்லவல்லது கண்டபேருண்டமும், கண்டபேருண்டத்தைக் கொல்லவல்லது சருவதோமுகம், சருவதோமுகத்தைக் கொல்லவல்லது சருவதோபத்திரமுமாமென்பதும் சருவதோபத்திரத்தைச் சருவதோமுகமும், சருவதோமுகத்தைக் கண்டபேருண்டமும், கண்டபேருண்டத்தைச் சரபமும், சரபத்தைச் சிங்கமுங் கொல்லமாட்டாவாமென்பதுமே விஷ்ணுவுஞ் சிவபிரானும் அங்ஙன வடிவமாறக் காரணம். சிங்கந் தவிர மற்றவையனைத்தும் பறவைகள். பூர்வபட்சம் நரசிங்கமே சரபத்தை யடித்ததென முதலிற் கூறிவிட்டுப் பின்னர்ச் சிவபிரானுக்கும் விஷ்ணுவுக்குஞ் சருவதோபத்திரம்வரை வடிவங் கூறிற்று. இவை முரணல்லவா? அன்றியும் நரசிங்கத்துக்கும் சரபத்துக்கும் உபநிஷத்துக்கள் உள்ளனபோல் கண்டபேருண்டமாதி மற்றை வடிவங்களுக்குச் சுருதிகளில்லை. ஆகையால் அவைகளெல்லாம் கற்பனையேயாமென்க.

---

13. மாதவே ஸ்த்ரீசரீரே சாஸ்தஸ் ஸம்பாதகத்வாத்.
மாயோன் மகடூஉ வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின்.

பொருள்:— விஷ்ணு பெண் வடிவங்கொண்டபோது அவளைப் புணர்ந்து அவளுக்கு ஹரிஹர புத்திரரென்ற பிள்ளையைக் கொடுத்தலானும் என்பது.

பாற் கடலில் எழுந்த அமுதத்தைத் தேவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் பொருட்டு விஷ்ணு மோகினியானார். அந்த மோகினியைச் சிவபிரான் புணர்ந்து வயிற்றிற் கருவை யுண்டாக்கினார். அதனால் ஹரிஹர புத்திரர் வெளிப்பட்டார். இக்கதை கந்த புராணத்துள்ளது.

'ருத்ராத் ப்ரவர்த்தே பீஜம் பீஜயோநிர்ஜநார்தந:' (உருத்திரமூர்த்தி பீஜமெனவும் அந்தப் பீஜத்துக்கு யோநி ஜநார்த்தனராகிய விஷ்ணுவெனவும் சொல்லப்படுகிறார்கள்) என்ற ருத்ரஹ்ருதயம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:—விஷ்ணுமோகினியானார். சிவன் அம்மோகினியைக் கண்டான். அவனுக்குக் காமமுண்டாயிற்று. அதனால் அவன்

வீரியம் கீழே விழுந்தது. அது பொன்னாயிற்று. அவ்வுண்மையை விட்டு அவன் அம்மோகினியைக் கலந்தானென்பது பொய்.

ச:— சிவபிரானுக்கு ஊர்த்துவரேதஸ் என்றும் பெயருண்டு. ஊர்த்வரேதஸ் - மேல் நோக்கிய இந்திரியத்தை யுடையவன். ஆகையால் அவர் இந்திரியம்கீழ்நோக்கிப்பூமியில்விழாது. அவருக்கு ஹிரண்யரேதஸ் என்பதும் பெயர். ஹிரண்யரேதஸ் - பொன்னிந்திரிய முடையவர். அது அவருக்கு எப்போதுமே ஹிரண்யமயந்தான். கீழே விழுந்த பிறகு அது பொன்னாயிற்றென்பது தப்பு. 'அக்னி பகவானுடைய முகத்தில் எவருடைய ரேதஸ் முன்னே விடப்பட்டது? சிவனைத் தவிர வேறு யாருடைய ரேதஸினால் பொன்மலை செய்யப்பட்டது? வேறு எவன்......ஊர்த்வரேதஸ் என்றும் உலகத்திற் சொல்லப்படுகிறான்?' என்பது அநுசாஸனம் 45-வதும், 'ஸுவர்ணத்தைக் கர்ப்பத்திலுடையவருமான உமக்கு நமஸ்காரம்'. 'ஹிரண்யரேதஸும்..........நீரே' என்பது சாந்தி 290வதும் அத்தியாயங்கள். இவ்விரண்டும் உருத்திரரைக் குறிப்பவை. 'தனத்தை ரேதஸாகக்கொண்ட நல்லசரீரமுள்ளவரும்... ஆன சிவனுக்கு நமஸ்காரம்' என்றது ஆச்வமேதிகம் 8வது அத்தியாயம். சிவபிரானை ந்ருஸிம்ஹ பூர்வதாபிநியும் பஸ்ம ஜாபாலமும் 'ஊர்த்வரேதம்' என்றும், ஏகாக்ஷரம் 'ஹிரண்யரேதா' வென்றும் போற்றும். பொன்னெல்லாம் தம் ரேதஸாகலின் அவ்வரவாபரணர் பொன்னுடையை விரும்பினரிலர், அவராடையாவது புலித்தோல் முதலியனவே. சிவபிரானுடைய ரேதஸில் தமக்கு அத்யந்தப்ரீதி யுண்டென்பதை உலகிற்குக் காட்டவே விஷ்ணு என்றும் பீதாம்பரதாரியாய் வர்த்திக்கிறார். பீதாம்பரதாரி-பொன்னாடையை யுடுத்தவர். விஷ்ணுவுக்குச் சிவனணிந்த பெருமானென்ற பெயருமுண்டு. அதனாலும் சிவபிரான் அம்மோகினிப் பெண்ணைப் புணர்ந்தாரென்பது உண்மையாகும். விஷ்ணு மூன்று தடவை மோகினியானார். அமுதம் பங்கிட வந்தபோது ஒன்று. தாருவன முனிவரை மயக்க வந்தபோது ஒன்று. பஸ்மாசுரனைக் கொல்லவந்தபோது ஒன்று. அவற்றுள் தாருவனத்துக்கு வந்த மோகினி ஒரு ஆடவனை முன்னிட்டுக்கொண்டே வந்தார். அவர் சிவபிரானே. அவர் அப்போது காளையும் நிர்வாணியுமாகி வந்தார். அவரை அந்தக் கோலத்திற் பார்க்கத் தனக்கு உரிமையும் ஆசையுமில்லாவிட்டால் அவ்விஷ்ணு மங்கை அக்கோலத்தின் பின் வருவாளா?

2. ஆ:— விஷ்ணு பெண்ணானால் அவருக்கு மனைவி யிருக்கலாமா?

ச:— பூர்வபட்சமே லக்ஷ்மியை ஜீவகோடிகளிற் சேர்ந்தவளென்று சொல்லும். 'நமது பெரிய பிராட்டியாரும் ஜீவகோடி-

களுக்குள் ஒருத்தியாய் எம்பெருமானுக்குச் சேஷமாய்' என்பதும், 'இதில் பிராட்டியைச் சேதநகோடியுள் ச்ரேஷ்டையென்றுகருத்து' என்பதும் உடையவர் சூர்ண விளக்கம் என்ற சுவடியிற்கண்டவை. விஷ்ணு மாத்திரங் கடவுள். கடவுள் உயிரைமனைவியாகக்கொண்டா ரென்பது உண்மையாகுமா? அப்படிச் சொல்வது உபசாரமேயாம். ஆகவே விஷ்ணு பெண்ணுகாரென்று லக்ஷ்மி அவருக்கு மனைவியா யிருப்பது கொண்டு சொல்லிவிட முடியாது.

3. ஆ:— வேதம் விஷ்ணுவைப் புருஷோத்தமரென்கிறது. அவர் பெண்ணுதல் யாங்ஙனம்?

ச:— அந்த வேதந்தானே சிவபிரானைக் குறித்து நாரத பரிவ்ராஜகத்தில் 'புருஷோத்தமோத்தமம் ஸர்வேச்வரம்' என்றது. புருஷோத்தமோத்தமராகிய சிவபிரான்முன் புருஷோத்தமராகிய விஷ்ணு பெண்ணுவதில் ஒரு தடையுமில்லை. வலக்கையைக் கீழ் வைத்துப் படுத்தல் ஸ்திரீலக்ஷணம். விஷ்ணு அப்படிக் கிடப்பதைத் 'திருவரங்க ரிணையிலா வொரு புயங்கவணையிலே திகழ் வலக்கை கீழதா முகிழ்மலர்க்கண் வளர்வதோர் கருணை' என்றார் பிள்ளைப் பெருமாளையங்கார். இன்னும் 'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்துப் பிரமனைத் தன் னுந்தியிலே தோற்றுவித்து' என்பது பிரபந்தம். விஷ்ணு மங்கை சிவபிரானை வைத்துக்கொண்டு பிள்ளை யைப் பெற்றாளென்பது அதன் பொருள். வைப்பாள்ன் வைப் பாட்டி யென்பவற்றைக் கணவன் மனைவியென்ற வளவிற்கொண்டு அப்பாட்டெழுந்தது. ரவிவர்மா வென்பவர் சாஸ்திரோக்தமான படங்கள் வரைவதில் சமர்த்தரெனப் பேர் போனவர். அவர் விஷ்ணு படங்களைப் பலமாதிரிகளில் எழுதியுள்ளார். அவற்று ளொன்றிலாயினும் விஷ்ணுவுக்கு மீசையிருண்டா? அதனாலும் அவர் பெண்ணென்பது திண்ணம். மேல் மூலவசனத்தைக் கண்ட பிறகும் பூர்வபட்சம் வாய்திறக்கலாமா?

4. ஆ:— விஷ்ணு மோகினியானார். சிவன் அம்மோகினி யைக் கண்டான். வெறியால் அவனிந்திரியம் அவன் காலில் விழுந்தது. அக்காலிலிருந்து சாத்தனுண்டானன்.

ச:—அப்படியானால் அப்புத்திரருக்கு ஹரிஹர புத்திரரென்ற பெயர் சாஸ்திரங்களில் வரவேண்டாம். ஹரருடைய இந்திரியம் ஹரியினுடைய கருப்பையுட்பாய அங்கிருந்து சாத்தனர் பிறந்த தாற்றான் ஹரிஹரபுத்திரரென்ற பெயரைப் பெற்றார். 'பிறை தங்கு சடையானை' யென்ற பாட்டுப்படி சிவேந்திரியத்தைப் பிர மோத்பத்திக்கு ஏற்றுக்கொண்ட விஷ்ணுவினுடைய வயிறு சாத்தோற்பத்திக்கு மாத்திரம் ஏற்றுக்கொள்ளாதோ?

5. ஆ:— விஷ்ணு மோகினியானதும் சிவன் அவளைக்கண்டு காமப் பைத்தியங்கொண்டான். அதனாற்றான் அவனுக்குப் பித்த னென்று பெயர் வந்தது.

ச:— 'நம் மரங்களை - பித்தனைப் பெற்று மந்தோ பிறவியுட் பிணங்குமாறே' என்றார் தொண்டரடிப்பொடி. சலந்தராசுரன் மனைவி முதலிய பல பெண்டிரின்மீது விஷ்ணு ஆசைகொண்டு பித் தேறினாரென்பதை அப்பித்தனென்ற பதம் காட்டுமாயின் சிவ பிரானைப் பித்தனென்பதற்கும் பூர்வபட்சம் தன்னிஷ்டம்போற் பொருள் கொள்ளட்டும்.

6. ஆ:— விஷ்ணுவை ஆணென்றாற் பெண்ணென்றும் பெண்ணென்றால் ஆணென்றும்விவகரிப்பதுபொருந்தாது. இவ்விரு நிலை ஒருவருக்கு வருமா?

ச:— ரிஷிவாக்கால் எத்தனையோ ஆடவர் பெண்களாயும் பெண்டிர் ஆண்களாயும் மாறிச் சந்ததி விருத்தி செய்த கதைகள் புராணேதிகாசங்களிற் பிரசித்தம். அங்ஙனமாகச் சிவசங்கற்பத் தால் அப்படி மாறுவதிற் பொருத்தமின்மை யொன்றுமில்லை.

---

14. பூமோலோகை ரநேகைஸ் ஸததவிரசிதாராதநத்வாத்.

ஆழ்கடல் வரைப்பி னன்றோ ரநேக
ரன்புமீ தூர வருச்சனை யாற்றலின்.

பொருள்:— ஆழமான கடலாற் சூழப்பட்டவுலகில் அநேக பெரியோர்கள் பக்திமேலிட்டு அர்ச்சனை செய்தலாலும் என்பது.

'ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மந் யந்தே' (பிரபஞ்ச லயஸ்தானமாய் சாந்தமாயிருக்கிற சிவமெனும் அத்வைத வஸ்துவை நான்காவது தெய்வமாக நினைக்கின்றனர்), 'அமாத்ரஸ் சதுர்த்தோ வ்யவஹார்ய: ப்ரபஞ்சோப சமச் சிவோத் வைத ஏவமோங்கார' (மாத்திரை யளவில்லாதவனும் வாக்கு மனங்களுக் கெட்டாதவனும் பிரபஞ்சங்களுக்கெல்லாம் லயஸ் தான மானவனும் இரண்டற்றவனும் நான்காவது தெய்வமாயும் பரமாத்மாவாயுமுள்ள சிவபெருமானே ஓங்காரமாகின்றான்) என்ற மாண்டூக்யத்தாலும், 'ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே' என்ற ந்ருஸிம்ஹ பூர்வ உத்தர, ராம வுத்தர தாபினிகளாலும், 'ப்ரபஞ்சோபசமம் சிவம் சாந்தம் அத்வைதம் சதுர்த்தம் மந்யந்தே' என்ற நாரதபரிவ்ராஜகத்தாலும், அத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ராதீதம்......சிவம்' (இரண்டற்ற வரும் சதுர்த்த சப்தவாச்சியரும் பிரம விஷ்ணு ருத்ரர்களைக் கடந்த வரும் ஆகிய சிவபிரான்) என்ற பஸ்மஜாபாலத்தாலும் பிரம விஷ்ணு ருத்ரர்களைக் கடந்து நாலாவது மூர்த்தியாய் விளங்கும் முழுமுதற் கடவுள் சிவபிரானே யென்பது சித்திக்கின்றது.

'சிவ ஏகோ த்யேய:' (சிவபிரானொருவரே தியானிக்கப்படத் தக்கவர்), 'த்யாயீதேசாநம்' (ஈசானனொருவனையே தியானிக்க வேண்டும்) என்ற அதர்வசிகையாலும், 'ஸ ஏகோ ருத்ரோ த்யேய:' (அந்த ஏகனாகிய உருத்திரனே தியானிக்கப்படத் தக்கவர்), 'சிவ ஏவ ஸதா த்யேய:' (சிவபிரானொருவரே எப்போதும் தியானிக்கப்படத்தக்கவர்) என்ற சரபத்தாலும், 'ஆசாஸ்யம்....சிவம்' (விரும்பப்படத் தக்கவர் சிவபிரான்) என்ற பஸ்மஜாபாலத்தாலும் அச்சிவபிரானொருவரே வணங்கப்படத்தக்கவரென்பது சித்திக்கின்றது. ''த்யாதா ருத்ர:' (ருத்திரர் தியானிக்கின்றவர்) என்ற அதர்வசிகையாலும், 'நாராயண பரோ த்யாதா' (நாராயணர் மேலான தியானிக்கின்றவர்) என்ற நாராயணத்தாலும், 'தஸ்ய: சிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:' (அந்த நாராயணருடைய இருதயாக்கினிசிகையின் மத்தியில் பரமாத்மா இருக்கிறார்) என்ற நாராயணம் மஹங்களாலும், 'ப்ரஹ்ம விஷ்ணு புரந்தராத்யமர வர ஸேவிதம் மாமேவ ஜ்யோதி: ஸ்வரூபம் லிங்கம் மாமேவோபாஸிதவ்யம்' (பிரம விஷ்ணு இந்திராதி தேவசிரேஷ்டர்களாற் சேவிக்கப்பட்டவரும் ஜோதிஸ்வரூபருமான என்னையே லிங்காகாரமாய் உபாஸிக்கவேண்டும்), 'லிங்கரூபிணம் மாம் ஸம்பூஜ்ய சிந்தயந்தி யோகிந: ஸித்தா: ஸித்திம் கதா: | யஜந்தி யஜ்வாந: | மாமேவ ஸ்துவந்தி வேதா: ஸாங்கா: ஸோபநிஷத: ஸேதிஹாஸா: | ந மத்தோந்யதஹமேவ ஸர்வம் | மயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் | தத: காச்யாம் ப்ரயதைரேவாஹமங்வஹம் பூஜ்ய: | தத்ர கணௌ ரௌத்ராநநா நாநாமுகா நாநாசஸ்த்ர தாரிணோ நாநாரூபதரா நாநாசிஹ்நிதா: | தே ஸர்வே பஸ்மதிக்தாங்கா ருத்ராக்ஷாபரணா: க்ருதாஞ்ஜலயோ நித்ய மபித்யாயந்தி | தத்ர பூர்வஸ்யாம் திசி ப்ரஹ்மா க்ருதாஞ்ஜலி ரஹர்நிசம் மாமுபாஸ்தே | தக்ஷிணஸ்யாம் திசி விஷ்ணு: க்ருத்வைவ மூர்த்தாஞ்ஜலிம் மாமுபாஸ்தே | ப்ரதீச்யா மிந்த்ர: ஸந்ததாங்கம் உபாஸ்தே | உதீச்யா மக்நிகாயமுமாநுரக்தா ஹேமாங்க விபூஷணா ஹேமவஸ்த்ரா மாமுபாஸதே மா மேவ வேதாச் சதுர்மூர்த்திதரா: | தக்ஷிண்யாம் திசி முக்திஸ்தாநம் தந்முக்திமண்டப ஸஞ்ஜ்ஞிதம் | தத்ராநேக கணா: பாலகா: ஸாயுதா: பாபகாதகா: | தத்ருஷய: ஸாம்பவா: பாசுபதா மஹாசைவா வேதாவதம் ஸம்சைவம் பஞ்சாக்ஷரம் ஜபந்தஸ்தாரகம் ஸப்ரணவம் மோத மாநாஸ்திஷ்டந்தி |' (லிங்கரூபியான என்னைப் பூஜை செய்து சிந்திக்கிறார்கள். யோகிகளும் சித்தர்களும் சித்தியை யடைந்தார்கள். பூஜிக்கிறவர்கள் பூஜிக்கிறார்கள். அங்கத்தோடு கூடியதும் உபநிஷத்தோடு கூடியதும் இதிஹாஸங்களோடு கூடியதுமான வேதங்கள் என்னையே ஸ்தோத்திரம் பண்ணுகின்றன. என்னைக் காட்டிலும் வேறானது இல்லை எல்லாம் நானே. என்னிடத்தில் எல்லாம் வைக்கப்பட்டிருக்கின்றன.

ஆகையினல் காசியில் பிரயத்தனங்களாலே நான் தினந்தோறும் பூஜிக்கத்தக்கவன். அந்தக் காசியில் கணங்கள் கோரமான முகத்தோடு கூடியவைகளாயும் அனேக முகங்களுள்ளவைகளாயும் அனேக சஸ்திரங்களைத் தரிக்கிறவர்களாயும் அநேக ரூபங்களைத் தரிக்கிறவர்களாயும் அனேக சின்னங்களை யுடையவர்களாயும் இருக்கிற எல்லாரும் பஸ்மத்தாற் பூசப்பட்ட அங்கங்களையுடையவர்களாயும் ருத்ராக்ஷத்தை ஆபரணமாக வுடையவர்களாயும் அஞ்சலியோடு கூடினவர்களாயும் சதாதியானம் செய்கிறார்கள். அந்தக் காசியில் கிழக்கில் பிரம்மாவானவர் அஞ்சலிசெய்து கொண்டவராக இரவும் பகலும் என்னை உபாஸிக்கிறார். தெற்கில் விஷ்ணுவானவர் சிரஸிற் குவித்த கையோடு என்னை உபாஸிக்கிறார். மேற்கில் இந்திரனைவன் நன்றாக நமஸ்கரித்த அங்கத்தோடு உபாஸிக்கிறான். வடக்கில் அக்கினி சரீரமாயிருக்கிற என்னைச் சொர்ணபரணத்தோடு கூடியவளாயும் சொர்ண வஸ்திரத்தைத் தரித்தவளாயுமிருக்கிற பிரியையான உமையானவள் உபாஸிக்கிறாள். நான்கு சரீரங்களைத் தரிக்கிற நான்கு வேதங்களும் என்னையே உபாஸிக்கின்றன. கிழக்கில் முக்திஸ்தானமாகிய அங்குள்ள முக்தி மண்டபத்தில் ஆயுதமுடைய அநேக கணங்கள் காப்புத்தொழிலுடையனவாகவும் பாபிகளைப் பற்றுவனவாகவு மிருக்கின்றன: அவ்விடத்தில் இருடிகளும் சாம்பவர்களும் பாசுபதர்களும் மஹா சைவர்களும் வேதோக்தமான சைவபஞ்சாக்ஷரத்தைத் தாரகமாகப் பிரணவத்தோடு ஜபித்துக்கொண்டு சந்தோஷமாக வசிக்கின்றனர் என்று சிவனார் திருவாய் மலர்ந்தருளினார்) என்ற பஸ்மஜாபாலத்தாலும், 'ப்ரஹ்மவிஷ்ண்வாதிபி: ஸேவ்யம்...ஈசாநம்' (பிரம விஷ்ணுவாதியராற் சேவிக்கப்படும் ஈசானர்) என்ற பஞ்சப்ரஹ்மத்தாலும், 'பக்த்யாநம்ரதநோ விஷ்ணோ: ப்ரஸாதமகரோச் சிவ:' பக்தியினல் வணங்கிய சரீரமுடைய விஷ்ணுவுக்குச் சிவபிரான் அநுக்கிரகம் பண்ணினார்) என்ற சரபத்தாலும், 'உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம் | த்யாத்வா முநிர் கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்' (உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், முக்கண்ணரும், நீலகண்டரும், பரமசாந்தரும், பூதகாரணரும், ஸமஸ்த ஸாக்ஷியுமாயுள்ளவரைத் தியானித்து அதனல் துறவியானவன் பிரகிருதிக்கு அப்பாற் செல்வான்) என்ற கைவல்யத்தாலும், 'பரமஹம்ஸாநாமஸம்வர்த்த காருணி ச்வேதகேது தூர்வாஸ ரிபுநிதாக ஜடபரததத்தாத்ரேய ரைவதகபுஸுண்டப்ரப்ருதயோவிபூதிதாரணாதேவமுக்தா: ஸ்யு: ஸஏஷ பஸ்மஜ்யோதி ரிதிவை யாஜ்ஞவல்க்ய: |' (பரமஹம்ஸ ஸந்நியாஸிகளான சம்வர்த்தகாருணி, ச்வேதகேது, தூர்வாஸர், ரிபு, நிதாகர், ஜடபரதர், தத்தாத்ரேயர், ரைவதகர், புஸுண்டர் முதலானோர் விபூதியைத் தரித்தலாலேயே மோக்ஷத்தை யடைந்தவர்களானார்

கள். அப்படிப்பட்ட இந்த யாக்ஞவல்கியரும் பரமஜ்ஜோதி யென்று பெயர் பெற்றார்) என்ற ப்ருஹஜ்ஜாபாலத்தாலும் உமை, உருத்திரன், விஷ்ணு, பிரமன், இந்திரன், தேவர், யோகிகள், சித்தர், கணங்கள், ரிஷிகள், சாம்பவர், பாசுபதர், மஹாசைவர், வேதங்கள், அங்கங்கள், உபநிஷத்துக்கள், இதிஹாஸங்கள், சந்நியாசிகள், பரமஹம்ஸர் ஆகிய எல்லாரும் அச்சிவபிரானையே வணங்குகின்றனரென்பது சித்திக்கின்றது.

இத்தனை சுருதிகளும் அவ்வுண்மைக்கு மூலவசனங்கள். பாரதவசனங்கள் சில வருமாறு:—

ஆதி. அத் | :— 'வியாஸர் விக்நேச்வரருக்குப் பூஜைசெய்து .........பிரார்த்தித்தார்.'

119:—'ஈசுவரனை ஆராதனஞ் செய்து......காந்தாரி.......வரம் பெற்றாள்.'

155:— " 'வாரணாவத நகரத்தில் சிவபெருமானுக்கு மிகப் பெரிய ஓர் உத்ஸவம் இப்பூமிக்குள் மிக்க அழகாக நடக்கப் போகிறது' என்று த்ருதராஷ்டிரன்சொல்லின்மேல் பிரஸ்தாவங்கள் செய்தனர்.........பாண்டவர்களுக்கு அங்கே போவதில் எண்ணமுண்டாயிற்று."

184:—திரௌபதியாகப் பிறக்கப்போகுங் கன்னி 'கடுந்தவஞ் செய்து சங்கரரை ஆராதித்தாள்.'

200:— துரௌபதி சுயம்வரத்தில் அர்ஜுனன் வளைத்த'வில் .......சங்கரபகவான்.......வரமாகக் கொடுத்தது.'

203:— 'அர்ஜுனன், அந்தத் தனுஸைச் சுற்றிப் பிரதக்ஷிணஞ் செய்தான். பிறகு அவன்... ஈசுவரனுக்குத் தலை வணங்கி ......வில்லை யெடுத்தான்.'

213:— 'சங்கரர் (நாளாயினியினுடைய) கடுந்தவத்தினால் ஸந்தோஷமடைந்து'

214:— 'இந்திரன்......ஈசுவரரை நோக்கி, கைகூப்பிக் கொண்டு'

241:— "கிருஷ்ணன்.......மகாதேவ பூஜைக்காக முப்பத்து நான்கு தினம் இரவும் பகலும் மஹோத்ஸவம் நடப்பதென்று சொல்லி, '....எல்லா வருணத்தாரும் யாதவர்களனைவரும்...கடலில் உள் தீவுக்குச் செல்லக் கடவர்' என்று நகரத்தில் பறையறைவித்தார்."

242:— "அர்ஜுனன்,...ஸுபத்ரையே! உன் தந்தை சிவ பிரானுடைய மஹோத்ஸவத்தைத் தரிசிக்க விரும்பிப் பிள்ளைகளோடும் பேரர்களோடும் சுற்றத்தார்களோடுகூட உள்தீவுக்குப்போயிருக்கிறார்'......என்றான்."

249:—'சுவேதகி யென்னும் அரசன்......சிவபிரானை ஆராதித்துக்கொண்டிருந்தான்.'

ஸபா. அத் 10:— 'சிவபெருமான்......வரும்போது...குபேரன் அவரைத் தலையால் வணங்கி அந்த மஹாதேவரிடம் அநுமதி பெற்ற பின்புதான் உட்காருகிறான்.'

14:— ஜராஸந்தன் 'உமாபதியும் மஹாத்மாவுமான மஹாதேவரை ஆராதனஞ் செய்து'

15:— 'தண்டுலப்ரஸ்த மென்னும் இடத்தில்........ஜராஸந்தன் சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்கிறான்.'

60:— 'அந்தப் பாணன்....சிவபெருமானை ஆராதித்தான்.'

102:— 'தௌம்யர் ருத்ர ஸாமங்களைச் சொல்லுகிறார்.'

வனம். அத் 20:— கிருஷ்ணன் 'நான் சிவபெருமானைத் தலையால் வணங்கி' என்றார்.

அர்ஜுனன் 'பிநாகியைச் சரணமடைந்து......அந்தச் சிவபிரானை மலர் மாலையால் பூஜித்தான்.'

80:— 'கோடிரிஷிகள்....ருத்ரரைத் தரிசிக்கும் விருப்பத்தால்.'

81:—மங்கணகர் மகாதேவருடைய 'இருகால்களிலும் தண்டனிட்டுத் தேவரான ருத்ரரைக் காட்டிலும் வேறொன்றைப்பெரிதும் மிகச் சிறந்ததுமாக எண்ணவில்லை' என்றார்.

82:— 'விஷ்ணு ......ருத்ரரை ஆராதித்தார்.'

'வ்ருஷபத்வஜரை வணங்கி, பஸ்மத்தினால் ஸ்நாநம் செய்ய வேண்டும். அப்படி (பஸ்மஸ்நானம் செய்த) பிராமணனால் பன்னிரண்டு வருஷகாலங்களில் நிறைவேறும் விரதமானது நன்கு அநுஷ்டிக்கப்பட்டதாகும்.'

93:— 'அந்த மஹாதேவரை நமஸ்காரம் செய்து......பாண்டவர்கள்....சாதுர்மாஸ்ய விரதங்களால் பூஜித்தார்கள்.'

105:— சகரன் பரமசிவனைப் 'பார்த்தவுடனே மனைவிகளுடன் சேர்ந்து நமஸ்காரம் செய்து'

273:— ஜயத்ரதன் 'மகாதேவரைச் சரணமடைந்து பெருந் தவம் புரிந்தான்.'

பக்கம் 878:— 'ருத்ர தேவதையை மனிதர்கள்......பூஜிக்கிறார்கள்......தேவர்களும்......பூஜிக்கின்றனர்.'

விராடம். அத் 15:— 'மத்ஸ்ய தேசத்தில்...சங்கர மஹோத்ஸவமானது வந்தது'

பீமன். 'அரசரே!.........மஹாதேவருடைய பக்தியினுலும் நான்'

உத்யோகம். அத் 111:— 'தேவியானவள் மஹாதேவரை அடைய விரும்பித் தவம் புரிந்தாள்'

165:— பீஷ்மர் 'சக்தியாயுதத்தைக் கையிலுடையவரும் ஸேனுபதியுமான குமாரருக்கு நமஸ்காரம் செய்து'

187:— அம்பையாகிய 'அந்தத் தவசிக்குச் சூலபாணி...... காட்சியளித்தார்.'

188:— 'துருபதராஜன்.........கடுமையான தவத்திலிருந்து கொண்டு.......சங்கரரை மகிழ்வித்தான்.'

பீஷ்மம். அத் 6:— 'தேவரிஷிகளுடைய கூட்டங்களால் பூஜிக்கப்பட்ட......மஹாதேவர்'

11:— 'அங்கு சங்கரர் பூஜிக்கப்படுகிறார்'

துரோணம். அத் 36:—'எல்லாப்பூதகணங்களாலும் பூஜிக்கப்பட்ட.......ருத்ரரையும்'

42:—ஜயத்ரதராஜன் 'ஈச்வரரை ஆராதித்தான்.'

81:— 'கிருஷ்ணரும் பார்த்தனும்.........ஆசமனஞ்செய்து கைகளைக் குவித்துக்கொண்டு......ருத்ரரை நமஸ்கரித்து.'

84:— பாண்டவர்களும் அவர்களின் நண்பர்களுமாகிய 'எல்லோரும்....சிரசினல் பூமியைத் தொட்டு...பரமசிவனுக்கு வந்தனம் பண்ணி'

94:— "தேவர்களெல்லோரும் அந்த ஈச்வரரைப் பார்த்து, 'மஹாதேவரே! உம்மை நாங்கள் சரணமடைந்து விட்டோம்' என்று பிரார்த்திக்க"

144:— 'சோமதத்தன்.......மகாதேவரைஸந்தோஷமடையும்படி செய்தான்.'

202:—'நாராயணர்....ருத்திரரைக் கண்டு நமஸ்கரித்தார்.'

'ருத்திரரைப் புண்டரீகாக்ஷர் பக்தியுடன் நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்யலானர்.'

'துரோண புத்திரர்......ருத்திரரை நமஸ்காரம் செய்தார்.'

கர்ணம். அத் 21:— 'அர்ஜுனனும் கேசவரும் பகலில் செய்யவேண்டியவைதிககர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, முறைப்படி பிரபுவான ருத்ரரைப் பூஜித்து'

24:—'தேவச்ரேஷ்டர்கள்...தவம் புரிந்து விருஷபத்வஜரிடம் சென்றனர்.'

28:— பரசு 'ராமர்.........கடுந்தவம் புரிந்து உருத்திரரைப் பிரஸன்னராகும்படி செய்தார்.'

சல்யம். அத் 5:— 'துரோணுசாரியரால்.........ஈசுவரரைப் பூஜித்து......உண்டுபண்ணப்பட்டவரும்'

44. 'அந்தப் பிராமணர்களனைவரும்.........மஹாதேவரை ஆராதித்து'

49:— ஹரரைப் பார்த்து 'அருந்ததி......வேண்டினுள்.'

'ஸப்த ரிஷிகளால் ஸ்தோத்திரஞ் செய்யப்பட்டவரான பரமேசுவரர்'

சாந்தி. அத் 52:— 'அந்தமாதவர் தியான நிஷ்டையிலிருந்து அறியவேண்டியவற்றை யெல்லாம் அறிந்தபின் ஸநாதனமான பிரம்மத்தைத் தியானஞ் செய்தார்.'

73:— 'புரோஹிதன்......தனக்கும் அரசனுக்கும் ஹிதமும் பிரியமுமான ருத்ரதேவனைக் குறித்த ஸஹஸ்ரஹோமத்தையும் செய்யவேண்டும்.'

98:— அம்பரீஷனின் சேனைபதியாகிய ஸுதேவன் 'ருத்ர தேவரைச் சரணமடைந்து போற்றினன்.'

110:— 'இந்திரனும் விஷ்ணுவும் ருத்திரரும்.........பிரம்ம தேவரும் தேவர்களின் தேவரான எந்த மகேச்வரரை......துதிக்கிறார்களோ'

236:— 'அவ்விடத்தில் வித்தியாதரர்கந்தர்வர் அப்ஸரஸுகள் இவர்களின் கூட்டங்களும் திக்பாலகர்களும் ஸமுத்திரங்களும் ஆறுகளும் மலைகளும் குளங்களும் ரிஷிகளும் வாலகில்யர்களும் யாகங்களும் ஸ்தோபங்களும் ஸ்ருஷ்டி கர்த்தர்களும் தேவரான பரமேச்வரரை உபாஸித்துக் கொண்டிருந்தார்கள்.'

'ஜைகீஷவ்ய......முனியானவன் (சிவபிரானுடைய) பக்தனும் ........ஆகிறான்.'

289:— 'கங்கையும்...அந்த மஹாதேவரை உபாஸித்தாள்.'

290:— "ததீசி 'நான் சங்கரருக்குமேல் வேறு தெய்வத்தைப் பார்க்கவில்லை யென்பது உண்மையானால் தக்ஷனுடைய......யாகம் ......நிறைவேறப் போகிறதில்லை' என்று சொன்னார்."

'தக்ஷன் பரமேச்வரரைப் பணிந்து'

291:— 'ஈச்வரருக்கும் ஸுப்ரம்மண்யருக்கும் தேவிக்கும் நந்திகேசுவரருக்கும்........பூஜையைச் செய்து'

295:— 'சுக்ராசாரியார்....தேவரையும் தேவியான உமையையும் நமஸ்கரித்து'

அநுசாஸனம். அத் 45:— 'ஒவ்வொரு யுகத்திலும் கிருஷ்ணனால் மகேச்வரர் ஆராதிக்கப்பெற்றார்.'

'யாஜ்ஞவல்கியர்......மஹாதேவரை ஆராதித்து'

'வ்யாஸ முனிவரும் சங்கரரை ஆராதித்து'

'வாலகில்யர்........சிவபெருமானை ஆராதித்தனர்.'

'அனஸூயை.......மஹாதேவரைச் சரணமடைந்தாள்.'

'விகர்ண மகரிஷியும்......மஹாதேவரை ஆராதித்து'

'சாகல்ய முனிவர்......சிவபிரானை ஆராதித்தார்.'

'இந்திரன்......மஹாதேவரை......ஆராதித்து'

உபமந்யு 'நான்......ஈச்வரரை......ஆராதித்தேன்' என்றார்.

ஆச்வமேதிகர். அத் 8:— 'அதில் ருத்ரர்களும் ஸாத்யர்களும் விச்வே தேவர்களும் வஸுக்களும் யமனும் வருணனும்....குபேரனும், பூதங்களும், பிசாசங்களும்......அச்விநிதேவர்களும், கந்தர்வர்களும், அப்ஸரஸுகளும், யக்ஷர்களும், தேவரிஷிகளும், ஆதித்யர்களும், மருத்துக்களும், எல்லா ராக்ஷஸர்களும்...... சங்கரரை உபாஸிக்கின்றார்கள்.'

மருத்தன் 'கங்காதரரை நமஸ்கரித்து'

63:— "பீமஸேனன்...யுதிஷ்டிரரை நோக்கி, 'நாம்.......... பரமசிவனைப் பூஜித்து அதைக்கொண்டு வருவோம்......அந்தச் சம்புவை நமஸ்கரிப்போம்........கௌரவநந்தனரே! நாமெல்லாரும் அவருடைய பக்தர்கள்......' என்று சொன்னான்."

'பாண்டவர்கள்...மஹேச்வரரை...பூஜித்துப் பிரார்த்தித்து'

இனி அவ்வுண்மை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— இளைஞருக்குத் தமிழ் வடமொழிகளை ஹரி: ஓம் என்றே தொடங்குவது வழக்கம். அங்ஙனம் சர்வாக்ஷரங்களுக் குந் தொடக்கமான ஹரிநாமத்தையுடைய விஷ்ணுவா சிவனை வணங்குவார்?

ச:— ஓங்காரத்தாற்றான் ஹரிநாமத்துக்கு மதிப்பு. ஆகலின் அந்நாமம் முன்னிருப்பதும் பின்னிருப்பதும் வேறெங்கிருப்பதும் ஒன்றுதான். ஹரிநாமத்தால் ஓங்காரத்துக்கே மதிப்பெனின் அது பிரணவ நிந்தை. ஆனால் ஹரர் மனைவி ஹரி. ஹரி சத்தி சொரூபம். ஓம் சிவசொரூபம். ஹரி: ஓம் என்பது 'சத்தியாய்ச் சிவமாகி' என்ற பொருளுடையது என்றால் அந்நிந்தை நீங்கலாம்.

2. ஆ:— விஷ்ணுவையே பிரமருத்ரேந்திராதியர் வணங்குகின்றனரென்ற பிரமாணங்களுக்குக் கதியேது?

ச:— 'ப்ரம்ம தேவரை வலப்பக்கத்திலிருந்தும்...விஷ்ணுவை இடப்பக்கத்திலிருந்தும் இந்த ஈச்வரர் படைத்தார்.......ஈச்வரர்....ருத்திரரைப் படைத்தார்' என்றது அநுசாஸனம் 45-வது அத்தியாயம். 'விஷ்ணுவும் ருத்ரரும்.......பிரம்மதேவரும்... ...எந்த மஹேச்வரரைப் பலவித ஸ்தோத்திரங்களால் துதிக்கிறார்களோ' என்றது சாந்தி 110-வது அத்தியாயம். 'பார்வதியோடிருப்பவரும் பிரபுவுமான பரமசிவன் ரதத்தினால் பத்திரவடத்தைக் குறித்துச் சென்றார். அநேக தேவர்கள்......ருத்திரர்களோடும் சேர்ந்து அவருடைய வலப்பக்கத்தில் சென்றார்கள்......இவைகளுக்குப் பின்புறத்தில் ருத்திரர்.......சென்றார்' என்றன வனம் 876, 877 வது பக்கங்கள். இவற்றால் திரிமூர்த்திகளுக்கு மேற்பட்ட ஒரு உருத்திரரும் திரிமூர்த்திகளுள் அடங்கிய ஒரு உருத்திரருமாக இரண்டுவகை உருத்திரர்கள் உளரென்பது தெரிகிறது. 'சிவபெருமான்... வித்தையைப் பிரம்மதேவருக்களித்துப் பிரம்மாண்டத்தை உண்டுபண்ணினபிரபுவாயிருந்தும்பிரம்மதேவரின் ஸந்தோஷநிமித்தமாகத் தம் புத்திரரான அவரைப் பிதாவாக வைத்துப் பிதாவான தாம் அவருக்குப் புத்திரராக அவர் நெற்றியிலிருந்து வெளிவந்து குழந்தை வடிவமாய்க்..........கூச்சலிட்டார்' என்ற சாந்தி 58வது அத்தியாயத்தால் குணருத்திரரின் அமிசமொன்று பிரமாவின் நெற்றியிலிருந்து அவருக்குப் பிள்ளையாய்ப் பிறந்ததென்பது தெரிகிறது. இந்த அமிசமே விஷ்ணுவுக்குச் சந்தோஷமுண்டாகும்படி அவருக்குஞ் சிலசமயங்களிற் பிள்ளையாகும். இந்த அமிசருத்திரருக்கு ஸ்தாணு, விசாலாக்ஷர் என்ற பெயர்களுண்டு. 'சூலத்தை ஆயுதமாகக் கொண்ட அந்தப் பகவான்......விசாலாக்ஷரை.........ருத்திரர்களுக்கு ஈசரும் ரக்ஷகருமாகச் செய்தார்' என்றது சாந்தி 122வது அத்தியாயம். இவர் மூன்றும் வகை உருத்திரர். இவர் தவிர ஆதி 132வது அத்தியாயத்திற் கண்ட 'ம்ருகவ்யாதன், ஸர்ப்

பன்,....நிருருதி, அஜைகபாத், அஹிர்ப்புத்னியன், பினாகி, தஹனன், ஈசுவரன், கபாலி, ஸ்தாணு, ...... பகன்’ என்ற பதினொருவரும் நாலாம் வகை உருத்திரர், ‘அந்த விருஷபவாகனரை ஆயிரத்து நூறு ருத்ரர்கள்... துதித்தனர்’ என்ற அநுசாஸனம் 45வது அத்தியாயத்தாலும், ‘ஆயிரக்கணக்கான ருத்திரர்களுக்கு......இடமான......சிவபிரான்’ என்ற சாந்தி 58வது அத்தியாயத்தாலும் ஐந்தாவதும் ஆறாவதும் முதலியவேறும் பலவகை உருத்திரர்களுளராதல் விளங்கும். இங்ஙனம் சதுர்த்தருத்ரர், த்ரிதீயருத்ரர், அம்ஸருத்ரர், ஏகாதசருத்ரர், ஸஹஸ்ரருத்ரர் முதலிய பலவகைப் படுத்திக் கூறப்பட்ட வுருத்திரர்களுள் சதுர்த்தருத்ரரே பரமாத்மா. திரிதீயருத்திரரும் பிரம விஷ்ணுக்களுக்கு மேற்பட்டவரே. ஸ்தாணு, விசாலாக்ஷர் முதலிய பிறவகையினரையே பிரம விஷ்ணுக்களுக்குக் கீழ்ப்பட்டவரென்னலாம். ஆகவே, பிரமவிஷ்ணுக்களை வணங்கினாரென்று சாத்திரங்கள் ஒரோவிடங்களிற் கூறும் உருத்திரர் இவரேயென அமைவது அறிவுடைமையாம். ‘சிலவுருத்திரர் திருமாலுக்குத் தாழ்ந்தவராக ஓதப்பட்டார். அவர் குணிருத்திரக் கடவுள் கூறான விசாலாக்கன் றாணு சங்கார வுருத்திரனென்பாரே’ என்றது திராவிடப் பிரகாசிகையும்.

3. ஆ:— யானையொன்று ஆதிமூலமே யென்றழைத்த காலையில் வந்தவர் விஷ்ணுவே. ஆதிமூலம் சிவனேயாயின் அவனன்றோ வந்திருப்பான்?

ச:— ஆதிமூலமே யென்றழைத்தபோது அவ்யானைக்கு விஷ்ணுஸ்மரணை யிருந்ததா? இல்லையா? இருந்ததானால், அது விஷ்ணுவையே அப்பெயராற் கூப்பிட்டதாகும். அப்போது மற்றைத் தேவர்கள் அச்கூச்சலை என லக்ஷியஞ் செய்யவேண்டும்? இல்லையானால், பல கோடிமக்கள் இன்றும் கடவுளை ஆண்டவனே யென்றழைத்தே அழுகின்றனர். அவ்யானைக்குச் சாமானியரும் விடுவிக்கத் தக்க துன்பமே யிருந்தது. அவருக்கோ அதனினும் பன்மடங்கு அதிகமான துயரங்களிருக்கின்றன. அவ்யானைக்கும் அம்மக்களுக்கும் தெய்வநிச்சயத்தில் மடமையும் ஒன்றே. அங்ஙனமாக, அவ்விஷ்ணு அவர் கூச்சலுக்கும் பிரசன்னராகவேண்டும். அஃதில்லாமையால், அவ்யானைக்கு அக்கடவுள் வந்தாரெனல் அசங்கதம். உண்மையில், அவ்யானை விஷ்ணுஸ்மரணை செய்துகொண்டே ஆதிமூலமெனப் பிளிறியதென்பதை ‘ஹர்யர்ச்சநாநு பாவேந யத்கஜத்வே புநஸ்ம்ருதி:’ என்றது பாகவதம். ‘பதகமுதலைவாய்ப் பட்டகளிறு—கதறிக் கை கூப்பி யென் கண்ணா கண்ணா வென்ன-வுதவப் புள்ளூர்ந்தங் குறுதுயர் தீர்த்த—வதகன்’, ‘கடிகொள் பூம் பொழிற் காமரு பொய்கை வைகு தாமரை வாங்கிய வேழம்-முடியும் வண்ணமோர் முழுவலிமுதலைபற்றமற்றது நின்சரணினைப்பக்-

கொடியவாய் விலங்கின் னுயிர் மலங்கக் கொண்ட சீற்ற மொன்றுண்டு ளது நிற்குன்-னடியனேனும் வந்தடியிணை யடைந்தேனணிபொழிற் றிருவரங்கத்தம்மானே', 'குலத்தலைய மதவேழம் பொய்கைபுக்குக் கோள்முதலை பிடிக்கவதற் கனுங்கி நின்று-நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதீ யென்ன நெஞ்சிடர்தீர்த் தருளிய வென்னிமலன்'' 'தொடரெடுத்த மால்யானை சூழ்கயம்புக்கஞ்சிப்-படரெடுத்த பைங்கமலங் கொண்டன்—றிடரடுக்க, ஆழியான் பாதம் பணிந்தன்றே வானவர்கோன், பாழிதா னெய்திற்றுப் பண்டு' என்ற பிரபந்தப் பாக்களில் அவ்யானை ஆதிமூலமென்ற பெயரை விட்டு வேறு பெயர்களால் விஷ்ணுவையே நினைத்தழைத்தது ஸ்பஷ்டம். முதற்பாவிலுள்ள கண்ணு கண்ணு வென்றவிளி விஷ்ணுவுக்கே யுரிய விசேடநாமமாதல் காண்க. 'கூரேச விஜய பங்கம்' என்ற கிரந்தத்தில் அவ்வாதிமூலக் கதைக்கு ஒரு ரசமான கண்டனமிருக்கிறது. அதைப் பார்த்த எமக்கு இங்கு இச்சமாதானத்தைத் தொடர்ந்தெழுத மனமிசையவில்லை. கொடுத்து வைத்த புண்ணியவான்கள் அதனைப் படித்து மகிழ்வார்களாக.

4. ஆ:— 'ஆகாசாத் பதிதம் தோயம் யதாகச்சதி ஸாகரம் ஸர்வதேவ நமஸ்காரங் கேசவம் ப்ரதிகச்சதி' என்ற பிரமாணத்துக்குப் புகலென்ன?

ச:— அது ஸ்மிருதி. அன்றியும் 'சங்கரம்' என்றிருக்க வேண்டுவது 'கேசவம்' என மாற்றப்பட்டிருக்கிறது. அம்மாற்றப்பட்ட ஸ்மிருதி 'ஸ்தோமம் வோஅத்ய ருத்ராய சிக்வஸே | க்ஷயத்வீராய நமஸாதிதிஷ்டந | ஏபிச் சிவஸ்வவாம் ஏவயாவபி: | திவஸ்ஸிஷக்தி மருதோ நிகாமாபி: | ' (ஓ தேவர்களே! உங்களைக்குறித்து நாங்கள் செய்த தோத்திரங்களையும் வணக்கங்களையும் எல்லாம்வல்ல உருத்திர மூர்த்தியினிடத்து அர்ப்பியுங்கள். இவற்றிற்கெல்லாம் உரியவர் அவரேயாம். அவர் நீங்கள் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றி உங்களை அநுக்கிரகிப்பர்) என்ற ருக் மந்திரத்தோடு முரணும். சுருதியைப் பகைத்த ஸ்மிருதி சீவியாது. 'வம்மின் புலவீர்.......நும் மின் கவிகொண்டு நும்நும் மிட்டா தெய்வமேத்தி ஞற்-செம்மின் சுடர்முடியென் றிருமாலுக்குச் சேருமே' என்று நம்மாழ்வாரும் அப்பிழைப்பட்ட ஸ்மிருதியை யநுசரித்துப் பாடி வேதத்தை விட்டுத் தவறினர்.

---

## 15. அமீஷா மஷ்டைச்வர்ய ப்ரதாநாத்.

## நான்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின்.

பொருள்:— அஷ்ட ஐசுவரியங்களையும் அப்போது அவர்களுக்குக் கொடுத்தலானும் என்பது.

இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை யென்னும் எட்டும் அவ்வைசுவரியங்களாம்.

சிவபிரான் மூர்த்திநாயனருக்கு அவரைப் பாண்டி நாட்டின் அரசராக்கினரென்பதால் இராசாங்கமும், சிவபாத விருதயருக்குக் கந்தரையே மைந்தராகத்தந்தாரென்பதால் மக்களும், சுந்தாமூர்த்தி சுவாமிகளுக்குச் சடையர் இசைஞானியார் நரசிங்கமுனையர் பரவையார் சங்கிலியார் கோட்புலியார் சிங்கடியார் வனப்பகையார் என்பவர்களை உறவு செய்துவைத்தா ரென்பதாற் சுற்றமும், குண்டையூர்க்கிழாரைக் கொண்டு நென்மலை வழங்கினரென்பதால் நெல்லும், அதைப் பூதங்களைக் கொண்டு பரவையார் திருமாளிகையிற் சேர்ப்பித்தாரென்பதால் அடிமையும், செங்கற்களைப் பொன் கற்களாக்கியும் வேறும் பல்லாயிரம் பொற்காசுகளையும் ஈந்தாரென்பதாற் பொன்னும், நவரத்தினங்களைக் கொடுத்தாரென்பதால் மணியும், அவர்களைக் கயிலாயத்துக்கு அழைத்துவர வெள்ளானையை யனுப்புவித்தாரென்பதால் வாகனமும் அவரொருவரே தரவல்லாரென்பது சத்தியம். அக்கதைகள் பெரிய புராணத்துள்ளன.

சிவபிரான் தம் அடியார்க்கு வழங்கும் ஐசுவரியங்களிற் சில பாரதத்துள்ளபடி வருமாறு:—

ஆதி. அத் 119:—ஈசுவரனை ஆராதனஞ் செய்து....காந்தாரி நூறு புத்திரர்களைப் பெறும்படி வரம் பெற்றாள்.'

ஸபா. அத் 14:— ஜராஸந்தன் 'மஹாதேவரை...ஆராதனஞ் செய்து ராஜாக்களை ஜயித்தான்.'

109:—சங்கரர் பகீரதனைப் பார்த்து 'ராஜச்ரேஷ்டனே!...... கங்கையை உனக்காகத் தாங்குவேன்' என்றார்.

துரோணம். அத் 42:—"ருத்ரர், பிறகு ஜயத்ரதனைக் குறித்து, '......தனஞ்சயனைத் தவிர மற்றப்பாண்டவர்கள் நால்வர்களையும் யுத்தத்தில் ஒருதினம் நீ தடுப்பாய்; இந்த வரத்தை உனக்கு யான் கொடுக்கிறேன்' என்று சொல்லி"

94:— 'த்வஷ்டா......மஹேச்வரரிடத்திலிருந்து வரத்தைப் பெற்று......வ்ருத்திரனை உண்டுபண்ணினன்.'

அநுசாஸனம். அத் 45:—'ஹிரண்ய கசிபு......பத்துக்கோடி வருஷம் எல்லாத் தேவர்களையும் ஆளும் திறமையைச் சிவபிரானல் அடைந்தான்.'

'சிவபெருமான் வித்யுத் பிரபன் என்னும் அஸுரன் மேலும் அருள் வைத்து மூன்று லோகங்களுக்கும் ஈச்வரனையிருக்குந் தன்மையை அளித்தனர். அவன் நூறுயிரம் வருஷம் எல்லா

உலகங்களுக்கும் ஈச்வரனாயிருந்தான்.........அவனுக்குக் கோடி குமாரர்களையும் பிரபுவானவர் கொடுத்தார்.'

சங்கரரைப் பணிந்து "சதமுகன் 'தேவச்ரேஷ்டரே! எனக்கு ஆச்சரியமான யோகசக்தியும் எக்காலமும் அழியாத தேகவன்மையும் கொடுக்கவேண்டும்' என்று கேட்டான்......பகவானும்... .... 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார்."

பிரமதேவருக்கும் '.........ஆயிரம் புத்ரர்களை மஹாதேவர் கொடுத்தார்.'

'யாஜ்ஞவல்கியர்.........மஹாதேவரை ஆராதித்து ஒப்பற்ற புகழைப்பெற்றார்.'

"மஹாதேவர் அவர் (வாலகில்யர்) கள்மேல் கிருபைவைத்து, 'அமிருதத்தைக்கொண்டுவரும் கருடனை உங்கள் தவத்தினால் உண்டாக்குவீர்கள்' என்று சொன்னார்."

'அத்ரியின் பாரியையும் சங்கரரால் கொடுக்கப்பட்ட தத்தாத்ரேயர், சந்திரன், துர்வாஸர் என்னும் மூன்று குமாரர்களை அடைந்தாள்.'

'விகர்ண மகரிஷியும்.........மஹாதேவரை ஆராதித்துத் தவ ஸித்தியை அடைந்தார்.'

சாகல்ய முனிவரைப் பார்த்துச் சிவபிரான் 'குழந்தாய்! நீ கிரந்த கர்த்தாவாவாய். மூன்றுலகங்களிலும் அழிவில்லாத கீர்த்தி உனக்கு உண்டாகும். உனது குலம் மஹரிஷிகளினால் அலங்கரிக்கப்பட்டதும் அழிவற்றதுமாயிருக்கக் கடவது. ஸூத்ரங்களைச் செய்பவனும் பிராமண ச்ரேஷ்டனுமான குமாரன் உனக்கு உண்டாவான்' என்று சொன்னார்.

ஸாவர்ணியென்னும் ரிஷிக்குச் சங்கரர் 'உலகத்தில் கியாதி பெற்ற கிரந்த கர்த்தாவாகவும் மூப்பிறப்புக்களில்லாதவனாகவும் இருப்பாய்' என்று சொன்னார்.

'இந்திரன்...மஹாதேவரை...ஆராதித்துத் தேவராஜ்யத்தை யடைந்தான்.'

"மஹாதேவர் (நாரதர்மேல்) அனுக்கிரகம் வைத்து 'மஹிமையிலும் தவத்திலும் புகழிலும் உமக்கு ஈடாக யாருமிரான்......' என்று சொன்னார்."

49:—வ்யாஸர் 'நான் (மஹேச்வரரால் புத்திரபாக்கியமாகிய) கருதின பலனையும் அடைந்தேன்' என்றார்.

கபில மகரிஷி '......சிவபெருமான்.........தத்வஞானத்தை எனக்கு அளித்தார்' என்று சொன்னார்.

சாருசீர்ஷர் 'சிவானுக்கிரஹத்தினால் தாயின் வயிற்றிற் பிறவாதவர்களும் ஜிதேந்திரியர்களும் தர்மந்தெரிந்தவர்களும் சிறந்த பிரம்ம தேஜஸுள்ளவர்களும் மூப்பும் துயரமுமில்லாமல் நூறாயிர வருஷகாலம் ஜீவித்திருப்பவர்களுமான நூறு புத்ரர்களையடைந்தேன்' என்றார்.

வால்மீகி "ஈசுவரரைச் சரணமடைந்தேன். அதனால் அந்தப் பாவத்தி (பிரம்மஹத்தியி) னின்று விடுபட்டேன். (அவர்) 'உனக்குச் சிறந்த கீர்த்தி உண்டாகும்' என்றார்" என்று சொன்னார்.

பரசுராமர் "பிறகு (சிவபிரான்) கோடாலியையும்......படைகளையும் எனக்கு அளித்தார். 'உனக்குப் பாபம் இராது. யாராலும் ஜயிக்கப்படாதவனாவாய். உனக்கு மரணமும் வராது. மூப்பில்லாமலுமிருப்பாய்' என்று......சிவ...பகவான் எனக்குச் சொன்னார். அந்த ஸர்வஜ்ஞருடைய அனுக்கிரகத்தினால் அவையெல்லாம் எனக்குக் கிடைத்தன" என்று சொன்னார்.

விசுவாமித்ரர் 'சிவனை ஆராதித்தேன். அவருடைய அனுக்கிரகத்தினால் யாருக்குங் கிடைக்காத சிறந்த பிராம்மண்யம் எனக்குக் கிடைத்தது' என்று சொன்னார்.

தேவலர் 'தர்மத்தையும்......புகழையும்......ஆயுளையும் பிரபு (சிவபிரான்) கொடுத்தார்' என்று சொன்னார்.

க்ருத்ஸமதர் "மகேசுவரர் 'நீ ஜரையும் மரணமும் துயரமும் இல்லாமலிருப்பாய்; எனக்கொப்பாக இருக்கக் கடவாய். உனக்கு ஸௌக்கியமுண்டாகக் கடவது...' என்று சொன்னார்... அதனால் வித்தையில் எனக்குச் சரியான பண்டிதனில்லை" என்றார்.

கிருஷ்ணர் தலையால் வணங்கி, "ஈசுவரரே!.......எனக்கு எக்காலமும் உம்மிடத்தில் பக்தி ஸ்திரமாயிருக்கவேண்டும் (என்று கேட்டார்)...........பகவானவர் 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி......அந்தர்த்தானமானார்" என்றார்.

ஜைகீஷவ்யர் 'அணிமா முதலிய எண்குணங்களோடுங் கூடிய சித்தியை எனக்குப் பகவான் அளித்தார்' என்றார்.

கர்க்கர் 'ஈசுவரர்.......அறுபத்து நாலு கலைகளிலும் ஆச்சரியமான ஞானத்தை எனக்குத் தந்தார். ஒரேவிதமாக ப்ராம்ம நிஷ்டர்களாயிருக்கும் ஆயிரம் புதல்வர்களையும் அவர்களுக்கும் எனக்கும் பத்துலக்ஷம் வருஷம் ஆயுளையும் கொடுத்தார்' என்று சொன்னார்.

பராசரர் "சங்கரர், 'பராசர! என்னிடத்தில் வைத்த பக்தியின் பலனாக உனக்குக் கிருஷ்ணத்வைபாயனன் பிறக்கப்போகிறான்.... என்று சொன்னார்......" என்றார்.

மாண்டவ்யர் "மஹாதேவனைத் துதித்தேன். அவர்........ 'நீ சூலத்திலிருந்து விடுபட்டு நூறுகோடி வருஷகாலம் ஜீவித்திருப்பாய். சூலத்தினாலுண்டாகும் நோய் இனி உனக்கு இராது. நீ மனக்குறைகளும் நோய்களு மற்றிருப்பாய்........' என்றுசொன்னார்......" என்றார்.

காலவர் "மகாதேவரைப்பார்த்தேன். அவர் என்னைப்பார்த்து, 'புத்ரனே! உன் தந்தையும் தாயும் நீயும் மரணமில்லாமலிருப்பீர்கள் ......உன் தந்தையை வீட்டில் பார்ப்பாய்' என்று சொன்னார்........ வீட்டிற்குச் சென்றபோது....பிதாவைக் கண்டேன்......' என்று சொன்னார்.

ஆச்வமேதிகம் அத் 8:—'அந்த மருத்தன்......கங்காதரரை நமஸ்கரித்து உத்தமமான தனத்தை அடைந்தான். மஹாதேவருடைய அருளால் அந்தத்தனத்தை அடைந்து குபேரன் போலானான்.'

63:—பாண்டவர்களால் சிவபிரானுடைய 'அனுக்கிரஹத்தால் இந்த ராஜ்யம் அடையப்பட்டது.'

65:—'பாண்டவர், அந்தத் திரவியத்தை .........எடுத்துக் கொண்டு மறுபடியும் மஹாதேவரைப் பூஜித்து....சென்றார்.'

இவ்விதமான வரங்களைப் பிரசாதிக்கும் சாமர்த்தியம் வேறு எந்தத்தெய்வத்துக்கும் அந்நூலிற் காணப்படாமையைக் கண்டறிக.

சிவபிரானுக்கே ஈசுவரன் பரமேசுவரன் சர்வேசுவரன் மகேசுவரன் முதலிய நாமங்கள் யோகரூடிகளாகலானும், வெள்ளிமலை கோயிலாகலானும், பொன்மலை கைவில்லாகலானும், ரத்நங்களையுடைய பாம்புகள் ஆபரணங்களாகலானும், தருமம் ஊர்தியுங் கொடியுமாகலானும், தருமசம்வர்த்தனி மனைவியாகலானும், தனபதியாகிய குபேரன் அடிமையும் தோழனுமாகலானும் அவரொருவராலேயே அஷ்டைசுவரியங்களையுந் தம் பக்தர்களுக்குப் பிரசாதிக்க முடியுமென்பதறிக. 'இவ்வுலகம் படைத்தவர் ப்ரம்மதேவரென்று சொல்லுகின்றனர். அவரும்......பரமசிவனை ஆராதித்துத்தான் பெரிய ஐச்வரியத்தை அனுபவிக்கிறார். பிரம்ம விஷ்ணுக்கள் முதலானவர்களின் உயர்ந்த ஐச்வரியமும்..........பரமசிவனிடத்திலிருக்கிறது. ......பரமேச்வரரைத் தவிர ஐச்வரியமுள்ளவர் வேறு யாரிருக்கிறார்?......சங்கரரைவிட வேறுயார் திதிக்குப் புத்திரர்களுண்டாக வரம் கொடுக்க வல்லவர்?......தேவேந்திரனே! உன்னுடைய ஐச்வரியமெல்லாம்.......ஈச்வரருடைய அனுக்கிரகத்தினாலே தான்......வேறு ஈச்வரரூபத்தைத் தேவர்கள் காண்பாராயின் அவர்கள் அஸுரர்களால் நசுக்கப்படும்போதும் ஏன் அதைச்சரணமடையவில்லை? தேவர்களுக்கும் யக்ஷர்களுக்கும் நாகர்களுக்கும் ராக்ஷ

ஸர்களுக்கும் யுத்தங்கள் நேர்ந்து ஒருவரால் ஒருவர் அழிக்கப்படும் போது அவரவரிடங்களையும் ஐச்வரியங்களையும் கொடுப்பவர் சிவ பிரானே. அந்தகன், சுக்ரன்,......துந்துபி இவ் வஸுரர்களுக்கும் யக்ஷராஜாவுக்கும் பலன் என்னும் அஸுரனுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நிவாதகவசர்களுக்கும் வரங்கொடுத்ததும் கெடுத்ததும் மகேச்வரரைவிட வேறு யார்? சொல்' என்று பாரதம் தன் அநுசாசனம் 45 வது அத்தியாயத்தால் உலகை எவ்வளவு திறமாக அறைகூவி யழைக்கின்றது!

மேற்சொன்ன எண்பெருஞ் செல்வங்கள் தவிர அத்வயதாரகம் 'அணிமாதிஸித்தி:' என்றதாலும், யோகசிகை 'அணிமாதிகமைச்வர்யம்' என்றதாலும், நிராலம்பம் 'அணிமாத்யஷ்டைச்வர்ய:' என்றதாலும் அணிமா மகிமா லகிமா கரிமா பிராத்தி பிராகாமியம் ஈசத்துவம் வசித்துவம் என்ற எட்டுச் சித்திகளுமே எண் பெருஞ் செல்வமென்றலுமொன்று. அவ்வெட்டையுஞ் சிவபிரானே கொடுக்கவல்லாரென்பது திருவிளையாடலிற் 'சித்தியெட்டுந் தெளிவெய்தக்—கொம்மைமுலையா ரறுவருக்குங் கொளுத்திஞ னெண்குணச் செல்வன்' என்ற பாசுரத்தால் விளங்கும். மேற்காட்டப்பட்ட ஜைகீஷவ்யர் வாக்கையும் நோக்குக.

'ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வரச்சம்பு' (சருவ ஐசுவரியசம்பந்நனும் சருவேசுவரனுமாகிய சம்பு) என்ற அதர்வசிகையும், 'தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம்' (ஈசுவரர்களாகிய மும்மூர்த்திகளுக்கும் மேலோராய்த்திகழும் மகேசுவரரும்) என்ற சுவேதாசுவதரமும், 'ப்ரஸாத மகரோச்சிவ:' (பிரசாதிக்கிறவர் சிவனே) என்ற சரபமும், 'ஹிரண்ய பதயேம்பிகா பதய' (பொன்னுக்குப் பதியும் அம்பிகாபதியும்) என்ற நாராயணமும், 'ஹிரண்யநிதிம்......சிவம்' (பொன்னின் நிதியாகிய சிவன்) என்ற பஸ்மஜாபாலமும் அவ்வுண்மைக்கு மூலவசனங்கள்.

இனி அவ் வுண்மைபற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:—சிவன் கொடுத்த ஐசுவரியங்களையெல்லாம் விஷ்ணு அழித்தேயிருக்கிறார்.

ச:—எட்டுச்செல்வங்களையும் யார் கொடுத்தாலும் அவை ஒரு காலத்தில் அழியவேசெய்யும். அது அவற்றினியல்பு. அவற்றை நித்தியமாக்க விஷ்ணுவாற்றான் முடியுமா? நித்தியாநித்ய வஸ்து விவேகமில்லாத மூடனே அஷ்டைசுவரியங்களுட் சிலவோ பலவோ ஒவ்வொருகாலத் தொவ்வொருவருக்கு நீங்குவதுபற்றி அவற்றை அவருக்கு ஈந்த சிவபிரானை நிந்திப்பான். 'தவச்ரியே மருதோ மர்ஜயந்தே ருத்ரயத்தே ஜநிம சாருசித்ரம் | பதம்யத் விஷ்ணோ ருபமம்நிதாயி தேநபாஸி குஹ்யம் | நாமகோநாம்' (ஸமஸ்ததே

வர்களும் சிவலிங்காராதனத்தால் தங்கள் ஐசுவரியங்களை அடைந்தார்கள் லக்ஷ்மீ சமேதராகிய விஷ்ணுவானவர் சிவலிங்க பூசை செய்து பரமபதத்தை அடைந்தார்) என்ற ருக்ஸம்ஹிதா வசனங் கண்டபேர்க்கு விஷ்ணுவால் அந்த ஐசுவரியங்கள் அழிவுண்டன வென்பது எப்படி மெய்யாகும்? அன்றியும் சிவயோகிகள் அச் சித்திகளைச் சிறிதும் விரும்பார்கள். அவைகளே சிவாஞையால் அவர்கள் சென்றவிட மெல்லாஞ் சென்று அவர்களின் பெருமையை விளக்கி அவர்களுக்குப் பணிசெய்யுமென்க. 'எம்மை யுணர்ந்த யோகியர்களிவற்றை விரும்பாரெனினுமவர்—தம்மைநிழல் போல டைந்துலகர்க் கனையார் பெருமைதனை யுணர்த்தும்—செம்மையுடையவிவை' என்றது திருவிளையாடல். இவை - எண்சித்திகள்.

2. ஆ:—பிரகலாதாழ்வார் நமுசி பலி துருவன் முதலியவர்களுக்கு விஷ்ணுகொடுத்த ஐசுவரியம் சாசுவதமானதன்றோ?

ச:—'நமுசி, சம்பரன்,......பிரகலாதர் ஆகிய இந்த அஸுரர்களைமட்டும் மனைவிமக்களுடன் பாதாளலோகத்தில் நிலைபெறச்செய்தார் (ஹரி) ....பலியானவன்......விஷ்ணுவினால்யாகசாலையிலேயே கட்டப்பட்டான். விரோசனன் குலமனைத்தும் பாதாளத்தில் அமிழ்த்தப்பட்டது' என்றது ஸபா 47 வது அத்தியாயம். 'குறட் பிரமசாரியாய் மாவலியைக் குறும்பதக்கி யரசுவாங்கி—யிறைப்பொழுதிற் பாதாளம் கலவிருக்கை கொடுத்துகந்த வெம்மான்', 'மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்' என்பன பிரபந்தம். பாதாளலோகத்தில் அமிழ்த்தப் படுதலும் யாகசாலையிற்கட்டப்படுதலும் சிறையில் வைக்கப்படுதலுமா ஐசுவரியம்? வெட்கம்! வெட்கம்! அவர்களுக்கு அந்த ஐசுவரியத்தைச் சாசுவதமாக்கினால் விஷ்ணு ஏகோவாவினுங் கொடியரன்றோ? மேலும் கூரேசவிஜயம் சிவபூசை மகிமை யுரைத்த கட்சிக்குறிப்பு அவ்வைசுவரியத்தை 'ப்ரஹ்மகல்ப பரியந்தம் அநுபவிக்கும்படி யிருப்பது' என்கிறது. அக்கல்பத்துக்குமேல் அவ்வைசுவரியம் அழிவெய்து மென்பது அவ்வாக்கியத்திற் சூசனையாம். துருவனுக்குக்கிடைத்த ஐசுவரியம் அவன்செய்த சிவோபாசனையின் பலன். உபதேசகாண்டம் பார்க்க.

3. ஆ:—விஷ்ணுவின் கட்டளையாற்றான் சிவன் அநேகருக்கு வரங்களைக் கொடுப்பான்.

ச:—''பினாகமென்ற வில்லைத் தரித்தவரும்......ரிஷிகளால் துதிக்கப்பட்டவருமான தேவதேவர்......அந்த விஷ்ணுவின் பொருட்டு வரங்களைக் கொடுத்தார். பகவான், 'நாராயணரே! என் அநுக்கிரகத்தினால், மனிதர்கள் தேவர்கள் கந்தர்வர்கள் இவர்களைக் காட்டிலும் மனத்தினால் சிந்திக்கமுடியாத பலம் ஸ்வரூபம் இவைகளோடு கூடியவராக நீர் ஆகப்போகிறீர். உம்மைத் தேவர்களும்

அஸுரர்களும் ஸர்ப்பங்களும் பிசாசங்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் ஸுபர்ணர்களும் அவ்வாறே நாகர்களும் இன்னும் பற்பல ஜாதிகளில் தோன்றின எல்லாப் பிராணிகளும் ஸகிக்கமாட்டார்கள். உம்மை யுத்தங்களில் தேவனுகவிருந்தாலும் ஒருவனும் ஜயிக்கமாட்டான். என் அநுக்கிரகத்தினலே ஒருவனுவது உம்மை ஆயுதத்தினலும் வஜ்ரத்தினலும் நெருப்பினலும் நீரினலும் ஈரமானதாலும் உலர்ந்ததாலும் ஜங்கமத்தாலும் ஸ்தாவரத்தாலும் கையினலும் காலாலும் கட்டையினலும் மண்ணுங்கட்டியினலும் எவ்விதத்தாலும் ஹிம்ஸிக்கமாட்டான். மேலும், யுத்தத்தை நீர் அடைவீராயின் என்னைக்காட்டிலும் மேற்பட்டவராவீர்' என்று கூறினர். பிறகு, சூலபாணியான ருத்திரருடைய அநுக்ரஹத்தினலே இவைமுதலான வரங்களைப்பெற்று அந்தத்தேவரே மாயையினல் உலகத்தை மயக்கிக்கொண்டு ஸஞ்சரிக்கிருர்'' என்றது துரோணம் 202 வது அத்தியாயம். 'கண்ணபிரான் ருத்ரரிடம் பக்தி செய்ததினலேதான் ஜகத்தை வியாபித்திருக்கிருர்.......... முற்காலத்தில் இவர் பதரிகாச்ரமத்தில் அந்தச் சங்கரரை ஆராதித்து ......மகேச்வரரிடத்திலிருந்து எல்லா உலகங்களுக்கும் எல்லாவிஷயங்களைக் காட்டிலும் அதிகப்பிரியமா யிருக்கையை அடைந்தார். வரங் கொடுப்பவரும்......தந்தையுமாகிய சிவபெருமானை ஆயிரம் வருஷகாலம் நிரம்பும்வரை ஆராதித்து இந்தக்கண்ணபிரான் தவம் செய்தார். ஒவ்வொரு யுகத்திலும் கிருஷ்ணனல் மகேச்வரர் ஆராதிக்கப்பெற்றுர். அவர் அம் மஹாத்மாவின் சிறந்த பக்தியினல் அநுக்கிரகம் செய்தார். ......சங்கரருமகிமை எப்படிப்பட்டதென்பதை அச்சுதரான இவர் புத்ரவரம் பெற்றபோது நேரிற்கண்டார்' என்றது அநுசாசனம் 45 வது அத்தியாயம். ''கிருஷ்ணமூர்த்தி ......பேசலானர் ''......மஹாதேவரை நான் தவத்தினல் ஸந்தோஷிக்கச் செய்தேன். .......அந்தப்பகவான்......என்னைப் பார்த்து, 'கிருஷ்ண! என் அநுக்கிரகத்தினல் எல்லாருக்கும் தனக்கைவிட மிகவிரும்பத்தக்கவரும் யுத்தங்களில் தோல்விடையாதவருமாவீர். உமது பராக்கிரமம் அக்நிக்கு நிகராயிருக்கும்' என்று சொன்னர்; இவ்வாறு ஆயிரக்கணக்கான இன்னும் வேறு வரங்களையும் எனக்கு அளித்தார். பிறகு, மணிமந்தம் என்னும் மலையில் முன்னே ஒரு கோடியேஆயிரத்து நூறுவருஷங்கள் என்னல் ஆராதிக்கப்பட்டார் .......அந்தப்பகவான் அநுக்கிரகம் செய்து என்னைப் பார்த்து, 'உமக்கு க்ஷேமமுண்டாகிறது. உமது மனத்திலிருக்கும் வரத்தைக்கேளும்' என்றுசொன்னர்...... நான் தலைபால் வணங்கி, 'ஈசுவரரே! மஹாதேவரும் பிரபுவுமான நீர் எனதுசிறந்த பக்தியினல் ஸந்தோஷமடைந்திருந்தால் எனக்குஎக்காலமும் உம்மிடத்தில்பக்தி ஸ்திரமாயிருக்க வேண்டும்' என்றுகேட்டேன். பகவானனவர்,

'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி அங்கேயே அந்தர்த்தான மானார்" என்றார்" என்றது அதன் 49-வது அத்தியாயம். "விஷ்ணு வானவர் ப்ரஸாதத்திற்காக ருத்ரரை ஆராதித்தார்; தேவதைகளா லும் அடைய முடியாத அநேக வரன்களை அடைந்தார். திரிபுராரி யானவர், விஷ்ணுவை நோக்கி, 'க்ருஷ்ண! நீர் உலகத்தில் எல்லாப் பிராணிகளுக்கும் மிக்க அன்புக்குரியவராவீர். உலகமனைத்தும் உம்மைத் தலைவராகக் கொண்டதாகும்' என்று சொல்லினர்" என்றது வனம் 82-வது அத்தியாயம். இவற்றைக் கண்டபேர் விஷ்ணு சிலர்க்காயினுங் கடவுளானது சிவானுக்கிரகத்தா லென்ப தைத் தெள்ளத் தெளிவர். மேற்காட்டிய 'யுத்தத்தை நீர் அடை வீராயின் என்னைக்காட்டிலும் மேற்பட்டவராவீர்' என்று தாம் கொடுத்த வரத்தை மெய்ப்பிக்கவேயன்றோ சிவபிரான் பாசுபத யுத்தத்திற் கிருஷ்ணருக்குத் தோற்றோடியவர்போல் நடித்தாரென் பது. அப்படியே ஒருக்கால் விஷ்ணு சிவபிரானுக்குக் கட்டளையிடு வது முண்டாயின் அப்பாக்கியமும் அவ்விஷ்ணுவுக்கு அச்சிவபிரா னால் 'என்னைக் காட்டிலும் மேற்பட்டவராவீர்' என்று வேறெப் போதாவது அனுக்கிரகிக்கப்பட்டே வந்திருக்கவேண்டுமென்க.

---

## 16. தசவித வபுஷா விஷ்ணுநா பூஜிதத்வாத்.

## ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின்.

பொருள்:— விட்டுணு தம் பத்துப் பிறப்பிலும் அருச்சித்த லானும் என்பது.

ஒரு காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் சண்டை நடந்தது. தேவர்கள் தோற்றார்கள். அவர்களுக்கு விஷ்ணு துணை செய்ய வந்தார். அசுரர்கள் பயந்து ஓடினார்கள். விஷ்ணு துரத்தி னார். அவர்கள் பிருகுமுனிவரின் ஆசிரமமடைந்து அவர் மனைவி யான கியாதி யென்பவளிடம் அடைக்கலமானார்கள். அவள் அவர்களைக் காத்தாள். விஷ்ணு அங்கு வந்து அவள் தலையை வெட்டினார். பிருகு அதனைக் கண்டார். வெகுளி மீக்கொண்டது. அம்முனிவர் அவ்விஷ்ணுவைப் பத்துப் பிறப்பெடுத்துழலும்படி சபித்தார். அப்பிறப்புக்களே தசாவதாரமெனப்படும். மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனம், பரசுராமர், ரகுராமர், பலராமர், புத்தர், கற்கியென்பன அவ்வவதாரங்களாம். புத்தரை விலக்கிக் கிருஷ்ணரைச் சேர்ப்பதும் உண்டு. அவற்றுள் மச்சம் காஞ்சிபுரத்திலுள்ள மச்சீசத்திலும், கூர்மம் கச்சபேசத்திலும், வராகம் வராகீச்சரத்திலும், நரசிங்கம் நாரசங்கீசத்திலும், வாமனம் அபிராமீசத்திலும், பரசுராமர் பரசிராமீச்சரத்திலும், ரகுராமர் வீர ராகவீசத்திலும், பலராமர் பலபத்திராமீசத்திலும், புத்தர் கயிலா

யத்திலும், கற்கி கற்கீசத்திலும், கிருஷ்ணர் தான்றோன்றீச்சரத்திலும் சிவபிரானை வணங்கிச் சாபநிவிர்த்தி யெய்தியது வெளிச்சம். இக்கதைகள் காஞ்சிப்புராணத்திலுள்ளன.

மூலவிஷ்ணுவே சிவோபாசனை செய்து வருதல் முன் பலவிடங்களிற் பிரஸ்தாபிக்கப்பட்டது. அவதார விஷ்ணுக்களும் அவ்வுபாசனையை மேற்கொண்டனரென்பதற்கு அம்மூல வசனங்களே போதும். பூர்வபட்சம் அவதார விஷ்ணுக்களின் சிவோபாசனையைப் பரிகரிக்க முடியாமற் றவிப்பது வேறிடங்களிலும் விளக்கப்பட்டுள்ளது.

இனி அவ்வுண்மை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— விஷ்ணு தசாவதாரமெடுத்தது பிருகு சாபத்தாலென்பது பொய்; பிரமருத்ரேந்திராதியரின் பிரார்த்தனைக்கிணங்கித் தமதிச்சையா லென்பதே மெய்.

ச:— விஷ்ணுவின் தசாவதாரத்துக்கு அவரிச்சையே காரணமென்ற பூர்வபட்சம் பிருகு சாபத்தை வியாஜமென்றவளவிலாவது உடன்படவே செய்யும். 'முன்னை நாளிற் பிருகு முனிவரன்-பன்னிமீதிற் பரிதியை யேவிமா-லென்னுமாய னிமையவர்க்காய்க்கொன்ற-பின்னர்ச் சாபம் பிருகு மொழிந்தனன்', 'என்று மாதவர்க் கோதின ரக்கணந்-தான்று சாபத் தொடர்பை வருகென-வொன்று மண்டங்களோடுயி ரியாவுமாய்-நின்ற மாயனி றுத்தினனோர்புறம்' என்ற கூரேசவிஜயங் காண்க. ஆகவே தசாவதாரத்துக்குச் சாபங் காரணமன்றென்பது பொய். ஆனால் அது வியாஜந்தானா வென்பதுதான் ஆராயவேண்டுவது. பிருகு விஷ்ணுவைப் பரம்பொருளென்ற கொள்கை யுடையவராயிருந்துகொண்டு சபித்தாரா? சாமானிய தேவர்களு ளொருவ ரென்ற கொள்கையுடையவராயிருந்துகொண்டு சபித்தாரா? இப்படிப்பட்டவரென்று தெரியாதவராயிருந்துகொண்டு சபித்தாரா? அம்முனிவர் முதற்கொள்கையுடையவராயின் சபித்திருக்கவேமாட்டார். இரண்டாங்கொள்கையுடையவராயின் சாபம் வியாஜமாகாமல் உண்மையாகவே முடிந்திருக்கும். விஷ்ணு தம் யதார்த்த சொரூபத்தோடுதானே வந்தாராகலான் அம்முனிவரிடம் மூன்றாங்கொள்கைக்கு வழியேயில்லை. ஆகவே அச்சாபத்தை வியாஜமென நழுவவிடுதல் வெறும் அபிமானப் பிரசங்கந்தான். ஆகலான் தசாவதாரத்தையும் பிருகு சாபனையாலும் ஒவ்வோரவதாரத்திலும் சிவோபாசனையா லச்சாபநிவிர்த்தியையும் பெற்றார் விஷ்ணு வென்பதே சித்தம்.

---

17. ஹம்ஸக்ரோடாங்க தாரித் ருஹிண முரஹராங் விஷ்ட சீர்ஷாங் க்ரிகத்வாத்.

இருவரு மன்னமு மேனமு மாகி
யடிமுடி தேட வழற்பிழம் பாகலின்.

பொருள்:— பிரமாவும் விட்டுணுவும் முறையே அன்னவடிவும் பன்றிவடிவுங்கொண்டு பாதங்களையும் சிரசையும் தேடி (க்காணமாட்டாமல்) அலுக்குமாறு அக்கினி மலையாகத் தோன்றலானும் என்பது.

விட்டுணுவை நோக்கிப் பிரமா நானே உனக்குக் கடவுளென்றும், பிரமனை நோக்கி விட்டுணு நானே உனக்குக் கடவுளென்றும் சொல்லிக்கொண்டு தம்முட் சண்டையிட்டார்கள். அவர்களுக்கிடையில் ஒரு பெரிய அக்கினிப் பிழம்பு தோன்றியது. அது சிவபிரான். அவர் அசரீரியாயிருந்துகொண்டு அப்பிரம விட்டுணுக்களைப் பார்த்து 'உங்களுள் எவன் இந்தப் பிழம்பின் அடியையோ முடியையோ கண்டு வருவானோ அவனே மற்றவனுக்குப் பரம்' என்றார். அப்படியே அதன் முடியைக் காணப் பிரமன் அன்னமாகி வானத்திற் பறந்தும் அடியைக்காண விஷ்ணு பன்றியாகிப் பூமியிற் குடைந்தும் சென்றார்கள். அவர்களால் அவை காணப்படவில்லை. பிறகு அவர்கள் பெரிதும் அலுத்துப் பூமிக்குத் திரும்பினார்கள். தங்களது எளிமையும், சிவபிரானது முதன்மையும் அவர்களுள்ளத்தில் உறுத்தின. சிவபிரான் வெளிப்பட்டு அவர்களுக்கு அநுக்கிரகித்தார். அவ்வக்கினிப் பிழம்பே இப்போதுள்ள அருணாசலம். இக்கதை கந்தபுராணத்துள்ளது.

'யத்பாதாம் போருஹத்வந்த்வம் ம்ருக்யதே விஷ்ணுநாஸஹ' (பிரமனோடுகூட விஷ்ணுவினால் அவரது இருதிருவடித் தாமரைகளுந் தேடப்படுகின்றன) என்ற சரபமும், 'ப்ரஹ்மாவை ஹம்ஸோபூத்வா சிரோந் வேஷ்டவ்ய: ஸஹஸ்ரம் ஸமா ஆஸந் ப்ரஹ்மா, அஹம் சிரோ ஜாநே, த்வமேவ மாதாஸி, த்வமேவ பிதாஸி, த்வமேவ ப்ராதாஸி, த்வமேவ த்ருஷ்டாஸி, ச்ரோதாஸி, கர்த்தாஸி, காரயிதாஸி, ஜ்யேஷ்டோஸி, ச்ரேஷ்டோஸி, ய ஏவம்வேதா, சிவஸாயுஜ்யமாப்நோதி சிவஸாயுஜ்ய மாப்நோதி' (பிரம்ஹாவானவர் ஹம்ஸரூபமாகிச் சிவனுடைய சிரசைத்தேடுகையில் ஆயிரம்வருஷம் ஆச்சுது. அப்போதுபிரம்ஹதேவர்நான்தேவரீருடையசிரஸைஅறியவில்லை, தாயும் நீர், தந்தையும் நீர், உடன் பிறந்தவரும் நீர், பார்க்கின்றவரும் நீர், கேட்கின்றவரும் நீர், கர்த்தாவாயுள்ளவரும் நீர், காரியங்களைச் செய்விக்கின்றவரும் நீர், மூத்தவரும் நீர், உயர்ந்தவரும் நீர் என்று துதித்தனர். இந்த வுண்மையை யாவன் அறிவானோ அவன் சிவஸாயுஜ்யத்தை யடைகிறான்; சிவஸாயுஜ்யத்தை

யடைகிருன்), 'விஷ்ணுர்வை வாராஹம் ரூபமாஸ்தாய பூமிம் விதாரயந் ஸஹஸ்ரம் ஸமா ஆஸந், பாதாந் வேஷண பரோபூத்வா, த்வமேவ மாதாஸி, த்வமேவ பிதாஸி, த்வமேவ ப்ராதாஸி, த்வமேவ ஜ்யேஷ்டோஸி, த்வமேவச்ரேஷ்டோஸி, யஏவம் மஹிமாநம் வேதாத்ருஷ்டாபவதி, விஜ்ஞாதாபவதி, கர்த்தாபவதி, காரயிதாபவதி, யஏவம் வேதா, சிவஸாயுஜ்யமாப்நோதி சிவஸாயுஜ்ப மாப்நோதி' (விஷ்ணுவானவர் பன்றி வடிவமாகிப் பூமியைப் பிளந்து செல்லுகையில் ஆயிரம் வருஷம் ஆச்சுது. சிவனுடைய பாதத்தைத் தேடுவதில் விருப்பமுடையவராகிய விஷ்ணுவானவர் தாயும்நீர், தந்தையும்நீர், உடன்பிறந்தவரும்நீர், மூத்தவரும்நீர், உயர்ந்தவரும்நீர் என்று துதித்தனர். இந்த மகிமையை யாவனறிவானே அவனேகாண்கின்றவனுகிருன், அவனே அறிந்தவனுகிருன், அவனே கர்த்தாவாகிருன், அவனேகாரியங்களைச்செய்விக்கின்றவனுகிருன். இப்படி யாவனறிவானே அவன் சிவஸாயுஜ்யத்தை யடைகிருன், சிவஸாயுஜ்யத்தை யடைகிருன்) என்ற ருக்கும், 'ப்ரஹ்மா விஷ்ணு ரஜஸாபத்தவைரௌமத்யே தயோந்த்ருச்யதி ஜாதவேதா: ஸ்தாணு ருத்ரஸ்திஷ்டத் புவனஸ்ய கோப்தா | த்ருஷ்ட்வா ஸ்தாணு முபரம்ய யுத்தம் ப்ரதஸ்ததுர் தூர மஸௌ திதிருக்ஷு: | வராஹௌ விஷ்ணுர்ணிம மஜ்ஜபூமௌ ப்ரஹ்மோத்பபாத பூமேர்த்தி வமாசுக்ருத்ர:' (பிரம விஷ்ணுக்கள் இராஜஸ மேலிட்டுச் சண்டையிட்டுக் கொண்டிருக்கையில் இருவருக்கும் நடுவில் ஸ்ரீருத்ரபகவான் அக்னி ஸ்தம்பமாகப் புவனங்களை ரக்ஷிக்கும்படி தோன்றினர். அதைப் பார்த்த மாத்திரத்தில் தங்கள் சண்டையை நிறுத்திவிட்டுத் தூரமாய் விலகிவிட்டார்கள். பின்னர் விஷ்ணுவானவர் வராகமாகிப் பூமியிலிருந்து கீழே தேடிக்கொண்டு போனர். பிரம்ஹாவானவர் பட்சியாகிப் பூமியிலிருந்து மேலே தேடிக்கொண்டு போனர்) என்ற பாஸ்கர ஸம்ஹிதையும் அக்கதைக்கு மூலவசனங்கள்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேபசமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— அண்ணாமலையே அரிபிரமர் அடிமுடி தேடச் சென்ற அனலகிரியாகும். அதனடி பூமியிலடங்கும். பூமியை விஷ்ணுவே ஆதிசேஷனும் ஆதிகூர்மமுமாகிச் சுமக்கிருர். அவர் காணமாட்டாரென்பது எப்படிப் பொருந்தும்? அன்றியும் இரணியாக்ஷன் உலகத்தைச் சுருட்டியபோது அண்ணாமலையும் அகப்பட்டதே. அவனடக்கிய அம்மலையினடியை அவனையடக்கிய அரி காணமாட்டாரா?

ச:— அரி பிரமர் அடிமுடி தேடிச் சென்ற அக்கினிமலை அகிலாண்டங்களையுந் தாண்டியது. அப்பால் அது சுருங்கியது. 'கலந்த காலையில் யாங்கண்முன் ளெழுதெழுங்காலைச் - சலங்கொள் பான்மையின் முன்னுறத் தேடுவான் றழலாய் - மலர்ந்தபேரொளி

மீமிசைச் சுருங்கியே வந்தோர்—விலங்கலாகிய தலகெலாம் பாலி யே வியப்ப' என்றது கந்தபுராணம். அச்சுருங்கிய மலேயே இப் போதிருக்கும் அண்ணாமலே. இச்சுருங்கிய நிலேயிலேயே அரிபிரமர் அடிமுடி தேடச்சென்ற காலத்திலும் அம்மலேயிருந்ததெனக் கோடல் மயக்கமே.

2. ஆ:— 'விச்வம் நாராயணம்' (நாராயணர் விசுவமாகிறார்) என்ற நாராயணத்தால் விசுவத்திலடங்கிய அம்மலேயை நாராயணர் காணமாட்டாரென்பது தப்பு.

ச:—'விச்வாதிகோருத்ரோ மஹர்ஷி:' (விசுவத்தைத் தாண்டியவரான உருத்திரமகரிஷி) என்ற சுவேதாசுவதர, பஸ்மஜாபாலங்களால் விசுவாதிகராகிய சிவபிரான் கொண்ட அம்மலேயினடியை விசுவமாகிய நாராயணர் காணவேமாட்டாரென்பது சரியே.

3. ஆ:— விஷ்ணுவென்ற பதத்திற்கே வியாபகமென்பது பொருள். எங்குமுள்ள ஹரி அம்மலேயினடியிருந்த விடத்திலுமிருந்து அதைக்கண்டே யிருப்பர்.

ச:—வியாபகமென்றும் வியாப்பியமென்றும் வியாபகம் இருவகைப்படும். 'வ்யாப்யவ்யாபகா மித்யா ஸர்வமாத்மேதி சாஸநம்' என்பது யோகசிகை. 'வ்யாப்யயதே வ்யாபயதே' என்பது ந்ருஸிம்ஹபூர்வதாபிநீ. வியாபகம் மேலிடு நிறைவு. வியாப்யம் அதிலடங்கியநிறைவு. விஷ்ணுவியாபகமெல்லாம் வியாப்பியமேயாம். 'அந்தர் பஹிச்சதத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:' (நாராயணன் சகத்தினுள்ளும் புறமும் வியாப்பியமாயிருக்கிறான்) என்றது. ஆனால் சிவபிரானைச் சுவேதாசுவதரம் 'ஸர்வவ்யாபீச பகவான்...... சிவ:' (சிவபிரான் சர்வவியாபியான பகவான்) என்றும், அதர்வசிகை 'ஸர்வாந்லோகாந்வ்யாப்நோதி வ்யாபயதீதி வ்யாபநாத் வ்யாபீ மஹாதேவ:' (எல்லாலோகங்களேயும் அடைகிறான். எல்லா லோகங்களேயும் தன்னிடத்தில் அடையும்படி செய்கிறான். அதனுல் மஹாதேவருக்கு வியாபியென்று பெயர்) என்றும் விளக்கின. சபத்தில் 'பக்த்யா நம்ரதநோர் விஷ்ணோ: ப்ரஸாத மகரோச்சிவ:' என்றொரு வாக்கியமுண்டு. பாடபேதத்தாற் 'சிவ:' என்பது 'விபு:' என்றும் படிக்கப்படும். விஷ்ணு விபு வென்னு மிரண்டற்கும் வியாபகமென்பதே பொருள். ஆனுற் பக்தராகிய ஹரியை விஷ்ணு பதமும், பிரசாதராகிய சிவபிரானே விபுபதமுங் காட்டுகின்றன. அந்த ஸ்தானபேதத்தாலும் விஷ்ணுபதத்தாற் குறிக்கப்படும் ஹரி வியாபகம் வியாப்பியமே யென்பதும் விபுபதத்தாற் குறிக்கப்படும் சிவவியாபகமே வியாபகமென்பதும் விளங்கவில்லையா? ஆகவே வியாபகரான சிவபிரானது அடியை வியாப்பியரான விஷ்ணு காணுந்திறலற்றவரென்பதே துணிபாமென்க.

4. ஆ:—சடமாகிய ஒருதாழம் பூப் பேசியதென்ற ஒருபொய்யே அடிமுடி தேடியகதை முழுவதையும் பொய்யாக்கும்.

ச:—அடிமுடி தேடியசரிதம் வேதபடிதம். கந்தபுராணமுதலிய பெருநூல்களில் தாழம்பூச் சம்பந்தமில்லாமலே அச்சரிதம் வருகிறது. ஆகையால் அதை எந்தக்கிளைக்கதையும் பொய்யாக்கிவிடாது. மேலும் எல்லாவஸ்துக்களும் அதி தேவதைகளை யுடையன. அப்படியே தாழம்பூவுக்கும் அதிதேவதையுண்டு. தாழம்பூப் பொய் சொன்னதென்பதற்கு அதனதிதேவதை பொய் சொன்னதென்றே பொருள் கொள்ளவேண்டும். நான்கு வேதங்களுந் திரிபுரதகனகாலத்திற் குதிரைகளாகவும், அருச்சுனனுக்குச் சிவபிரான் கிராதவேடங்கொண்டு அருள்செய்யவந்த காலத்தில் நாய்களாகவும் மாறின. விஷ்ணுவின் பாலுள்ள கௌஸ்துபம் சங்குசக்கரம் முதலியன ஆழ்வார்களாக மாறி அநேக அவைதிகங்களைப் பரப்பின. வேதம், கௌஸ்துபம், சங்கு, சக்கரம் முதலியன அத் தாழம்பூப் போற் சடங்களே. குதிரைகள், நாய்கள், ஆழ்வார்களெல்லாஞ் சித்துக்கள். அச்சடங்கள் இச் சித்துக்களாக மாறவல்லனவா? அல்லவேயல்ல. அவ்வவற்றின் அதிதேவதைகளே அச்சித்துக்களாக மாறின. இப்படியே அத்தாழம்பூக் கதைக்குஞ் சமாதானந் தெரிக.

5. ஆ:—அண்ணாமலைக்குப்பழம்பெயர் சுதர்சநகிரியென்பது. அது ஒருவைஷ்ணவ க்ஷேத்திரம். சைவசமயாபிமானியாகிய வல்லாள மகாராசனென்பவன் அங்கிருந்த வைஷ்ணவர்களைத் துரத்திவிட்டு அம்மலையை அண்ணாமலை யென்றாக்கிச் சிவசம்பந்தப் படுத்திவிட்டான்.

ச:—இக்கதையைக் கூறுஞ்சுவடி கூரேசவிஜயம். இதன் மறுப்பைக் கூரேச விஜயபங்கத்திற் பரக்கக்காண்க. அவ்விஜயம் ‘வராஹமூர்த்தியும் அப்படியே அந்த சுதர்சனகிரியைத்தம்முடைய கோரதந்தங்களினாலே பேர்த்தெறிந்தது மல்லாமல்......’ என்றது. பூர்வபட்சங்கூறுமாறு சுதர்சநகிரி அங்கிருந்திருந்தாலும் ஒருபன்றி அதைப்பிடுங்கி எங்கேயோ எறிந்துவிட்ட செய்தியுந் தெரிகிறது. அப்பன்றியும் விஷ்ணுவா லனுப்பப்பட்டதே. ஆகவே அச்சுதர்சநகிரியே இவ்வண்ணாமலை யென்பது மடமை. ‘இப்படியிருக்க மேற்படி திவ்யதேசம் இப்போது சிவஸ்தலமாய்ப் போனதற்குக் காரணமென்ன வெனில், முன் வல்லாள ராஜனென்னப்பட்டவன் சிவபக்தனா யிருக்கையில், அந்தப்பர்வதத்தினருகே அடி அண்ணாமலை ......ஆலயத்திலிருந்த சிவனுக்கு......மகாவிபவமாய் உற்சவஞ் செய்கிறதை, மேற்படி அக்ரஹாரத்தி லிருக்கிற வைஷ்ணவர்கள் கண்டு சஹிக்கமாட்டாமல், ரிஷபவாஹனத்தையுஞ் சிவனையும் சின்னபின்னம் பண்ணினதின் பேரில், மேற்படி வல்லாளராஜன் அதிகக்

கோபங்கொண்டு மேற்படி வைஷ்ணவர்களுடைய அக்ரஹாரங்களை இடித்துக் குளம்பறித்து ஏரியாக்கிவிட்டான்...' என்ற அச்சுவடியால் வைஷ்ணவர்களே ப்ராபிமானிகளா யிருந்தார்க ளென்பதும், அவ்வூர் எப்போதுமே சிவஸ்தல மென்பதும், அரசன் செய்தது தண்டனையேயென்பதும் பிறவும் ஸ்பஷ்டம்.

---

## 18. ஜந்மத்வம்ஸாத் யபாவாத்.

## பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையின்.

பொருள்:— உயிர்களுக்கே யுரிய பிறப்பு இறப்பு என்னுங் குணங்கள் தனக்கு இல்லாமையாலும் என்பது.

உயிர்களுக்கே கர்ப்பவாச முண்டென்பதும் அதுவுங் கர்மவசமே யென்பதும் கடவுளுக்குக் கர்ப்பவாசம் எக் காரணத்தாலுங் கிடையாதென்பதும் சர்வாங்கீகாரமான கிரமம். ஒருசாரார் கடவுளுக்குங் கர்ப்பவாச முண்டென்றும் அஃதவரிச்சை வசமென்றும் சொல்லுவர். அவர்கொள்கைப்படிக் கர்ப்பவாசத்துக்குக் கர்மவசமும் இச்சைவசமுமென இரண்டுகாரணங்க ளுளவென்ப தேற்படுகின்றது. அவை யிரண்டும் பிரத்தியக்ஷங்களல்ல. அன்றியும் ஒரு காரியத்துக்குத் தம்முட் சம்பந்தமில்லாத பல காரணங்களிருந்தனவாயின் இதுதான் உண்மைக்காரணமென வொன்றை நிச்சயிப்பது அசாத்தியம். ஆகையால் கர்மவசப்பட்டுக் கர்ப்பவாசம் பண்ணியவோருயிர் தான் இச்சைவசப்பட்டுக் கர்ப்பவாசம் பண்ணியதாகச் சொல்லலாம் அதைப்பொய்யென நிரூபித்தல் யாங்ஙனம்? கடவுள் இச்சைவசப்பட்டுக் கர்ப்பவாசம் பண்ணுவாரென்ற கொள்கையே அறிஞருக்கு அவ்வேலாமையைக் கொண்டுவந்து விடுகிறது. இப்படிக் கிரமங்களைக் கெடுப்பது கடவுளியல் ஆகாது.

கடவுள் பிறந்தபின் செய்த அற்புதச் செயல்களையும் பிறப்பதற்குமுன் தாம் பிறக்கப்போவதாகச் சொல்லியிருக்கும் வாக்கியங்களையும் ஆதாரமாகவைத்துப் பிறந்த கடவுளைப் பிறந்தவுயிர்களினின்றும் பிரித்துக்காட்டி விடலாமென்பர் அச்சாரார். கடவுள் செய்தனவாகவுள்ள அற்புதங்கள் பலவற்றினும் ரிஷிகள் செய்தனவாகவுள்ள அற்புதங்கள் சரிதங்களில் ஏராளம். ஆகையால் அற்புதங்கள் ரிஷிகளையும் கடவுளென நாம்மயங்கும்படி செய்யும். அவை கடவுளைத் தனித்துக் காட்டவல்லனவாகா. கடவுள் பிறக்குமுன் தாம் பிறக்கப்போவதாகச் சொல்லியுள்ள சரிதங்கள் கடவுளுக்குக் கர்ப்பவாச முண்டென்றகொள்கை யுடையார்க்கே நம்பத்தகுந்தன. அதைக்கொண்டு ஒருபெரிய நியமத்தைப் புரட்டிவிட முடியாது. ஆகவே கர்ப்பவாசமொன்றே உயிரையும், அஃதின்மையே கடவுளையும் பிரித்துக்காட்டவல்லன. இவ்வுண்மையைக் கண்டே ஸ்ரீமத்

சிவஞானசுவாமிகளும் 'நால்வகை யோனியுள் ஒரு யோனிவாய்ப் பட்டுப் பிறப்பனயாவை, அவையெல்லாஞ் சீவவர்க்கம். அவ்வாறு பிறத்தலில்லதி யாது அது பதிப்பொருளென்னு மிதுவொன்றே ஏனைச் செயல்களான் வேற்றுமையறிய வாராத வவ்விரண்டற்குந் தம்முள் வேற்றுமையறிய நிற்பதாகலின், ஏனைத் தேவரெல்லாம் அங்ஙனம் பிறந்திறத்தல் கேட்கப்படுதலானும், சிவனொருவனே வினைவயத்தனாதலின்றி அவ்வத் தேவரிடமாக நின்று உயிர்கட்கு அவற்றையறிந்து கூட்டவல்லுவன்; ஏனைத்தேவர் அது செய்ய மாட்டாரென்பது தானே போதருமென்பதாம்' என்று விரித்தருளினார்கள். இனிக் கர்ப்பவாசத்தை அனுசரித்ததே மரணமும். 'தோற்றமுண்டேல் மரணமுண்டு,' 'பிறந்தன இறக்கும்' என்பன திருமுறைகள். இத்தகைய ஜனன மரணங்களில்லாதவர் சிவபிரானொருவரே. ஆகலின் அவரே மெய்க்கடவுள். விஷ்ணுமுதலிய பிறரெல்லாம் பிறந்திறப்பவர்களே. ஆகலின் அவர்களெல்லாம் உயிர்கள்.

'அஜாத இத்யேவம் கச்சித் பீரு: ப்ரதிபத்யதே | ருத்ரயத் தே தக்ஷிணம் முகம் தேநமாம் பாஹிநித்யம்' (ஜனனமரண ஸம்ஸாரத்துக்குப் பயந்த ஒருவன் நீ பிறக்காதவனென்றே உன்னை வழிபடுகிறான். ஏ ருத்ரா! எது உனது தென்முகம் அதனால் என்னை நித்தியமுங் காப்பாயாக), 'அஜ:' (பிறப்பில்லாதவர்) என்ற சுவேதாசுவதரமும், சிவபிரானுக்குரிய அமிருதநாமமும், அவர் எமனை உதைத்துருட்டிய சரிதமும் அவ்வுண்மைக்கு மூலவசனங்கள்.

இனி அவ்வுண்மைபற்றிய ஆக்ஷேபசமாதானங்கள் வருமாறு:-

1. ஆ:—உருத்திரன் ஒருகாலத்தில் பிரமாவின் புருவநடுவிலும் மற்றொருகாலத்தில் விஷ்ணுவின் கோபத்திலும் பின்னொரு காலத்தில் அவரின் வேர்வையிலும் பிறந்தான். அவனைப் பிறவாதவனென்றல் யாங்ஙனம்?

ச:—அங்ஙனம் பிறந்தவன் சதுர்த்த ருத்திரனல்லன். இன்னானென்பது முற்கூறப்பட்டது. மேலும் 'நாலு யோனியினின் றெழு நவில்வகைத் தோற்றமாக—வேலுமெண்பத்து நான்கிலக்கமா முயிர்ப்பேதங்கள்' என்ற கூரேசவிஜயப்படி பிரமாவின் புருவநடுவும் விஷ்ணுவின் கோபமும் அவ் யோநிபேதங்களுட் சேருமா? பூர்வபட்சம் விஷ்ணுவை அப்ராகிருத சரீரியென்பதால் அவ்வியர்வையும் அவ் யோனிகளுள் ஒன்றாதலில்லை. ஆகவே அந்த வுருத்திரனும் அவ்விடங்களிற் பிறந்ததை நரசிங்கம் தூணிற் பிறந்ததைப் போலக் கொள்வதே சரி. தூணுமா யோனி? நரசிங்கம் பிறந்ததால் தூணுக்கென்ன பெருமை? அப்படிப்பட்ட தோற்றங்களையெல்லாம் பிறப்பென்பதற்கு வெளிப்பாடென்றே கொள்ள வேண்டும்.

2. ஆ:—விஷ்ணு பிறக்கமாட்டார். தசாவதாரங்களும் அவர்கலைகளே. கலை—அமிசம். அவ்வமிசங்களே பிறக்கும்.

ச:—அந்த அமிசங்கள்பிறந்தது கருமத்தாலா? இச்சையாலா? கருமத்தாலெனின் அவைகளெல்லாம் உயிர்களே. அவற்றைக் கடவுளெனல் உபசாரமாகவே முடியும். இச்சையாலெனின் அத் தசாவதாரங்களைக்கலைகளெனக்கீழ்ப்படுத்தவேண்டாம். கலைகளையுடையவராகிய விஷ்ணுவென்றே சொல்லிவிடலாம். கடவுள் இச்சைவசத்தாற் பிறக்கலாமென்பது பூர்வபட்சத்துக்கு உடம்பாடுதானே. இப்போது அந்தப்பிறப்பை அமிசங்களின் தலையிற் சுமத்தி அமிசியை மெல்லத்தப்பவைக்கப்பார்ப்பது பூர்வபட்சத்துக்கு ஒருதோல்வித்தான மன்றோ? இனி விஷ்ணுவுக்கு மரணமுளதாதல் ராமரின் சரயுநதி வீழ்ச்சியாலும், கிருஷ்ணர்மேல் வேடனின் பாணப் பிரயோகத்தாலும் ஊர்ஜிதம்.

19. வாராணஸ்யாஞ்ச பாராசர நியம புஜஸ்தம்பநாத்.

கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்
போய்புகல் வியாதன் கைதம் பித்தலின்.

பொருள்:—கங்கையாற் சூழப்பட்டு நடுவிலுள்ள காசியென்னும் பெரிய தலத்திற் பொய்சொன்ன வியாசருடைய கைகள் ஸ்தம்பித்தலானும் என்பது.

கலியாரம்பத்திற் காசியில் எல்லா முனிவர்களுங் கூடினார்கள். வியாசரும் அங்கு வந்தார். அம்முனிவர்கள் அவரை உபசரித்து 'வியாசரே! வேதம் புராணம் முதலிய பலகலைகளையும் அறிந்த நீர் அவற்றின் ஸாரத்தைத் திரட்டி ஒரு வாக்கியத்தில் எமக்குச் சொல்லும்' என்று கேட்டார்கள். வியாஸர் ஸர்வ சாஸ்திரங்களுங் கேசவனே பரம் பொருளென்று சொல்லுமென்றார். வேதங்கள் அப்படிச் சொல்லவில்லை யென்ற வுணர்ச்சியையுடைய முனிவர்கள் அதைக்கேட்டதும் வெருவிவிட்டார்கள். பிறகு அவர்கள் அவரைப் பார்த்து 'உமது தீர்ப்பைவிசுவநாதர் சந்நிதியில் வந்துசொல்வீரா?' என்று கேட்டார்கள். சொல்வேனென்றாரவரும். சிறிதுபொழுதில் விசுவேசர் சந்நிதியில் முனிவர்களெல்லாங் கூடினார்கள். வியாஸரும் அங்கு வந்து நின்றார்; கைகளை உயரத்தூக்கினர்; முன்சொன்னதைச் சொல்லிப் பிரமாணமும் பண்ணினர். உடையான் முன்வந்து நின்றுகொண்டு உடையனல்லாதானை உடையனெனப் பொய் கூறியதைக் கேட்ட நந்தி குபிதராகி அத்தூக்கிய கைகள் அவ்வண்ணமே அசைவற நிற்கும்படி சபித்தார். அவைகளும் அப்படியே ஆயின. எல்லா முனிவர்களும் ஹாஹாவென்றாரவாரித்தார்கள். வியாஸர் அப்போதும் விஷ்ணுவையே நினைத்தார்.

விஷ்ணு வந்து அவருக்கு நல்லபுத்தி சொல்லவேண்டியதாயிற்று. சிவபிரானே பரம்பொருளென்ற சத்தியஞானம் வியாஸர் மனதில் அவ்வுபதேசத்துக்கப்புறந்தான் புக்கது. வியாஸர் வெள்கிச் சிவபிரானிடம் அபராத க்ஷமைவேண்டினர். அங்கீகரிக்கப்பட்டது. கைகள் சீர்ப்பட்டன. வியாஸர் உய்ந்தார். இக்கதை காஞ்சிப் புராணத்துள்ளது.

'பராத் பரதரம் ப்ரஹ்ம யத்பராத்பரதோ ஹரி: தத்பராத் பரதோ ஹீசஸ் தஸ்மாத் துல்யோதிகோ நஹி' என்ற சரபம் அக் கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதைபற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— 'ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே | ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே இதிஷோடசகம் நாம் நாம் கலிகல்மஷ நாசகம்' என்ற கலிஸந்தாரணத்தால் விஷ்ணு நாமங்களே கலிதோஷ நிவிர்த்தி செய்யவல்லன வென்பது தெரிகின்றது. ஆகவினன்றோ உருத்திரன் முதலிய தேவர்களும் நாரதர் முதலிய முனிவர்களும் தமக்குக் கீழ்ப்பட்டவர்களுக்கு அந்த நாமங்களையே உபதேசித்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க, விஷ்ணுவைப் பரமென்றல் எப்படிப்பொய்யாகும்?

ச:— அந்தக் கலிஸந்தாரணந்தானே 'யதாஸ்ய ஷோடசிகஸ்ய ஸார்த்தத்ரிகோடீர் ஜபதி ததா ப்ரஹ்மஹத்யாம் தரதி' என்று அந் நாமங்களை மூன்றரைக்கோடி உரு ஜபிக்கச் சொல்லுகிறது. அப்படி ஜபித்தாலும் கிடைப்பன கலி பிரமஹத்திமுதலியவற்றின் நிவர்த்திகளாகிய ஸாமானிய பலன்களே. ஒரு நாளுக்கு ஆயிரம் உருவீதம் ஜபிப்பதானல் மூன்றரைக்கோடிக்கும் ஏறக்குறைய நூறுவருஷங்களாகும். அந்நாமங்களை அத்தனை நெடுங்காலம் ஜபிக்கவேண்டுமென்பது அந்நாமங்களின் பலவீனத்தைக் காட்டவில்லையா? அங்ஙனமாக அந்நாமங்களை உருத்திரர் நாரதர் முதலியோர் உபதேசிக்கின்றனரென்பதும் அதனல் அந்நாமங்களையுடைய விஷ்ணு பரமேயென்பதும் ஸர்வத்ர அவைதிகமேயாகும்.

2. ஆ:— பரம்பொருள் யாரென்று கண்டறியப் பிருகு முனிவர் முதலிற் கயிலை சென்றார். சிவன் அவரைக் கண்டதுங் கோபித்தான். பிருகு திரும்பிச் சத்தியலோகம் போனர். அங்குப் பிரமா அவருக்குக் கொஞ்ச மரியாதை செய்தான். பிறகு அம் முனிவர் வைகுண்டம் புக்கார். விஷ்ணு அவரை எதிர்கொண்டழைத்து வெகுகனமான உபசாரம் பண்ணினர். அத்தனையையும் ஏற்ற பிருகு மிக மகிழ்ந்து தம்மையனுப்பிய முனிவர்களையணுகி

அவர்களிடம் சிவன் தர்பாற் கோபங் கொண்டதால் தாமஸியென்றும், பிரமா சிறிது மரியாதை காட்டியதால் ராஜஸியென்றும், விஷ்ணு கனமான மரியாதை காட்டியதால் சாத்துவிகியென்றும் கூறி விஷ்ணுவே அதனாற் பரம்பொருளென்று தீர்ப்புக்கூறினரே. அவருக்கேன் எதாவுந் தப்பிக்கவில்லை?

ச:— இஃதொரு பரிஹாஸாஸ்பதமான கதை. கடவுளுக்கு உயிர்கள் மரியாதை செய்யவேண்டுமா? உயிர்களுக்குக் கடவுள் மரியாதை செய்யவேண்டுமா? என்ற வியவஸ்தை கெட்டவனெழுதிய கதையே அது. இக்கதையின் விரிவையும் அதன் விரிந்த கண்டனத்தையும் 'பாஞ்சராத்திர மதசபேடிகை யென்னுஞ் சைவசூளாமணி'யிற் கண்டு களிக்கலாம்.

3. ஆ:— சுகப் பிரமரிஷி பாகவதஞ் செய்து விஷ்ணு பரத்துவஞ் சொன்னது பொய்யா?

ச:—சாந்தி 331-வது அத்தியாயம் "அவர் (வியாஸர்) 'வீர்யமுள்ள புத்திரன் எனக்கு உண்டாக வேண்டும்' என்கிற ஸங்கற்பத்தோடும்......மஹாதேவரைப் பிரார்த்தித்தார்", "முக்கண்ணர்......அவரை நோக்கி, 'த்வைபாயனரே! உமக்கு....புத்திரன் உண்டாகப்போகிறான்'......என்று சொன்னார்" என்றும், 339வது அத்தியாயம் 'அந்தச்சுகர் பிதாவைவிட்டு விட்டு......கைலைமலையின் உச்சியை அடைந்தார்' என்றும், 341-வது அத்தியாயம் "மஹாதேவர்......வ்யாஸரை நோக்கி 'முன்காலத்தில் நீர்......புத்திரனை என்னிடம் வரித்தீர்......அந்தப் புத்திரன்...என்னுடைய அநுக்கிரகத்தினாலும்......சுசியுள்ளவனுமானான். அவன்......பரமமான கதியை அடைந்தான்...நீரும் என்னுடைய அனுக்கிரஹத்தால்...உம்முடைய புத்திரனுக்குச் சமமான நிழலைப் பார்ப்பீர்'..........என்றுசொன்னார்" என்றும் சொன்னதாற் சுகருக்கு அவர் ஜனன முதல் மோக்ஷபரியந்தம் சிவ சம்பந்தமுண்மை வெளியாம். அவர் தந்தையாகிய வியாஸருஞ் சிவப்பிரசாதியே யென்பதுங் கண்டு கொள்க. இப்பாரதப் பகுதி உபப்பிரம்மணம். இதற்குச் சுருதி சுகரஹஸ்ய மென்னும் உபநிஷத்து. அதில் 'சுக உவாச தேவாதி தேவ ஸர்வஜ்ஞ ஸச்சிதாநந்த லக்ஷண உமாரமண பூதேச ப்ரஸீத கருணாநிதே || உபதிஷ்டம் பரப்ரஹ்ம ப்ரணவாந்தர் கதம்பரம் | தத்வமஸ்யாதி வாக்யாநாம் ப்ரஜ்ஞாதிநாம் விசேஷத:|| ச்ரோதுமிச்சாமி தத்வேந ஷடங்காநி யதாக்ரமம் | வக்தவ்யாநி ரஹஸ்யாநி க்ருபயாத்ய ஸதாசிவ||' (தேவாதி தேவனே! ஸர்வஞ்ஞனே! ஸச்சிதானந்த லக்ஷணனே! உமாரமணனே! பூதேசனே! கருணாநிதியே! என்னைக் குறித்துத் தயவு செய்வாய். பிரணவாந்தர்கதமான மேலான பரப்பிரமம் உபதேசிக்கப்பட்டது. தத்வமசியாதி

வாக்கியங்களினுடையவும், பிரக்ஞாதிகளினுடையவுமான சாரமானது உபதேசிக்கப்பட்டது. ஆனால் கிரமமாக உண்மை ஷடங்கங்களைக்கேட்க இச்சிக்கிறேன். சதாசிவனே! தயவினாலே இப்போது ரஹஸ்யங்களெல்லாம் சொல்லத் தகுந்தன என்று சுகர் சொன்னார்) என வருவது சுகர் சிவபிரானிடமே உபதேசங் கேட்டாரென்பதையும், 'உபதிஷ்ட: சிவேநேதி ஜகத்தந்மயதாம் கத: | உத்தாய ப்ரணிபத்யேசம் த்யக்தா சேஷ பரிக்ரஹ: || பரப்ரஹ்மபயோராஸௌ ப்லவந்நிவ யயௌ ததா ப்ரவ்ரஜந்தம் தமாலோக்ய க்ருஷ்ணத்வைபாயநோ முநி: || அநுவ்ரஜந்நா ஜுஹாவ புத்ரவிச்லேஷகாதர: | ப்ரதிநேதுஸ்ததா ஸர்வே ஜகத் ஸ்தாவரஜங்கமா: ||' (இந்தப் பிரகாரம் சிவனால் உபதேசிக்கப்பட்ட சுகரானவர் லோகத்தினுடையவும் தது என்பதற்குப் பொருளான ஈசுரனுடையவும் மயமாக ஆய்விட்டார். எழுந்திருந்து ஈசனை நமஸ்கரித்து அவ்விடத்தைவிட்டு ஈசுவரனைக் கடைப் பிடித்துக்கொண்டு பரப்பிரமமாகிற அந்தச்சமுத்திரத்தில் மிதக்கிறவர்போலஅப்போதுபோனார். போகிற அந்தப் பிள்ளையைப் பார்த்துப் பிள்ளையின் பிரிவால் பயந்திருக்கிற வியாஸ ரிஷியானவர் பின்தொடர்ந்து கூப்பிட்டார். அப்பொழுது ஸ்தாவர ஜங்கமரூபமான ஸமஸ்தலோகமும் பதில் சொன்னது) என வருவது சிவபிரான் சுகருக்குச் சிவ ஸாயுஜ்யத்தை யடையத்தக்க உபதேசத்தையே செய்தாரென்பதையும், 'தத்வ மஸீத்யபேத வாசகமிதம் யே ஜபந்தி தே சிவஸாயுஜ்ய முக்தி பாஜோ பவந்தி' (தத்துவமசி யென்கிற அபேத வாக்கியத்தை எவர்கள் செபிக்கிறார்களோ அவர்கள் சிவஸாயுஜ்ய முத்தியை அடைந்தவர்களாகிறார்கள்) எனவருவது அச்சுகர் அவ்வுபதேசத்தின் பின்னர்ச் சிவஸாயுஜ்யமாகிய சிவமயமாதலையே யடைந்தா ரென்பதையும் காட்டுகின்றன. அத்தகைய சுகர் விஷ்ணு பரத்துவ புத்தியுடையவராயின் தந்தைபோல் தண்டிக்கவும் படுவர். பிருகிருதாசாரத்திலிருந்தவரும் கிருஷ்ணபாகவதத்தை ஜயதேவரென்பவரின் சகோதரரான போபதேவரென்பவர் செய்தாரென்பதும் சுகர் செய்யவில்லை யென்பதும் 'சிவபாரம்யப் பிரதரிசினி' முதலிய நூல்களில் நன்கு விவகரிக்கப்பட்டிருத்தல் காண்க.

4. ஆ:— வியாஸரின் கைதம்பித்த கதை மோகன நூற்களிற்றான் பிரசித்தம்.

ச:— மோகன நூல் மோகனநூல் என்ற பித்துரை முன்னுங் கண்டிக்கப்பட்டது. எல்லாவுயிர்களுக்கும் முத்தி கொடுத்துவிட்டால் இவ்வுலகம் நடைபெறாதென்று கருதி விஷ்ணு இவ்வுலகை நடத்துவதற்காகவே பல அந்நிய மதங்களை வகுத்துப் பல மக்களை அவற்றுட்புகுத்திமோகிப்பிக்கிறாரென்று 'போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட்டும்மை யின்னே-தேற்றிவைத்த தெல்லீரும்

வீடுபெற்று லுலகில்லை யென்றே — சேற்றிற் செங்நெல் கமல மோங்குந் திருக்குரு கூரதனு-ளாற்ற வல்லவன் மாயங்கண்டிரதறிந் தறிந்தோடுமினோ' என்ற பந்தப்பாட்டுக் கூறுகின்றது. ஜீவர்களுக் காக உலகமா? உலகத்துக்காக ஜீவர்களா? பெருமாள் உலகத்தை நடத்துவதற்காகப் பல ஜீவர்களுக்கு முத்தி கொடுக்கமாட்டா ரென்றால் அவர் கருணாசாலியாதல் யாங்ஙனம்? ஆகவே அந்தப் பாட்டும் அந்தப் பந்தமும் அவற்றோடினமாய மற்றைச் சுவடி களுமே மஹாமோகனமென்பர் அறிஞரென்க.

5. ஆ:—வியாஸர் பொய் சொன்னாரென்றால் அவர் வகுத்த வேதத்தை யனுசரிக்கலாமா?

ச:— வேதத்தைச் சொன்னவர் சிவபிரான். வகுத்தவர் வியாஸர். சொன்னவரே சர்வஞ்ஞர். வகுத்தவருமா சர்வஞ்ஞர்? ஆகையால் வியாஸர் பொய் சொல்வதற்கும் நாம் வேதத்தை யனு சரிப்பதற்கும் சம்பந்தமேயில்லை.

6. ஆ:— நந்தி வியாஸரைச் சபிக்கவரும்போது ஹநுமார் அந்நந்தியை முகத்தில் உதைத்தார். அதனால் அந்நந்தியின் மேல் வாய்ப் பற்களெல்லாம் உதிர்ந்துவிட்டன. அதற்கடையாளமாகக் கங்க எருதுக்காரர் அவ்வெருதின் நெற்றியில் ஹநுமார் சித்திர முள்ள பித்தளைத் தகட்டைத் தொங்கவிட்டிருத்தல் பிரத்தியக்ஷம்.

ச:— ஹநுமான் பட்டவுதையும் அவமானமும் முன் விளக் கப்பட்டன. அவன் நந்திதேவரை உதைத்தானென்று கங்க எருதைக்கொண்டு சாதிக்கப்பார்ப்பது தகுமா? மேலும் கங்க எருதுக்குத் தென்னாட்டிற்பெருமாள் மாடென்றே பெயர். ஆகவே ஹநுமான் ஒருக்கால்நந்தியையுதைத்திருந்தால் அவ்வுதைபட்டநந்தி விஷ்ணுநந்திதானென்பதே அக்கங்க எருதுக் கதையால் விளங்கும்.

7. ஆ:— அக்காலத்தில் சிவ நிந்தை செய்த வியாஸருக்குக் கைதம்பித்தது உண்மையானால் இக்காலத்திலுள்ள சிவ நிந்தகர் களுக்கும் ஏன் அத்தண்டனையில்லை?

ச:— இந்த விவகாரத்தால் இப்போதுள்ள விஷ்ணு நிந்தகர் களுக்கு ஒரு தண்டனையுமில்லாமையால் அவர்களுக்கு எந்தக் காலத்திலுமே தண்டனையில்லை யென்பது சித்தமாய்விடும். இப்படி யும் விவகரிக்கலாமா? எந்தக்காலத்திலும் எந்தச் சிவநிந்தகனுக்கும் எண்ணிறந்த விதங்களில் தண்டனை நிச்சயமாயுள்ளது. அத்தண் டனை உடனே பலிப்பதுமுண்டு. தாமதித்துப் பலிப்பதுமுண்டு. வியாஸர் பிரபலஸ்தரானபடியாலும் அவர் பொய்யுரையாற் பல முனிவர்களும் அவர்கள்மூலம் இவ்வுலகமுமே கெடவிருந்தபடியா

னும் லோக ஸம்ரக்ஷணர்த்தம் அவர் உடனே தண்டிக்கப்பட்டார். அவ்வளவே.

---

20. ப்ராக் புராணும் ப்ரத்வம்ஸே கேசவேநாச்ரித
வ்ருஷ வபுஷா தாரிதக்ஷ்மாதலத்வாத்.

முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமோடு தாங்கலின்.

பொருள்:— திரிபுரசம்மார காலத்தில் விஷ்ணு பெரிய ரிஷப வடிவமெடுத்துத் தேரோடு சுமத்தலானும் என்பது.

சிவபிரான் திரிபுர சம்மாரஞ் செய்யத் தேர்மீ தேறினர். அத்தேர் பாரம் பொறுக்கமாட்டாமல் இற்றது. உடனே விஷ்ணு ரிஷபரூப மெடுத்துச் சிவபிரானை அத்தேருடன் சுமந்தார்.

'தஸ்மிந் குர்வதி தேவேச பதம் லோகமநோரத: | பாராஸஹ: பபாதாத ததா படபட த்வநி: | பிப்யுஸ்ஸ ப்ரஹ்மகா தேவாஸ்ஸ நாராயண காஸ்ததா | நாராயணோ மஹாயோகி வ்ருஷோ பூத்வா ததௌ ரதம்|| ததோ நாராயணஸ் தஸ்மாச் சாபாதாத் விநிஸ்ஸ்ருத: | வ்ருஷ ரூபம் ஸமாஸ்தாய உஜ்ஜஹார மஹாரதம்' (அங்ஙனம் திருவடியை வைத்தபோது பாரம் பொறுக்க மாட்டாது படபடத் தொனியோடு இந்த இரதமானது இற்றது; பிரமாதி தேவர்களெல்லாம் அச்சமடைந்தார்கள்; அப்போது மகா யோகியாகிய நாராயணர் ரிஷபரூப மெடுத்துத் தேரைத் தாங்கினர்) என்ற உபதேச காண்டம் அக்கதைக்கு மூலவசனம்.

இனி அக்கதை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— ஆதிசேஷன் உலகையும் சிவன் சந்திரனையும் தாங்குவர். அதனால் ஆதிசேஷனைக் காட்டிலும் உலகமும் சிவனைக் காட்டிலும் சந்திரனும் உயர்ந்தனவாகிவிடுமா? அப்படியே விஷ்ணு சிவனைத் தாங்கினதனால் விஷ்ணுவினும் சிவன் உயர்ந்தவனாகிவிட மாட்டான். சிவனுக்கு உபகரிக்கவே விஷ்ணு அக்காரியத்தைச் செய்தார்.

ச:— சுமக்கும் பொருள்களைக் காட்டிலும் சுமக்கப்படும் பொருள்களிற் சில உயர்ந்தும் சில தாழ்ந்துமிருக்கும். சுமக்கும் பொருள்களும் சுமக்கப்படும் பொருள்களுந் தம்முள் நிகர்த்திருப்பதுமுண்டு. அவை இன்னவிதமாகத்தா னிருக்கவேண்டுமென்ற நியமமில்லை. அப்படியிருக்க உவமானங்களைத் தாறு

மாருகப் பிரயோகித்துவிட்டால் எல்லாருமே மயங்கிவிடமாட்டார்கள். ஆதிசேஷனுஞ் சிவபிரானுந் தம்மிற் றாழ்ந்த பொருள்களையே தாங்கினார்கள். ஆனால் விஷ்ணு தம்மினுயர்ந்த பொருளையே தாங்கினார். சிவபிரான் ஆண்டவரென்பதும் விஷ்ணு அவருக்கடியாரென்பதும் முன் 'அவுணர் முப்புரம் அழியவில் வாங்கலின்' என்ற பகுதியில் சவிஸ்தாரம் பண்ணப்பட்டிருக்கின்றன. ஆகையால் அடியாராகிய விஷ்ணு ஆண்டவராகிய சிவபிரானைத்தம்க்ஷேமத்தின் பொருட்டே அங்ஙனஞ் சுமந்தாரென்பது தெளிக.

2. ஆ:— ஒரே சூரியன் தண்ணீரிற் பல சூரியர்களாகித் தோன்றும். அப்பிரதி பலன சூரியர்களுக்கெல்லாம் சலனங்களுள. அச்சலனங்களைக் கொண்டு சூரியனையே சலனமுடையதென்று சொல்லி விடலாமா? அப்படியே விஷ்ணு பல அவதாரங்களிற் றோன்றுவர். அவ்வவதார விஷ்ணுக்களிடம் பல ஹேயங்கள் காணப்படும். அந்த ஹேயங்களைக்கொண்டு மூலவிஷ்ணுவையே குறை சொல்லிவிடப்படாது. ஆகையால் விஷ்ணுவின் சலனமான ரிஷபம் சிவனைத் தாங்கினது ஹேயமானாலும் அது விஷ்ணுவைப் பாதியாது.

ச:— பிரதிபலன சூரியர்களிடமுள்ள எவ்வகைப்பட்ட சலனமுமே மூலசூரியனைப் பாதியாது. அப்படியே அவதார விஷ்ணுக்களிடமுள்ள எப்படிப்பட்ட தர்மங்களுமே மூலவிஷ்ணுவைத் தொடாமலிருக்கவேண்டும். ஆனால் ஹேய தர்மங்கள் மட்டுந் தொடாவென்பதென்னை? தீர்க்காலோசனையின்றி உவமானங்களைப் பிரயோகித்து விடுவதும், பின்னர் உவமையையும் பொருளையும் பொருத்தநேரும்போது பேரிடர்ப்படுவதும் பூர்வபட்சத்துக்கும் அதன் இனத்துக்கும் வழக்கம். பூர்வபட்சம் தனக்கிஷ்டமில்லாத செய்தி யொன்றை அவதார விஷ்ணுக்களிடங் கண்டு விட்டால் அதை மறைக்கப் பெரும் பிரயாசை யெடுக்கும். அப்பிரயாசையால் அச்செய்தி மறையாவிட்டால் அப்பூர்வ பட்சம் தன் மூல விஷ்ணுவைக் காத்துக்கொள்வதற்கு அவதார விஷ்ணுக்களையெல்லாம் மொத்தத்தில் ஹீனப்படுத்திவிடும். மேற்காட்டிய ஜலசூரிய வுதாரணத்திலிருந்து அவ்வுண்மை தெரியலாம். அவ்வுதாரணம் 'அன்னவனுக்கோ ரிழிவுரைக்கு மாறுமுளதோ வதுவன்றித் - துன்னு கதிரோ னொன்றாகித் தோன்றுகினும் பற்பல கடத்தின் - மன்னு புனலிற் பலவாகி வதிந்த தென்னும் வகைசனிப்ப - தென்னலாகுந் திருமால்செய் யெண்ணிலனந்த மவதாரம்' என்ற கூரேச விஜயப் பாட்டிற் காண்க.

---

21. அஸ்தோ கைர் ப்ரஹ்ம சீர்ஷை ரநிச
களக்ருதா லங்கிரியா பூஷிதத்வாத்.

அயன்சிர மாலை யளவில வணிதலின்.

பொருள்:—பிரமாவின் கணக்கற்ற தலைகளைக் கோத்து மாலை யாகத் தரித்தலானும் என்பது.

'ஸர்வக்ராஸோ மஹா தேவஸ் ஸர்வாண்டாந்யகிலம் ஜகத் | ஸர்வாந் ஜீவாந் வீக்ஷணே ந ஹாஸே நச பராந் க்ருதா அட்டஹாஸேந ந்ருத்தே ந லலாட நயநாக் நி நா | ஹுங்காரேண ச ஹஸ்தே ந பாதா காதேந லீலயா | நாநாருத்ர கணைஸ் ஸாகம் ஸம்ஹாரம் யஞ் ச காரஸ: | ஸ மஹா ப்ரளயோ நாம ஸர்வேஷாம் நாச காரக: ஸம் ஹர்த்தா ஸ மஹா தேவஸ் ததா நந்தா ந் ஹரீந் விதீந் | இந்த்ராதீந பராந் தேவாம் ஸ் தத் ததண்டேஷு ஸம்ஸ்திதாந் | தத்வா காம் ச்சித்ததா தேஷாம் பஸ்மாநி பரமேச்வர: | அவாலே பயதாத் மாங்க மூத்தூளந விதாநத: | பபாரமுண்டமாலாச்ச பரேஷாம் ஸ்வேச்சயா விபு: அஸ்தீநிதேஷ மாகல்பம் விததாந மஹேச்வர: | யஜ்ஞோப வீதமங்யேஷாம் மூர்த்தஜாநி ச காரஹி |' (சர்வக்கிராஸர் எனப்படும் மகாதேவர் சமஸ்த அண்டங்களையும் சமஸ்த உலகங்களையும், சர்வ ஜீவர்களையும் சங்கரிக்குங்கால் சிலரைப் பார்வையினாலும், சிலரை நகைப்பினாலும், சிலரைக் கோபத்தினாலும், சிலரை அட்டஹாஸத்தினாலும், சிலரை நடனத்தினாலும், சிலரை இலாட அக்கினியினாலும், சிலரை ஹுங்காரத்தினாலும், சிலரைக் கையினாலும், சிலரை உதையினாலும் நாநாருத்ர கணங்களோடு கூடி நின்று லீலையினாலே சங்கரிக்கின்றார்; இது எல்லாவற்றையும் நாசஞ்செய்யும் மகாப்பிரளயம் எனப்படும்; சங்கார கர்த்தாவாகிய அம்மகாதேவர் அப்போது அளவிறந்த விஷ்ணுக்களையும், பிரமாக்களையும், இந்திராதியரையும், அந்தந்த அண்டங்களிலே உள்ள சிலதேவர்களையும் தகித்து அவர்கள் பஸ்மங்களைத் தமது அங்கத்திலே உத்தூளனமாகப் பூசினர்; சிவபெருமான் சுவேச்சையினாலே பிறருடைய தலைமாலைகளையும் தாங்கினர்; அவர்கள் என்புகளைக் கற்பாந்தமாகத் தரித்தார்; உரோமங்களை உபவீதமாகக் கொண்டார்) என்ற சிவரகசிய கண்டம் அவ்வுண்மைக்கு மூலவசனம்.

இனி, அவ்வுண்மை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— ஸர்வாண்டங்களையும் மூடிவிற் சங்கரிப்பவர் விஷ்ணுவே. அதனாலேயே அவர் ஹரியென்ற பெயரினரானார். அவர் சங்காரத்தில் இந்திரனும் உருத்திரனும் பிரமனும் முறையே

ஒடுங்கி விடுவர். அங்ஙனமாகப் பிரமனுக்கு முன் ஒடுங்குபவனும் சங்காரியல்லாதவனுமாகிய சிவன் பிரமசிரோ மாலையை அணிவானென்பது யாங்ஙனம்?

ச:— 'தாமச மனுவந்தரத்திலே ஹரியை என்கிறவள் கருப்பத்திலே ஹரிகள் என்கிற தேவர்களோடு கூட ஹரியென்கிற திருநாமமுடையவரா யவதரித்தார்' என்பது விஷ்ணு புராணம் அமிசம் 3. அத்யாயம் 1. விஷ்ணுவுக்கு ஹரிநாமம் அவர் ஹரியை யென்னுமொரு பெண்ணின் வயிற்றிற் பிறந்ததால் வந்ததே தவிர உலகத்தை ஹரிப்பதால் வந்ததன்றென்பது அதனால் விளங்கும். சாந்தியும் 352-வது அத்தியாயத்தில் 'நான் கிருகங்களில் நடக்கின்ற யாகங்களில், இலோப ஹ—த என்கிற மந்திரத்தினால் அழைக்கப்பட்டுப் பாகத்தை ஹரிக்கிறேன்; அதனாலும், என்னுடைய நிறம் ச்ரேஷ்டமான ஹரித வர்ணமானதனாலும் நான், ஹரி என்று கருதப்பட்டேன்' என்று கூறி அந்த ஹரிநாமத்தை அவ்வளவில் விட்டது. நான் - கிருஷ்ணர். மேலும் சங்காரத்தைத் தாமஸமென்று நிந்திக்கும் வழக்கமுடைய பூர்வபட்சம் இங்கு விஷ்ணுவைச் சர்வ சங்காரியென்பது மதியாமா? இன்னும் தேஜோபிந்து 'ரக்ஷகோ விஷ்ணுரித்யாதி ப்ரஹ்மா ஸ்ருஷ்டேஸ்து காரணம் ஸம்ஹாரே ருத்ரே' (ரக்ஷிப்பவன் விஷ்ணு ஸ்ருஷ்டிப்பவன் பிரமன் ஸம்ஹரிப்பவன் ருத்ரன்) என்றும், யோகசூடாமணி 'ப்ரஹ்மா தேவாநாம் ப்ரதமஸ்ஸம்பபூவ | தாதாச ஸ்ருஷ்டௌ | விஷ்ணுச்ச ஸ்திதௌ | ருத்ரச்ச நாசே' (பிரமா சிருஷ்டியும் விஷ்ணு ஸ்திதியும் ருத்ரன் நாசமும் செய்வர்) என்றுங் கூறுவதால் விஷ்ணு ஸ்திதிக்கே யுரியவரென்பதும் ருத்ரரே சங்கார கருத்தா வென்பதும் விளங்கும். ஆகவே பிரமா விஷ்ணு முதலியோரைச் சங்கரிப்பதும் அவர்களின் சிரோமாலைகளைத் தரிப்பதும் சிவபிரானுக்குக் கூடுங் காரியங்களேயாமென்க.

2. ஆ:— எலும்பைத் தொட்டாற் பிராயச்சித்தஞ் செய்ய வேண்டுமே?

ச:— பிராயச்சித்த விதிகள் ஆத்மாக்களுக்கே, பரமாத்மாவுக்கல்ல.

3. ஆ:— சிவன் பரமாத்மாவாயினும் எலும்பு மாலைகளை யணியக் காரணமென்ன?

ச:— அரிபிரமாதியர் தாந்தாமே பரம்பொருளென மயங்கும் போதும், அரிபிரமாதியரைப் பரம் பொருளெனப் பிறர் மயங்கும் போதும் அவர்கட்கு அம்மயக்கந் தீர்ந்து உய்தி கூடுதற்பொருட்டு

அத்தேவர்களின் அநித்தியத்தையும் தமது நித்தியத்தையும் அவர் அம்மாலாபரணதாரணத்தால் விசதப்படுத்துகிறார்.

4. ஆ:— ஒருதடவை பிரமாவின் சிரசைச் சிவன் கிள்ளினான். அது அவன் கையில் ஒட்டிக்கொண்டது. அப்பால் அது விஷ்ணுவின் கிருபையால் நீங்கியது. அந்த விடமே கபாலமோக்ஷமென்பது. அவரா தலைமாலை தலைக்கணிவார்?

ச:— கபாலமோக்ஷ மென்பது ஒருஸ்தலமா? ஒரு தீர்த்தமா? வேறேதேனு மொன்றா? 'கபால நன்மோக்கத்திற் கண்டுகொண்மின்' என்று பாடியவர் அவ்விவரந் தெரிவித்தாரிலர். 'முற்காலத்தில் தண்டகாரண்யத்தில் வஸித்த......ரகுராமனால்......க்ஷுரத்தினால்......ராக்ஷஸனுடைய தலையானது அறுக்கப்பட்டது.........அந்தத் தலையானது.........மகோதர ரிஷியினுடைய கணுக்கால் எலும்பைப் பிளந்து பற்றிக்கொண்டு.........பிரகாசித்தது......அந்தத் தலையினால் உண்டான வேதனையினால் பீடிக்கப்பட்ட அந்த மகரிஷியானவர்......எல்லாத் தீர்த்தங்களுக்கும் போனார்.........எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தும் விடுபட்டவராகவில்லை.........அவர் ஸரஸ்வதீ நதியிலுள்ள ஔசனஸ தீர்த்தத்தையடைந்து ஸ்நானஞ் செய்தார். பிறகு, ஔசனஸ தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்கின்ற அந்த மகரிஷியினுடைய காலை விட்டு விட்டு அப்பொழுது அந்த ராக்ஷஸனுடைய தலையானது ஜலத்தினுள் விழுந்தது. அவர் அந்தத் தலையினால் விடப்பட்டு அதிக ஸுகத்தை அடைந்தார்.........பிறகு அந்த......ரிஷி...ஆச்ரமத்தை வந்தடைந்தார்......அந்த மகோதரர்......ரிஷிகளுக்கு அவை எல்லாவற்றையும் உரைத்தார்......அந்த ரிஷிகள்.........அந்தத் தீர்த்தத்திற்குக் கபாலமோசனமென்று பெயரிட்டார்கள்' என்பது சல்யம் 40வது அத்யாயம். மோசனமென்பதும் மோக்கமென்பதும் ஒன்றே. விடுதலை யென்பது அவற்றினருத்தம். ஆக்கபால மோசனத்தைத் தானே கபாலமோக்கமென வைத்துக்கொண்டு அப்பாரதக் கதையை மறைத்துச்சிவநிந்தையை அப்பாடகர் கற்பித்துவிட்டால் அவரை அறிவுடையவர்கள் மதிப்பார்களா? சாத்திரங்களைப் புரட்டி உலகை வஞ்சிப்பது அம்மம்ம! தாய்க்கொலையினுங் கொடிது. சாத்திரப் புரட்டாற் பரமென நிரூபணஞ் செய்யப்பட்ட தெய்வம் எதுவாயினுமாக, அது அப்புரட்டனைக் கண்டு "அடபாவி! 'என்ன காரியஞ் செய்தனை யென்னையுங் கெடுத்தாய்'" என்று நடு நடுங்கி அலறுமென்க. பிறகு அக்கபாலமோக்கத்தைத் தங்கருத்துக் கேற்பப் பிரமகபாலமெனவுங் கூறலாயினர் அவர் வழிவந்தோர். ஆகவே அத்தலைமாலைகளைச் சிலவரையார் தரித்தல் சவியாத வுண்மையா மென்க.

---

22. தாநாத் ப்ரஜ்ஞாந முக்த்யோ ரபிச
பசுபதிஸ் ஸர்வதேவ ப்ரக்ருஷ்ட:.

ஞானமும் வீடும் பேணிநர்க் குதவலின்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ
னென்பது தெளிக வியல்புணர்ந் தோரே.

பொருள்:— ஞானத்தையும் மோக்ஷத்தையும் தன்னைப் பூசிப்பவர்க்குக் கொடுத்தலானும் பசுபதியென்னும் பெயரையுடைய முழுமுதற் கடவுளே ஏனைத் தேவர்களெல்லாரினும் உயர்ந்தவனென்னும் வேதமுடிவைக் கண்டு உய்வீர்களாக நல்லிலக்கணமுடைய பெரியோர்களே! என்பது.

நாராயணம் 'பரமாத்மா வ்யவஸ்தித: | ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸ ஹரி: ஸேந்த்ர:...' என்றது. இதிலுள்ள 'ஸ ஹரி:' என்ற பாடத்தை ஸ்ரீமத் ஹரதத்தப்பிரபுலைப்புக்கொள்ளவில்லை. அதற்கேற்பவே மஹாமும் 'பரமாத்மா வ்யவஸ்தித: ஸ ப்ரஹ்மா ஸ ஈசாந: ஸேந்த்ர: ...' என்று 'ஸ ஹரி:' என்பதைக்கழித்துக்கூறிற்று. பரமாத்மாவொருவனுளன், பிரமன் உருத்திரன் இந்திரன் முதலியோர் அவனுடைய விபூதிகள் என்பன அவ்விருவுபநிஷத்வாக்கியங்களின் தாற்பரியம். பூர்வபக்ஷம் அவ்வாக்கியங்களிலுள்ள பரமாத்மபதம் சிவபிரானைக் குறிப்பதா மஹா விஷ்ணுவைக் குறிப்பதாவென ஆராயப் புகுந்து அங்குள்ள விபூதிகளிற் சிவநாமம் வந்துவிட்டமையாலும் விஷ்ணு நாமம் வாராமையாலும் மஹாவிஷ்ணுவையே குறிக்குமென்று தீர்மானிக்கும். அது பொருந்தாது. 'ஸ ப்ரஹ்மா ஸ விஷ்ணு: ஸ ருத்ர: ஸ இந்த்ர:' என்று சாண்டில்யத்திலும், 'ஸ சிவ: ஸ ஹரிர் விதி:' என்று வராஹத்திலும், 'த்வம் ப்ரஹ்மா த்வம் விஷ்ணு ஸ்த்வம் ருத்ரஸ் த்வமிந்த்ர:' என்று கணபதியிலும், 'த்வம் ப்ரஹ்மா த்வம் ச வை விஷ்ணு: த்வம் ருத்ரஸ் த்வம் ப்ரஜாபதி:' என்று மைத்ராயணீயிலும், 'த்வம் ப்ரஹ்மா த்வம் ருத்ரஸ் த்வம் விஷ்ணு:' என்று ப்ராணாக்நி ஹோத்ரத்திலும் விஷ்ணுவும்பிரமருத்ரேந்திராதிகளோடு விபூதிகளில் வைத்துப் படிக்கப்பட்டார். அதனால் நாராயண மஹங்களிலுள்ள விபூதிகளிலும் விஷ்ணு சேர்ந்தவரேயென்று அறிஞர் யூகித்துக்கொள்ளவேண்டு மென்பதாயிற்று. அங்ஙனமாக அவரைப்பரமாத்மாவெனல் எப்படி? இனி அவ்விபூதிகளையுஞ் சொல்லி அப்பரமாத்ம பதத்தை யொதுக்கிவிட்டு அதற்குப் பிரதியாகச் சிவபிரானுக்கோ மஹாவிஷ்ணுவுக்கோவுரிய விசேஷ லக்ஷண பதங்களைச் சொல்லியிருக்கும் உபநிஷத் ஏதேனுமுண்டா வென்று பார்க்கவேண்டும். அப்படியோருபநிஷத்திருந்

தால் அவ்விசேஷ லக்ஷணங்களுக்குரிய தெய்வத்தையே அப்பரமாத்ம பதஞ்சுட்டுமென்பது நிச்சயம். கைவல்யம் அத்தகைய வாக்கியத்தை யுடையது. 'உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஸாந்தம் | ......பூதயோநிம் ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்|| ஸ ப்ரஹ்மா ஸ சிவ: ஸேந்த்ர: | ஸ ஏவ விஷ்ணு: ஸ ப்ராண: ஸ காலோக்நி: ஸ சந்த்ரமா' என்பதே அது. இதில் விஷ்ணு விபூதிகளிற் சேர்ந்தார். பரமாத்ம ஸ்தானத்தில் உமாஸஹாயம் பரமேச்வரம் த்ரிலோசநம் நீலகண்டம் என்று சிவபிரானுக்கேயுரிய விசேஷ லக்ஷணபதங்களே வந்துள்ளன. இவர் துரீய ருத்ரர். விபூதிகளிற் சேர்ந்த சிவன் குணருத்ரர். விஷ்ணுபரமாக அத்தகைய வாக்கியம் ஒன்றேனும் வேதவேதாந்தங்களிலில்லை. ஆகவே சிவபிரானே பரமாத்மாவென்பது வஜ்ரலேபமாகும்.

'மோஹாந் நஜா நந்தி ஸுரேந்த்ர முக்யா:' (இந்திரன் முதலானவர்கள் அவரை மோகத்தா லறியவில்லை), 'அதிமோஹகரீ மாயாமம விஷ்ணோச்ச ஸுவ்ரத | தஸ்ய பாதாம்புஜ த்யாநாத் துஸ்தரா ஸுதராபவேத்' (எனக்கும் விஷ்ணுவுக்கும் மாயையானவள் மோகத்தைச் செய்கிறவளாயிருக்கிறாள். கடக்கமுடியாத அந்த மாயையானவள் எம்மால் அந்தச் சிவபாதத்தியானத்தாலே சுலபமாகத் தாண்டத் தக்கவளாய் விடுவாள்) என்றது சரபம். 'மாயயா மோஹிதச் சம்போர் மஹாதேவம் ஜகத்குரும் நஜாநந்தி ஸுராஸ் ஸர்வே ஸர்வகாரண காரணம்' (தேவர் யாவருஞ்சம்புவின் மாயையால் மோகமுற்றுச் சகத்குருவும் சர்வ காரண காரணருமான மஹாதேவரை யறியாராயினர்) என்றது பஞ்சப்ரஹ்மம். 'சின்மாத்ரோஹம் ஸதாசிவ: (நான் ஞானமாத்திரையாயுள்ள சதாசிவன்) என்றும், 'சித்...ரூபம்...உமா ஸஹாயம்' (உமாசகாயன் ஞானரூபி) என்றுஞ் சொன்னது கைவல்யம். 'ஈசாந: ஸர்வ வித்யாநாம்' எல்லாவித்தைகளுக்கும் ஈசானன் தலைவன்) என்றன நாராயணமும் அதர்வசிரஸும். 'தேவாதி தேவஸர்வஜ்ஞ ஸச்சிதாநந்தலக்ஷண | உமாரமண பூதேச ப்ரஸீத கருணாநிதே' (தேவதேவனும் சர்வஞ்ஞனும் சச்சிதாநந்தலக்ஷணனும் உமாபதியும் ப்ரஸீதனும் கருணாநிதியுமாகிய சிவபிரான்) என்றது சுகரஹஸ்யம். 'ஓமித்யேவ யதுத் பூதம் ஜ்ஞாநம் ஜ்ஞேயாத்மகம் சிவம்' (பிரணவமாயிருக்கிற ஞானத்துக்கு ஞேயம் சிவபிரான்) என்றது சாண்டில்யம். 'திவ்யஜ்ஞாநோபதேஷ்டாரம் தேசிகம் பரமேச்வரம்' (திவ்யமான ஞானத்தை யுபதேசிக்கிற ஆசாரியனை பரமேசுவரனை) என்றது யோகசிகை. 'ஸர்வஜ்ஞ:......ஸர்வேச்வர: ஈச: பசுபதி:' (சருவஞ்ஞனும் சருவேசுவரனும் ஈசனுமாகிய பசுபதி) என்றும், 'ஸர்வஜ்ஞ ஈச: பசுபதி:' (சருவஞனும்ஈசனுமாகியபசுபதி) என்றும்

சொன்னது ஜாபால். 'நித்ய சின்மாத்ர ரூபோஸ்மி ஸதா ஸச்சித் மயோஸ்ம்யஹம்' (நித்யஞான சொரூபனு யிருக்கிறேன். சர்வ காலமும் சத்ரூபமாயும் சித்ரூபமாயு மிருக்கிறேன்) என்றது மைத்ரேய். 'ஸர்வஜ்ஞ ஈச:' (சர்வஞ்ஞனுகிய ஈசன்) என்றது பைங்கலம். 'கவீம்.........ஸர்வேச்வரம்' (சர்வஞ்ஞனை சருவேசுவரன்) என்றது நாரத பரிவ்ராஜகம். இவ்வாக்கியங்களாற் பிரமா விஷ்ணு இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் மோகத்தை யடைபவர்களென்பதும், சிவபிரானே அவர்களுக்கு அம்மோகத்தைக் கொடுப்பவரென்பதும், அவரொருவரே சருவஞ்ஞர் சர்வாத்மாக்களுக்கும் ஞானத்தை யருள்பவரென்பதும் வஜ்ரலேபமாகும்.

யோகசிகை 'தஸ்ய விஜ்ஞான மாத்ரேண ஜீவந் முக்தோ பவேஜ் ஜந:' (அந்த நாதலிங்கத்தின் ஞானமாத்திரத்தினுலே ஜனனமானது ஜீவன் முக்தியை யடைந்ததாகி விடும்) என்றும், 'யேந விஜ்ஞாந மாத்ரேண ஜந்மபந்தாத் ப்ரமுச்யதே' (விஞ்ஞான மாத்திரத்தால் ஜன்மபந்தத்தி னின்று விடுவிக்கப்படுகிருன்) என்றுஞ் சொன்னது. அந்நபூர்ணம் 'தஸ்ய விஜ்ஞாந மாத்ரேண ஜீவந் முக்தோ பவிஷ்யஸி' (அந்த விஞ்ஞான மாத்திரத்தாலே ஜீவன் முக்தனுய் விடுவாய்) என்றது. முக்திகம் 'அத: ஸர்வேஷாம் கைவல்ய முக்திர் ஜ்ஞாநமாத்ரேணோக்தா' (ஆகையால் எல்லாருடையவும் எல்லாவுபநிஷத்துக்களுடையவும் அபிப்பிராயமானதுகைவல்ய முக்தி ஞானமாத்திரத்தாலேதானென்று சொல்லப்பட்டிருக்கிறது என்பது) என்றது. இந்த வாக்கியங்களால் ஞானமொன்றே மோக்ஷத்தைத் தருமென்பது வஜ்ரலேபமாகும்.

'அதகஸ் மாதுச்யதே மஹாதேவ: யஸ்ஸர்வாந் பாவாந் பரித்யஜ்ய ஆத்மஜ்ஞாந யோகைச்வர்யே மஹதி மஹீயதே தஸ்மாதுச்யதே மஹா தேவ:' (பின்னர் எது பற்றி மகாதேவர் எனப்படுகிருர். எல்லாப் பாவனைகளையும் விடுத்து, மகத்தாகிய பரமாத்மாநந்தயோகைச்வரியத்தின் பொருட்டுப் பூசிக்கப்படுகின்ருர். அது பற்றி மகாதேவர் எனப்படுகின்றனர்) என்றது அதர்வசிரஸ். 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய நிர்மமோ நிரஹங்காரோ பூத்வா ப்ரஹ்மைகம் சரணமுபகம்ய' (எல்லாத்கருமங்களையும் விட்டு விட்டு நான் எனது என்னும் அகங்கார மமகார மில்லாதவனுய்ப் பிரமமொன்றையே சரணமாக வடைந்து) என்றது நிராலம்பம். 'தஸ்மாத் ஸர்வாந் பரித்யஜ்ய ஹேயாந் விஷ்ண்வாதிகாந் ஸுராந் | சிவ ஏவ ஸதாத்யேயஸ் ஸர்வ ஸம்ஸார மோசக:' (சமுசார துக்க நாச முத்திப் பிராப்தியின் பொருட்டுக் கீழான விஷ்ணு முதலிய சர்வ தேவர்களையும் விட்டு எப்பொழுதும் தியேயனுகவுள்ள சிவபெருமானையே தியானிக்கவேண்டும்) என்றது சரபம். 'ஸர்வமிதம் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த் ராஸ்தே ஸம்ப்ரஸுயந்தே | ஸர்வாணி

சேந்த்ரியாணி ஸஹபூதைர் ந காரணம் காரணானாம் தாதாத்யாதா காரணந்துத்யேயஸ் ஸர்வைச்வர்ய ஸம்பந்நஸ் ஸர்வேச்வரச் சம்பு ராகாச மத்யே........சிவ ஏகோத்யேயச் சிவம் கரஸ் ஸர்வ மந்யத் பரித்யஜ்ய ஸமாப்தாதர்வ சிகா' (அந்தப் பிரம்ம விஷ்ணு ருத்ரேந்திரர் முதலியவர்களெல்லாம் உற்பத்தியாகின்றனர். எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே கூட உற்பத்தியாகின்றன. காரணமும், காரணங்களைப் படைத்தோரும் கருதிஞெருமாகியவர் உற்பவித்தலின்று. காரணமும் சர்வைசுவரிய சம்பந்நரும் சம்புவுமாகியவரே ஆகாயமத்தியில் தியானிக்கற்பாலர்........மற்றெல்லாம் விடுத்து இன்பஞ் செய்பவராகிய சிவபிரானொருவரே தியானிக்கற்பாலர். அதர்வசிகை முற்றிற்று) என்றது அதர்வசிகை. இந்த வாக்கியங்களாற் சகல பாவனைகளும் சகல தர்மங்களும் பிரம விஷ்ணு இந்திராதி சகல தேவர்களுந் தள்ளப்படத் தக்கவர்களே யென்பதும், சிவபிரானொருவரே மோக்ஷ சுகத்தைத் தருபவராதலின் அப்பொருட்டுச் சர்வாத்மாக்களாலும் எப்போதுந் தியானிக்கப்படத் தக்கவரென்பதும் வஜ்ரலேபமாகும்.

'தம்ஹ தேவ மாத்ம புத்தி ப்ரகாசம் முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே' (அந்த ஆத்ம புத்திப் பிரகாசனை தேவனை மோக்ஷத்தை விரும்பி யான் சரணமடைகின்றேன்) என்றும், 'தமேவம் விதித்வாதி ம்ருத்யு மேதி நாந்ய: பந்தா வித்யதேயநாய' (அவனை இவ்வாறறிந்தவர் மிருத்யுவைத் தாண்டுவர். வேறு வழி மோக்ஷத்துக்கில்லை) என்றும், 'விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா சிவம் சாந்தி மத்யந்தமேதி' (உலகமெல்லாஞ் சூழ்ந்து கொண்டிருக்கின்ற ஒருவரான சிவபெருமானை யறிந்து துக்கவொழிவைச் சம்பூர்ணமா யடைகின்றனன்) என்றும், 'ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:' தேவனை யறிந்தபோது எல்லாப் பாசங்களினின்று விடுபடுகிறான்) என்றும் சொன்னது சுவேதாசுவதரம். அவ்வாக்கியங்களிலுள்ள 'தேவனை', 'அவனை' யென்பன சிவனையே சுட்டுமென்பது அவ்வுபநிஷத்தைப் படித்தறிக. 'யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் கர்த்தா மீசம் புருஷம் ப்ரஹ்மயோநிம் | ததாவித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி' (எப்பொழுது பார்ப்பவன் பொன் வண்ணத்தினரும், கர்த்தரும், ஈசரும், புருஷரும் பிரமாவுக்குக் காரண ரூபருமாயுள்ளவரைப் பார்க்கின்றானோ அப்பொழுது அவன் ஜீவன் முக்தனாய்ப் புண்ணிய பாவத்தை யொழித்துக் களங்கமற்றவனாய்ச் சிவசாமியத்தை அடைகின்றான்) என்றது முண்டகம். 'ஜ்ஞாத்வாதம் ம்ருத்யு மத்யேதிநாந்ய: பந்தா விமுக்தயே' (அதை யறிந்து மிருத்யுவைத் தாண்டுவான். வேறுவழி மோக்ஷத்துக்கில்லை) என்றது கைவல்யம். 'தமக்ரதும் பச்யதி வீத சோகோ தாது:

ப்ரஸாதாந் மஹிமாநமீசம்' (தன்னுடைய மகிமைக்கு ஏதுவாயுள்ள அதனைக் கன்ம நீக்கமுள்ளோன் தனக்காதாரமான ஈசனது பிரசாதத்தினாற் சோகமில்லாதவனாய்க் காண்கின்றனன்) என்றது சரபம். 'பாச பத்தஸ் ததாஜீவ: பாச முக்தஸ்ததா சிவ:' (பாசத்தினாற் பந்திக்கப்பட்டிருக்கிறவரையில் ஜீவனாயிருக்கிறான். பாசத்தினிருந்து விடுபட்டால் அப்பொழுது சிவனாகிறான்) என்றது ஸ்கந்தம்: 'கோமோக்ஷோபாய:' (மோக்ஷோபாயம் எது?) என்று வினவி 'விபூதிதாரணே தேவ' (விபூதிதாரணமே அதற்குபாயம்) என்று விடுத்தது ஜாபால். 'தாபத்ரய ஸமுத்பூத ஜந்ம ம்ருத்யு ஜராதிபி: | நாநாவிதாநி துக்காநி ஜஹார பரமேச்வர:' (பரமேச்வரர் அத்தேவர்களுடைய தாபத்திரய ஜனன மிருத்தியு ஜரை முதலியவற்றாலுண்டான நாநாவித துக்கங்களையும் ஹரித்தருளினர்) என்றது சரபம். 'யதாசர்ம வதாகாசம் வேஷ்ட இஷ்யந்தி மாநவா: | ததாசிவ மவிஜ்ஞாய துக்கஸ்யாந்தோ பவிஷ்யதி' (எப்பொழுது மனிதர்கள் ஆகாயத்தைத் தோல்போலுரித்துப் போர்த்துக்கொள்வார்களோ அப்பொழுதுதான் சிவசேவையின்றித் துக்கமற்ற மோக்ஷத்தை அடைவார்கள்) என்றது சுவேதாசுவதரம். இந்த வாக்கியங்களாற் சிவபிரானே சர்வாத்மாக்களுக்கும் பாசநிவிர்த்தியும் மோக்ஷப் பிராப்தியும் அருள்வாரென்பது வஜ்ரலேபமாகும்.

நாதபிந்து 'ப்ரதமாயாம்து மாத்ராயாம் யதிப்ராணைர் வியுஜ்யதே பரதேவர்ஷ ராஷா ஸௌஸார்வபௌம: ப்ரஜாயதே|| த்விதீயாயாம் ஸமுத்க்ராந்தோ பவேத் யக்ஷோமஹாத்மவாந் வித்யாதரஸ்த்ருதீயாயாம் கந்தர்வஸ்து சதுர்த்திகா|| பஞ்சம்யாமத மாத்ராயாம் யதிப்ராணைர் வியுஜ்யதே | உஷித: ஸஹதேவத்வம் ஸோமலோகே மஹீயதே|| ஷஷ்ட்யா மிந்த்ரஸ்யஸாயுஜ்யம் ஸப்தம்யாம் வைஷ்ணவம்பதம் | அஷ்டம்யாம் வ்ரஜதே ருத்ரம் பசூநாம்சபதிம்ததா|| நவம்யாம்து மஹர்லோகம் தசம்யாம் து ஜநம் வ்ரஜேத் | ஏகாதச்யாம் தபோலோகம் த்வாதச்யாம் ப்ரஹ்ம சாச்வதம்|| தத: பாதரம் சுத்தம் வ்யாபகம் நிர்மலம் சிவம் | ஸதோதிதம் பரம் ப்ரஹ்ம ஜ்யோதிஷா முதயோ யத:|| அதீந்த்ரியம் குணாதீதம் மநோலீநம் யதாபவேத் அநூபமம் சிவம் சாந்தம் யோகயுக்தம் ஸதாவிசேத்' (முதலிற் பரதவர்ஷம், இரண்டாவது யக்ஷலோகம், மூன்றாவது வித்யாதரலோகம், நான்காவது கந்தர்வலோகம், ஐந்தாவது ஸோமலோகம், ஆறாவது இந்திரலோகம், ஏழாவது விஷ்ணுலோகம், எட்டாவது ருத்ரலோகம், ஒன்பதாவது மஹர்லோகம், பத்தாவது ஜநோலோகம், பதினொன்றாவது தபோலோகம், பன்னிரண்டாவது பிரம்மசாச்விதம். எல்லாவற்றின்மேலும் சிவகதி) என்றது. இவ்வாக்கியம் உலகங்களைக் கீழிருந்து மேல்நோக்கி வரிசைப் படுத்தி உச்சியிற் சிவபதத்தை வைத்து வேறுவாக வர்ணித்துள்ளது. மண்

டலப்ராஹ்மணம் 'தம்மநோ விலயம் யாதி தத் விஷ்ணோ: பரமம் பதம் | தல்லயாச் சுத்தாத் வைத ஸித்திர் பேதா பாவாத்' (மனோ லயமுண்டானபோது விஷ்ணுவின் பரமபதமெய்தும்: அப்பதம் லயமானபோது சுத்தாத் வைதஸித்தி யுண்டாம்) என்றது. இதில் அச்சிவபதத்துக்குச் சுத்தாத் வைதஸித்தி யென்ற பெயர் வந்தது. மாயாவாதம் கேவலாத் வைதமெனவும் வைஷ்ணவம் விசிஷ்டாத் வைதமெனவுமேபடும். சைவ சித்தாந்தமே சுத்தாத் வைதமாகும். "இவ்வத்துவிதம், ஏனையோர் கூறும் அத்துவிதம் போலக் கேவல மென்றாதல், விசிட்டமென்றாதல், மறுதலே யென்றாதல் யாதானு மொன்றான் விசேடிக்கப்பட்டுநின்றுபொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த்துதலிற் சுத்தாத்துவிதமென வழங்கப்படும். ஈண்டுச் சுத்த மென்றது யாதானுமொன்றான் விசேடிக்கப்படாது நிற்றலே; அது 'விசிட்ட சத்தை', 'சுத்தசத்தை' எனத் தார்க்கிகர் கூறும் வாய்பாட்டானு மறிக. ஏனையோர் கூறும் அத்துவிதம் கேவலமுதலியவற்றான் விசேடிக்கப்படாதவழி அவர் கூறும் பொருடருதற் கேலாமையின் அவை யெல்லாஞ் சுத்தாத்துவித மாகாமையுங் காண்க" என்றது ஸ்ரீ சிவஞான மஹா பாஷ்யம். வைகுண்டம் அழியா முத்தியாகுமானுல், மேற்கண்ட உலகவரிசை யில்இடைப்படுதலும் லயமுடைத்தெனப்பழிக்கப்படுதலும் அதற்கு வர நியாயமில்லை. தேஜோபிந்து 'ந ப்ரஹ்ம லோகோ வைகுண்டோ ந கைலாஸோ ந சாங்யத:' (பிரமலோகம் வைகுண்டம் கைலாஸம் எல்லாம் அநித்யம்) என்றதாலும் வைகுண்டத்துக்கு நாசமுண்மை சித்தம். இதிலுள்ள கைலாஸம் மேல் உலகவரிசையில் எட்டாவ தாய் நின்ற ருத்ரபதமேயாம்: பன்னிரண்டன் மேலாய் நின்ற வைதிக சைவ முத்தி பதமன்று. கைலாசங்கள் பலவுளவென்பது 'இங்கே, கைலாஸ மென்று ஒன்று சொல்லப்பட்டிருக்கிறது. அது குபேரனுடைய ஸ்தானம்' என்ற உத்யோகம் 111-வது அத்தி யாயத்தாலும் விளக்கம். அப்படியே வைகுண்டமும் பலவாத லுண்டென்பதற்குப் பிரமாணங் கிடையாது. நிற்க, முண்டகமும் தியாநபிந்துவும் 'ப்ரணவோ தநுச் சரோஹ் யாத்மா ப்ரஹ்ம தல் லக்ஷ்ய முச்யதே' என்று கூறிச் சர்வாத்மாக்களும் பரமசுகத்தின் பொருட்டுப் போய்ச்சேரவேண்டிய லக்ஷ்யம் ப்ரஹ்மபதமே யென் கின்றன. ருத்ரஹ்ருதயமும் அக்கருத்தையே 'தநுஸ்தாரம் சரோஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்ய முச்யதே' என்ற அடியால் தெரித்து, 'சிவ லக்ஷ்யம் நஸம்சய:' என்று அந்த லக்ஷ்யமாகிய ப்ரஹ்ம பதம் சிவபதமே யென்றும் அதிற் சந்தேகமே வேண்டா மென்றும் வலியுறுத்தியுளது. மண்டலப்ராஹ்மணம் அந்த லக்ஷ் யத்தை 'அந்தர் லக்ஷ்யம்......உமாஸஹாயம் நீலகண்டம் ப்ரசாந்த மந்தர் லக்ஷ்யம்', 'ஸர்வேசம்......சிவம்......ஏகலக்ஷ்யம்' என்று

சிவநாமங்களாலேயே விளக்கிப்போதல் காண்க. இன்னும் த்ரிபாத் விபூதி மஹாநாராயணம் 'குணாதீத சுத்த ஸத்வ மயோ ......வைகுண்ட:.......' என்றது. இதனால் வைகுண்டம் குணாதீதமும் சுத்த சத்வ மயமுமாமென்பது தெரிகிறது. இவ்விடத்தில் குணாதீத மென்பதற்குக் கெட்ட குணங்கள் கலவாதது என்றவளவிற் பொருள்படும். கெட்ட குணங்களாவன ராஜஸமும் தாமஸமுமாம். ஸத்வ மொன்றே நல்ல குணம். சத்வமென்பதும் சுத்த சத்வமென்பதும் ஒன்றே. சுத்த பதம் ஆண்டு ஒரு விசேடணமுங் குறியாதது. ஆகவே வைகுண்டம் ஸத்வமயமான பதமென்னும் பூர்வபட்சம். ஆனால் ந்ருஸிம்ஹோத்தரதாபினி 'அஸத்வமராஜஸ்க மதமஸ்க மமாய மபயம்' என்று ஸத்வத்தையும் நிந்திக்கின்றது. 'குணத்ரய மதீதம்' என்ற யோகசிகையும், 'குணத்ரயாதீத:' என்ற கணபதியும், 'த்ரிகுண ரஹிதம்' என்ற சுகரஹஸ்யமும் ஸத்வத்தை மற்ற இரு குணங்களோடு சேர்த்து ஒதுக்கியதறிக. அத்தகைய ஸத்வமய வைகுண்டத்தைத்தான் அம்மஹாநாராயணம் வெகுவிதமாக வர்ணித்தது. அவ்வர்ணனை மெல்லாம் அப்பதத்துக்குத் தன்னிற் கிழிட்ட பதங்களை நோக்க வாஸ்தவமும் மேலிட்ட ருத்ரபதமுதற் சிவபதம்வரை நோக்க உபசாரமுமாமென்க. அன்றியும் 'வைகுண்டம் ஸ்வர்கவாஸிநாம்' என்று வைகுண்டத்தை இந்திரலோக முதலிய சுவர்க்கங்களோடு சேர்த்துத் தள்ளியது க்ருஷ்ணம். அவ்வுபநிஷத்துத்தானே விஷ்ணுவை நோக்கி 'ஸாக்ஷாத் மாயா விக்ரஹ தாரண:' என்றும், த்ரிபாத் விபூதி மஹா நாராயணம் 'மாயோபாதிகோ நாராயண ஆஸீத்' என்றுங் கூறின. அவற்றால் விஷ்ணு மாயாசரீரி யென்பதுந் தெளிவு. அங்ஙனமாக அவனுலக மாத்திரம் அமாயமாயிருப்பது யாங்ஙனம்? ஆகவே மோக்ஷம் சிவபதமொன்றே யன்றி வைகுண்டமாதி வேறெவையு மன்றென்பது வஜ்ரலேபமாகும்.

இந்நிரூபணத்தில் எடுத்தாளப்பட்ட சுருதி வசனங்களனைத்தும் மேலுண்மைக்கு மூலவசனங்கள்.

இனி அவ்வுண்மை பற்றிய ஆக்ஷேப சமாதானங்கள் வருமாறு:—

1. ஆ:— விஷ்ணு பதமொன்று தவிர மற்றைப் பதங்களெல்லாம் அழிவுடையன. ஆகலின் விஷ்ணுவே நித்தியமோக்ஷத்துக்குக் கர்த்தா.

ச:— விஷ்ணுபதம் அழிவுடையதென்று மேற் சுருதியாற் காட்டப்பட்டது. எந்தப் பதங்களிற் சென்றவர்க்கு உலகை நோக்கி மீளத்திரும்புதலுண்டோ அந்தப் பதங்களே அழிவுடை

யன. எந்தப் பதத்திற் சென்றவர்க்கு அம்மீட்சியில்லையோ அந்தப் பதமே நித்தியமுக்திஸ்தானம். பாரதத்தில் ஆச்வமேதிக பர்வத்தில் வைஷ்ணவ தர்ம பர்வமென்றோருட்பகுதி யுண்டு. அதனை வியாஸப்ரோக்தமா இடைச் செருகலாவென்று சந்தேகிப்பர் சிலர். பூர்வபட்சத்துக்கு அது வியாஸப்ரோக்தமென்பதே கருத்து. அஃதப்படியே யிருக்கட்டும். ஆச்வமேதிகம் 101-வது அத்யாயம் '(அவன்) என்னுடைய உலகம் சென்று........கோடி வருஷம் விளையாடிக் கொண்டிருந்து....அவ்விடத்திலிருந்தும் நழுவி இவ்வுலகில் ......பிராமணனாகப் பிறப்பான்' என்றும், 103-வது அத்தியாயம் 'அவன் அறுபத்தாறாயிரம் வருஷம் என்னுடைய லோகத்தில் பூஜிக்கப்படுகிறான்; என்னுடைய உலகத்திலிருந்து இறங்கியும் இவ்வுலகில்.........பிராம்மணனாகப் பிறக்கிறான்', 'அவனும் ......என்னுடைய லோகத்தை அடைந்து அவ்விடத்தில் இஷ்டமான ரூபத்தை அடைந்து முப்பதுகோடி வருஷம்...... ஸந்தோஷமடைந்த பிறகு, இந்த மானிடலோகத்தில்.........பிராமணனாகப் பிறப்பான்', 'எவன் சித்தத்தை என்னிடத்தில் வைத்து அக்னிப் பிரவேசம் செய்கிறானோ அவனும்.........என்னுடைய உலகத்தை அடைந்து...... எப்பொழுதும் என்னையே தரிசித்து என்னுடைய ஸந்நிதியில் முப்பதுகோடி வருஷம் ஸந்தோஷமடைந்து, காலமானவுடன், அவ்விடமிருந்து இறங்கி......பிராமணனாகப் பிறப்பான்', 'எவன்......என்னைச் சரணமடைவனோ அவன்... ....என்னுடைய உலகத்தை அடைந்து கோடிவருஷம் ஸந்தோஷிக்கிறான்; என்னுடைய உலகத்திலிருந்து இறங்கியும் இவ்வுலகில் அரசனாகப் பிறப்பான்' என்றும் சொல்லின. இவைகளெல்லாம் அங்குக் கிருஷ்ணனுடைய வாக்கியங்களாகும். இவற்றால் வைகுண்ட பதவியிற் சென்றவர்க்கு மீளவும் இவ்வுலகிற் பிறப்புண்டென்பது நிச்சயமாயிற்று. ஆகவே விஷ்ணு நித்ய முக்தியருள்பவ ரென்பது பொய்ப்பட்டது.

2. ஆ:— சகலருக்கும் மோக்ஷங் கொடுக்க வல்லார் விஷ்ணுவே.

ச:—விஷ்ணுமந்திரங்களுக்குள்ளே அஷ்டாக்ஷரம்மேலானது. ஓம் நமோ நாராயணாய என்பதே அது. அதில் ஓம் நீங்கினால் சப்தாக்ஷரமே எஞ்சும். ஓம் என்பது பிரணவ மந்திரம். அதைச் சர்வஜாதி ஸ்திரீகளும் சூத்திர புருஷர்களும் உச்சரித்தல் கூடாது. ஆகவே அவ்வஷ்டாக்ஷர ஜபம் சகலரும் ஜபிப்பதற்கு யோக்கியமாதல் யாங்ஙனம்? அதனாற்றான் பிரபந்தம் 'அவன் பெய—ரெட்டெழுத்து மோதுவார்கள் வல்லார் வான மாளவே' என்று அவ்வெட்டெழுத்தைக் கணக்களவிற் சம்மதித்து உச்சரிப்பளவில் விட்டதுபோலும். 'நாடு நகரமு நன்கறிய நமோ நாராயணாய

வென்று—பாடுமன முடைப்பத்தர்', 'நால்வகையால் நமோ நாரா யணா வென்று நாமம் பலபரவி', 'நமோ நாரணா வென்னுஞ் சொன் மாலை' என்று எழு ஆறு ஐந்தெழுத்துக்களே ஆண்டு உச்சரிக்கப் படுகின்றன. 'ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோ பாஸகோ வைகுண்ட புவநம் கமிஷ்யதி' என்ற நாராயணம் த்விஜ புருஷர் களுக்கே சாதநமாம். அன்றியும் ஆச்வமேதிகம் 118-வது அத்தி யாயம் 'சூத்திரர்கள் பாகவதர்களென்று வீணாகச்சொல்லிக் கொள் ளுகிறார்கள். சூத்திரர்கள் பகவானுடைய பக்தர்களல்லர் பிராம் மணர்களேபாகவதர்களென்றுகருதப்பட்டிருக்கின்றனர்' என்றது. அதனைக் கண்ட சூத்திரர் விஷ்ணுவிடம் மோக்ஷம்பெற இச்சித்த லும் அதற்காக வைஷ்ணவராதலும் செய்வாரா? 'போற்றி மற் றோர் தெய்வம்' என்ற பிரபந்தப் பாட்டும் விஷ்ணு சகலருக்கும் மோக்ஷங் கொடுக்கவேண்டுமென்ற கருணையுடையவரல்ல ரென்ப தைக் காட்டுவது மேல் விளக்கப்பட்டது.

3. ஆ:—விஷ்ணுவே பரம்பொருளென்று சாதிக்குஞ் சுவடி கள் எண்ணிறந்தனவாயிருக்கின்றனவே. சிவனை அவருக்குக் கீழ்ப்பட்டவனென்றும் அவைசொல்லும். அந்த நூல்களெல் லாம் பொய்யா? ஆயின் அவைகட்குக் கதியென்ன?

ச:— ஆச்வமேதிகம் 98-வது அத்தியாயம் 'நராதமர்களான எவர்கள் என்னையாவது சங்கரரையாவது......ஆச்ரயிக்கவில்லையோ அந்த மனிதர்கள் வீணாக ஜீவித்திருக்கின்றனர்' என்பதூம், 100-வது அத்தியாயம் 'எவர்கள் என்னையாவது...முக்கண்ணரை யாவது உறுதியான பக்தியுடன்...பூஜித்து நமஸ்கரித்து ஸ்தோத் திரம் செய்கிறார்களோ அவர்கள்...கர்மலோகத்திற்காவது ருத்திர லோகத்திற்காவது...செல்லுகின்றனர்' என்பதூம், 103-வது அத்தி யாயம் 'எவன் என்னை ஆச்ரயித்து... என்னுடைய மூர்த்தியிலாவது ......ருத்திரருடைய தக்ஷிணாமூர்த்தியிலாவது ஆத்மாவைப் பிரவே சிக்கும்படி செய்கிறானோ......அவன்......என்னையாவது சங்கரரை யாவது அடைவான்......அவனுக்குத் திரும்பவும் பிறப்பு உண் டாகாது' என்பதூம், 106-வது அத்தியாயம் 'எவன்......என் னுடைய விக்ரஹத்தையாவது சங்கரருடைய விக்ரஹத்தை யாவது......அபிஷேகம் செய்கிறானோ அவன் அச்வமேதத்தின் பயனை அடைவான். அவன் பாவங்களிலிருந்து விலகியவனும் சுத்த மான ஆத்மாவை யுடையவனும் முக்தனுமாகி ......என்னுடைய உலகத்தையாவது ருத்ரருடைய உலகத்தையாவது அடைவான்' என்பதூம், 114-வது அத்தியாயம் 'அவன் தக்ஷிணாமூர்த்தியை யாவது, என்னையாவது......அடைவான்' என்பதும், 115-வது அத்தியாயம் 'எவன்......எனக்காவது சிவனுக்காவது......பூஜை செய்வானோ......அவன்... ..பாவம்......நசிக்கும்......அவன்......

என்னுடைய உலகத்தையாவது அடைந்து........', 'எவன்...... என்னுடைய ஆலயத்திலாவது சங்கரருடைய ஆலயத்திலாவது என்னுடைய காயத்ரியையாவது சங்கரருடைய காயத்ரியையாவது ஜபித்து, சங்கம் தூர்யம் வெண்கலமணி இவற்றின் ஒலிகளால் பக்தியுடன் ஒலிக்கச் செய்வனோ அவனுடைய புண்ணியத்தின் பயனைக் கேட்பீராக' என்பதும், 117-வது அத்தியாயம் 'நானும் சங்கரரும் கோக்களாகவும் பிராம்மணர்களாகவும் அச்வத்த விருக்ஷமாகவும் இருக்கிறோம்' என்பதும், 118-வது அத்தியாயம் 'என்னுடைய பக்தன் எப்பொழுதும் தீர்த்தம். சங்கரருடைய (பக்தன்) விசேஷமான (தீர்த்தம்)' என்பதும் கிருஷ்ணருடைய வாசகங்களாய் மிளிர்கின்றன. இப்பிரமாணங்களனைத்தும் வைஷ்ணவ தர்ம பர்வப் பகுதி. இவற்றால், சிவபிரானை நிந்தியாத விஷ்ணு பரத்வ நிரூபண நூற்களே வைஷ்ணவ தர்ம சாத்திரங்களாதற் குரியனவென்பது வெளிப்பட்டது. அவைகளே சோபானக் கிரமத்தில் ஸஜ்ஜனரால் அங்கீகரிக்கப்படுவன. சந்திரன் பிரபல பிரகாசமுடையது என்பது அதனை நக்ஷத்திரங்களோடு ஒத்துப் பார்க்குங் காலத்தில் மட்டும் வாஸ்தவமாகும். அப்படியே விஷ்ணு பரம்பொருளென்பதும் அவரைப் பிரமன் இந்திரன் முதலிய கீழிட்ட தேவர்களோடு ஒத்துப்பார்க்குங் காலத்திற்றான் வாஸ்தவமாகும். சந்திரன் பிரபல பிரகாசமுடையது என்பது சூரியன் முன் பொய்யாய் முடியும். அப்படியே விஷ்ணு பரம்பொருளென்பதும் சிவ சந்நிதியிற் பொய்யேயாம். சூரியன் பிரபல பிரகாசமுடையது என்பது யாண்டும் பொய்யாகாது. அப்படியே சிவபிரான் பரம்பொருள் என்பதும் யாண்டுங் கலங்காத வுண்மையாம். விஷ்ணு முதலிய வேறெந்த தேவதாபர நூல்களிலாயினும் சிவநிந்தாப் பிரசங்கம் லவலேசங் காணப்படுமாறாலும் அந்நூல்களை யெல்லாம் ஒன்றும் விடாமல் நெருப்பிலிட்டுக் கொளுத்திச் சாம்பராக்கிக் காற்றிற் றூற்றிவிடவேண்டும். இது சுருதி சித்தமான பரம சத் கைங்கரியமாகும். 'திக்வித்யா மசிவாச்ரயாம்' (சிவபிரானை ஆசிரயியாத சாத்திரங்களைச் சுட்டுவிடு) என்று உத்கோஷிக்கின்றது ப்ருஹஜ்ஜாபாலம்.

சுலோக பஞ்சக விஷயம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 18 | தேவஸ்ப | தேவஸ்ய |
| ,, | 35 | ஆவ்வாரய்ச்சி | அவ்வாராய்ச்சி |
| 5 | 34 | பாஷாண்ட | பாஷண்ட |
| 6 | 17 | சக்கர | சக்ர |
| 12 | 1 | க்ருஹே | க்ருஹே க்ருஹே |
| 21 | 20 | வலது | இடது |
| 22 | 15 | வலது | இடது |
| 25 | 16 | சக்கரம் | சக்ரம் |
| ,, | 19 | ஆதிக்யா: | ஆதித்யா: |
| ,, | 23 | அமிருகமய | அமிருதமய |
| 27 | 18 | ருத்தரரை | ருத்ரரை |
| 28 | 19 | அநுசாசனம் | அநுசாசனம் 45-ம் அத்தியாயம் |
| 29 | 21 | கந்தப்புரா | கந்தபுரா |
| 30 | 15 | : | :— |
| 31 | 27 | அநுசாஸம் | அநுசாஸனம் |
| 34 | 37 | விமேஹிதௌ | விமோஹிதௌ |
| 37 | 21 | செய்தது | செய்தவர் |
| 38 | 34 | நாமத்துக்கும் | நாமத்துக்குப் |
| 40 | 18 | உள் | உள |
| 42 | 27 | அவருக்குப் | அம்முனிவருக்குப் |
| 45 | 28 | திஷ்ட \| ருத்ர: | திஷ்ட திஸம்சுகோசாந்தகாலே ஸம்ஸ்ருஜய ... தஸ் மா துச்யத ஏகோருத்ர: |
| 47 | 11 | யஜ்ஞுயமு | யஜ்ஞமு |
| ,, | 26 | பரஹஸ்ய | பரம ரஹஸ்ய |
| 48 | 3 | தந்தனென | தந்தகென் |
| 50 | 25 | திஸ்ர: | திஸ்ர: புர: |
| ,, | 34 | சந்திரனை | வாயுவை |
| 51 | 16 | யகாத் | யதாத் |
| ,, | 24 | \| ) | \| |
| ,, | 27 | \| \| | \| |
| ,, | 37 | சாநவா | சாமாநவா |

| | | | |
|---|---|---|---|
| 52 | 14 | யென்பதும் அப்பிரானுக்கு | யென்பதும் அப்பசுபதி சிவபிரானே யென்பதும் அப்பிரானுக்கு |
| ,, | 22 | ருத்ந | ருத்ர |
| 63 | 10 | ஜயத் | ஜயித் |
| 65 | 36 | விஷ்ணு | விஷ்ணூ |
| 69 | 16 | பயன் | பயனை |
| ,, | 30 | அநுசாஸனம் | அதனையும் அநுசாஸனம் |
| 75 | 7 | பரமசிமனைப் | பரமசிவனைப் |
| ,, | 17 | கொடுத்தார் | கொடுத்தார்' |
| 77 | 28 | விக்கிரகத்தில் | விக்கிரகத்தில். |
| ,, | 29 | ஆவாகித்து | ஆவாகித்து. |
| ,, | 34 | விக்கிரகத்தின்முன் | விக்கிரகத்தின்முன். |
| 81 | 12 | செய்கல் | செயல்க |
| 82 | 1 | வரசுரன் | வசுரன் |
| 83 | 11 | அபார்ப்பது | பார்ப்பது |
| ,, | ,, | துவும் | அதுவும் |
| 84 | 10 | அங்ஙன | அங்ஙனம் |
| 88 | 17 | என்னையே | என்னையே என்னையே |
| 89 | 29 | முனிகர் | முனிர் |
| 91 | 7 | ஸமா | ஸபா |
| 97 | 6 | னிமலன்" | னிமலன்', ' |
| " | 32 | பிழைப்பட்ட | பிழைபட்ட |
| 108 | 18 | வரர் | வரா |
| 109 | 22 | என்றது. | என்றது நாராயணம். |
| 111 | 7 | யயிர் | யுயிர் |
| 124 | 1 | லக்ஷணங்களு | லக்ஷணபதங்களு |
| ,, | 28 | எல்லா | (எல்லா |
| ,, | 29 | சிரஸாம் | சிரஸாம். |
| 126 | 8 | சம்பந்நரும் | சம்பந்நரும் சர்வேசுவரரும் |
| ,, | 26 | தேவனை | (தேவனை |
| 127 | 21 | ராஷா | ராஜா |
| ,, | ,, | பௌம்: | பௌம: |
| ,, | 23 | சதிர்த்திகா | சதுர்த்திகா |
| ,, | ,, | யாமத | யாம்த |
| 128 | 21 | சார்யத: | சார்யக: |

# இந்நூலில் எடுத்தாளப்பட்ட உபநிஷத்துக்கள்.

1. மைத்ராயணி
2. திரிபுராதாபினி
3. பிருஹதாரண்யகம்
4. முண்டகம்
5. ஜாபாலம்
6. கௌஷீதகிப்ராஹ்மணம்
7. தைத்தீரீயம்
8. பாசுபதப்ரஹ்மம்
9. பிரம்வித்
10. நிருஸிம்ஹபூர்வதாபினி
11. நிருஸிம்ஹ உத்தரதாபினி
12. நாராயணம்
13. சாந்தோக்கியம்
14. கைவல்யம்
15. பஸ்மஜாபாலம்
16. பிரஹ்மம்
17. சுவேதாசுவதரம்
18. மண்டலப்ராஹ்மணம்
19. பிருஹஜ்ஜாபாலம்
20. ராமரஹஸ்யம்
21. சரபம்
22. ருத்ரஹ்ருதயம்
23. அம்ருதநாதம்
24. தேஜோபிந்து
25. நாரதபரிவ்ராஜகம்
26. பிராணக்னிஹோத்ரம்
27. மைத்ரேய்
28. பைங்கலம்
29. தியாநபிந்து
30. திரிபாத்விபூதிமஹாநாராயணம்
31. அந்நபூர்ணம்
32. கடருத்ரம்
33. கபாலம்
34. மஹத்
35. அதர்வசிரஸ்
36. தக்ஷிணாமூர்த்தி
37. பஞ்சப்ரஹ்மம்
38. ஸ்கந்தம்
39. ஜாபால்
40. நாதபிந்து
41. நிராலம்பம்
42. கிருஷ்ணம்
43. நிர்வாணம்
44. அதர்வசிகை
45. ஏகாக்ஷரம்
46. மாண்டூக்யம்
47. ராமோத்ரதாபினி
48. அத்வயதாரகம்
49. யோகசிகை
50. கலிஸந்தாரணம்
51. சுகரஹஸ்யம்
52. யோகசூடாமணி
53. சாண்டில்யம்
54. வராஹம்
55. கணபதி
56. முக்திகம்

ஸ்ரீமத் ஹரதத்த சிவாசாரிய சுவாமிகள் அருளிய.

சுலோக பஞ்சகம் என்னும்

# பஞ்ச ரத்நமாலிகை.



(I.) 1. காயத்ரீ வல்லபத்வாத் 2. தசரத தநய ஸ்தாபி தாராதி தத்வாத் 3. சௌரே: கைலாஸ யாத்ரா வ்ரதமுதித தயாபீஷ்ட ஸந்தானதாநாத் 4. நேத்ரேண ஸ்வேநஸாகம் தசசதகமலைர் விஷ்ணுநா பூஜிதத்வாத் 5. தஸ்மை சக்ர ப்ரதாநாத் அபிச பசுபதிஸ் ஸர்வ தேவ ப்ரக்ருஷ்ட:

(II.) 6. கந்தர்ப்ப த்வம்ஸகத்வாத் 7. கரள கபளநாத் 8. கால கர்வா பஹத்வாத் 9. தைதேயா வாஸபூதத்ரிபுர விதளநாத் 10 தக்ஷயாகே ஜயித்வாத் 11 பார்த்தஸ்ய ஸ்வாஸ்த்ர தாநாத் 12. நரஹரி விஜயாத் 13. மாதவேஸ்த்ரீ சரீரே சாஸ்தஸ் ஸம்பாதகத்வாத் அபிச பசுபதிஸ் ஸர்வதேவ ப்ரக்ருஷ்ட:

(III.) 19. வாராணஸ்யாஞ்ச பாராசரி நியமி புஜஸ்தம்பநாத் 20. ப்ராக்புராணும் ப்ரத்வம்ஸே கேசவே நாச்ரித வ்ருஷவபுஷா தாரிதக்ஷ்மாதலத்வாத் 21. அஸ்தோகைர் ப்ரஹ்ம சிர்ஷை ரதிசகள க்ருதாலங்க்ரியா பூஷிதத்வாத் 22. நாநாத் ப்ரஜ்ஞாந முக்த்யோ ரபிச பசுபதிஸ் ஸர்வதேவப்ரக்ருஷ்ட:

(IV.) 14. பூமௌலோகை ரநேகைஸ்ஸததவிரசிதாராதி தத்வாத் 15. அமீஷா மஷ்டைச்வர்ய ப்ரதாநாத் 16. தசவித வபுஷாகேசவே நாச்ரி தத்வாத் 17. ஹம்ஸக்ரோடாங்க தர்ரித்ருஹிண முராஹராந் விஷ்ட சிர்ஷாங்க்ரிகத்வாத் 18. ஜந்மத் வம்ஸாத் யபாவாத் அபிச பசுபதிஸ் ஸர்வதேவப்ரக்ருஷ்ட:

(V.) வைசிஷ்ட்யே யோநி பீடாயிதமுராரி புச்லிஷ்ட பாவேந சம்போஸ் ஸஸ்த்ரீ கார்த்த ப்ரதீகாயித ஹரவபுஷா லிங்கதத்வேந யத்வா அப்ராதாந்யாத் விசிஷ்டாத்வய ஸமயிகமே தாநவாநாம ராதேச் சம்போருத்க்ருஷ்ட பாவாதபிச பசுபதிஸ் ஸர்வதேவ ப்ரக்ருஷ்ட:

முற்றும்.